# அழகின் ஆதாரம்
# உங்கள் **சருமம்** தான்



## உங்கள் வதனத்திற்கு பாதுகாப்பும், அழகும் அளியுங்கள்

வெப்பம், குளிர், ஈரம், வறட்சி, வெய்யில், புழுதி இவைகளிலிருந்து தான் நம் நாட்டில் உங்கள் சருமத்தைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும். மிதமிஞ்சிய சீதோஷ்ண நிலைகளிலிருந்து உங்கள் சருமத்தை பாதுகாத்து அழகுபடுத்துவதற்கென்றே ஹிமாலயா புக்கெ ஸ்னோ பிரத்தியேகமாக தயாரிக்கப்பட்டுள்ளது. அதை தினமும் உபயோகித்து உங்கள் சருமத்தை மென்மையாகவும் தெளிவாகவும் வைத்துக்கொள்ளுங்கள். பௌடர் பூசிக்கொள்வதற்குமுன் அதை உபயோகிக்க மிகவும் பிரியப்படுவீர்கள். நீங்கள் அதன் நறுமணத்தையும் விரும்புவீர்கள்.






# ஹிமாலயா புக்கெ ஸ்னோ

இன்னுமொரு நேர்த்தியான **இராஸ்மிக்** தயாரிப்பு

HBS. 9-50 TM

இராஸ்மிக் லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது

# கல்கி பொருளடக்கம்

மலர் 13 இதழ் 3 | 1953 ஆகஸ்டு 16 | விஜய ஆடி 32உ



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# முதல் பாதுகாப்பு..

கிராமாந்திரங்களில் இரவு வேளைகளில் வெளிச்சத்துக்காக எரிக்கப்படும் தீவட்டியிலிருந்து சிதறும் ஒரு சிறிய பொறி, வைக்கோல் போருக்கும் பண்டகசாலைகளுக்கும் மற்றும் வேலைசெய்யும் மக்களுக்கும் படுநாசத்தை விளைவிக்கலாம்.

“எஸ்ட்ரேலா” பாட்டரி பொருத்திய அழகியதொரு ‘டார்ச்’ மிகவும் பந்தோபஸ்துடன் உங்களுக்குப் போதிய வெளிச்சத்தை அளித்து மிகவும் சிக்கனகரமாகவும் இருக்கிறது. இன்றே ஒரு ‘டார்ச்’ உபயோகிக்கத் தொடங்குங்கள். ஆனால் வாங்கும்போது “எஸ்ட்ரேலா” பாட்டரி பொருத்தப் பட்டிருக்கிறதா என்று மட்டும் பார்த்து வாங்கவும், அது பிரகாசமாகவும், நீண்ட காலம் உழைப்புக்கும் பெயர் பெற்றது.



## இருளுக்கு உற்ற நண்பன்







பாட்டரிகள்

பிரகாசமான வெளிச்சம்

நீடித்த உழைப்பு

பிரதி வருஷமும் மூன்று கோடிக்கு மேலான ‘செல்’கள் தயாரிக்கப்பட்டு விற்பனையாகின்றன

**எஸ்ட்ரலா பாட்டரீஸ் லிட்., பம்பாய்-19**

கல்கத்தா • டில்லி • சென்னை • கான்பூர் • நாகபுரி




மலர் 13 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 3

# காஷ்மீர் புதிர் அவிழ்ந்தது!

காஷ்மீரில் பல மாதங்களாக உள்ளூறக் குமுறிக் கொண்டிருந்த அரசியல் எரிமலை சென்ற வாரம் குபீரென்று வெடித்தது.

காஷ்மீர் பிரதம மந்திரி ஷேக் முகமது அப்துல்லாவை, சதர் இ ரியாஸத் (காஷ்மீர் யுவ ராஜா) கரன் சிங் பதவியிலிருந்து விலக்கி விட்டார்.

ஸ்ரீ கரன் சிங்கின் கட்டளைக்கு இணங்க, காஷ்மீர் சர்க்கார் உதவிப் பிரதம மந்திரி பக்ஷி குலாம் முகமது பிரதம மந்திரி பதவியை ஏற்று, புதிய மந்திரி சபையையும் அமைத்தார்.

ஷேக் அப்துல்லாவும் மற்றொரு மந்திரியான மிர்சா அப்சல் பெக்கும் பக்ஷி குலாம் முகமது சர்க்காரால் கைதியாகிக் காவலில் வைக்கப்பட்டனர்.

ஏழு தினங்களுக்கு முன் காஷ்மீரில் மேற்படி சம்பவங்கள் ஒன்றன்பின் ஒன்றாக மின்னல் வேகத்தில் நடைபெற்றன.

சிறிது காலமாக ஷேக் அப்துல்லா நிகழ்த்தி வந்த பிரசங்கங்கள் காஷ்மீரிலும் இந்தியாவிலும் மக்களிடையே குழப்பத்தை உண்டாக்கி இருந்தன. அவரது பேச்சுகள் புதிர் போலவும் முன்னுக்குப் பின் முரணாகவும் இருந்தன.

ஆனால் இப்போது காஷ்மீரில் நிகழ்ந்துள்ள சம்பவங்கள் அந்தப் புதிரைத் தெளிவாக்கி யிருக்கின்றன.

ஷேக் அப்துல்லா விஷமிகளின் விபரீதமான ஆலோசனைக்குச் செவி சாய்த்ததே, தற்போதைய நெருக்கடிக்குக் காரணம் என்று ஜவாஹர்லால் நேரு இந்தியா பார்லிமெண்டில் கூறியுள்ளார்.

இப்போது காஷ்மீரில் எழுந்துள்ள நிலைமை காஷ்மீர் மக்களும் பிரதிநிதிகளும் முடிவு செய்துகொள்ள வேண்டிய உள்நாட்டு விஷயம்; எனவே, அதில் இந்தியா தலையிடுவதற்கில்லை என்றும் ஜவாஹர்லால்ஜி குறிப்பிட்டிருக்கிறார்.

• • • •

காஷ்மீரில் ஜனநாயக முறைக்கு முரணாக எதுவும் நடைபெறவில்லை.

ஷேக் அப்துல்லா இந்தியா—காஷ்மீர் உறவு சம்பந்தமாகத் தமது கொள்கையை மாற்றிக் கொண்டு வந்தார். அவர் அவ்வாறு மாற்றிக் கொள்வதற்கு அவர் தமது மந்திரி சபையின் அங்கீகாரத்தைப் பெறவில்லை. காஷ்மீர் ஜனப்பிரதிநிதி சபையின் சம்மதத்தையும் கேட்கவில்லை.

அந்நிலைமையில் அவர் தமது மந்திரி சபையுடன் தாமும் ராஜிநாமா செய்து, தம்மை ஆதரிக்கக் கூடிய புதிய மந்திரி சபையை அமைப்பதுதான் ஜனநாயக ரீதியாக நியாயம் ஆகும்.

ஆனால் அவர் அவ்வாறு செய்யாமல், தமது சகாக்களில் ஒருவரான ஆரோக்கிய மந்திரி ஸ்ரீ ஷாம்லால் சராபை ராஜிநாமா செய்யும்படி கேட்டுக் கொண்டார். அதாவது மந்திரி சபையில் தமக்கு 'மெஜாரிட்டி' கிடைப்பதற்காக அவ்வாறு யுக்தி செய்தார்.

ஆனால் அவரது யுக்தி பலிக்கவில்லை. ஸ்ரீ ஷாம்லால் சராப் ராஜிநாமா செய்ய மறுத்து விட்டார்.

மந்திரி சபையில் ஏற்பட்ட பிளவைத் தீர்த்து, ஒற்றுமை நிலவும்படி செய்வதற்காக சதர் இ ரியாஸத் கரன் சிங் கூறிய நேர்மையான யோசனைகளையும் ஷேக் அப்துல்லா ஏற்றுக் கொள்ளவில்லை.

எனவே, ஷேக் அப்துல்லாவைப் பதவியிலிருந்து விலக்கிவிட்டு, கூட்டுப் பொறுப்பு உணர்ச்சியும் மெஜாரிட்டி பலமும் உள்ள புதிய மந்திரி சபையை அமைப்பதைத் தவிர கரன் சிங்கிற்கு வேறு வழி இராமற் போய் விட்டது.

• • • •

ஷேக் அப்துல்லா பிரதம மந்திரி பதவியிலிருந்து நீக்கப்பட்டுக் கைதியாகி யிருப்பது பாகிஸ்தானில் மிகுந்த ஆத்திரத்தை உண்டாக்கி யிருக்கிறது.

காஷ்மீர்மீது அக்கிரமமாகப் படை யெடுத்த ஆஸாத் காஷ்மீர் படைகளின் தலைவரும் பாகிஸ்தானின் வகுப்பு வாதப் பத்திரிகைகளும் ஏகோபித்து ஷேக் அப்துல்லாவை ஆதரித்திருக்கிறார்கள்; ஜனநாயக முறைகளுக்கு முரணின்றி ஏற்பட்டுள்ள மந்திரி சபையைக் கண்டித்திருக்கிறார்கள்; காஷ்மீர் மக்களின் ஜனநாயக உரிமையைப் பூரணமாக ஆதரிக்கும் இந்தியா மீது குற்றம் சாட்டி யிருக்கிறார்கள்.

ஷேக் அப்துல்லா விலக்கப்பட்டது நியாயம் என்பதற்கு அவர்களின் கூற்றே போதுமானது!

சில மாதங்களுக்கு முன் பாகிஸ்தான் கவர்னர் ஜெனரல் குலாம் முகமது, பாகிஸ்தான் அரசியல் நிலைமையைச் சீர்திருத்த என்ன முறைகளைக் கைக் கொண்டாரோ, அதே முறைகளைத்தான் இப்போது கரன் ஸிங் கைக்கொண்டிருக்கிறார்.

எனவே, காஷ்மீர் சம்பவங்கள் இந்தியா-பாகிஸ்தான் உறவை எவ்விதத்திலும் பாதிப்பதற்கில்லை.

# கொரியா பலி நின்றது

கொரியாப் போர் முடிந்து விட்டது; கொரியா தேசத்தில் சென்ற மூன்று ஆண்டுகளுக்கு மேலாக நிகழ்ந்து வந்த நரபலி நின்று விட்டது; கொரியாப் போர் முனையில் இடைவிடாது முழங்கி வந்த பீரங்கிகளின் வாய் அடைத்துப் போய் விட்டன.

சில தினங்களுக்கு முன் பான் முன்சாம் நகரில் கையெழுத்தான சமாதான ஒப்பந்தத்துக்கு இணங்க இந்தியப் பிரதிநிதிகள் அடங்கிய முன்னணிக் கோஷ்டி கொரியாவுக்குச் சென்றிருக்கிறது.

யுத்தக் கைதிகள் சம்பந்தமாக ஒப்பந்தத்தில் உள்ள நிபந்தனைகள் நிறைவேறும்படி பார்த்துக் கொள்வதற்காக இந்தியத் துருப்புகளும் சில நாட்களில் அந்த நாட்டுக்குச் செல்லும்.

ஒன்றரை மாதத்துக்கு முன்பே கொரியாப் போர் நிறுத்த ஒப்பந்தம் ஏற்பட்டு விட்டது. எனினும், கொரியாவின் ஜனாதிபதி என்று கூறப்படும் ஸிங்மன் ரீ என்பவரின் விஷமத்தனத்தினால் மேற்படி ஒப்பந்தம் கையெழுத்தாகாமல் தடைப்பட்டிருந்தது.

அதன் விளைவாக, அமெரிக்க ஜனாதிபதி ஜெனரல் ஐசன்ஹோவர், ஒப்பந்தத்துக்கு முட்டுக்கட்டை போடாமல் இருக்கும்படி ரீயைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டார். ரீயைச் சமாதானப்படுத்துவதற்காக ஜெனரல் ஐசன்ஹோவர் அமெரிக்க உள்நாட்டு உதவி மந்திரி வால்டர் ராபர்ட்சனையும் கொரியாவுக்கு அனுப்பி வைத்தார். இப்போது அமெரிக்க உள்நாட்டு மந்திரி ஸ்ரீ ஜான் பாஸ்டர் டல்லஸும், ரீயைச் சமாதானப்படுத்துவதற்காகக் கொரியாவுக்கு நேரில் சென்றுள்ளார்.

கொரியாவின் நாசத்துக்குக் காரணமான யுத்தத்தை நிறுத்துவதற்குக் கொரியா ஜனாதிபதியே தடையாக இருப்பது பரிதாபமான விஷயம். ரீயின் விபரீதமான புத்திக்கு மற்றொரு உதாரணமும் கூறலாம்.

கொரியா யுத்தம் சம்பந்தப்பட்ட வரையில் இந்தியா நடுநிலைமை வகித்தது. தென் கொரியா மீது வட கொரியா படையெடுத்ததை வன்மையாகக் கண்டிக்கவும் இந்தியா தயங்கவில்லை. கொரியா மக்கள் விஷயத்தில் அனுதாபம் கொண்டு அந்த யுத்தத்தை முடித்துச் சமாதானம் ஏற்படும்படி செய்யும் முயற்சியிலும் இந்தியா தீவிரப் பங்கு எடுத்துக் கொண்டது.

கொரியாப் பிரச்னை சம்பந்தமாகச் சில மாதங்களுக்கு முன் இந்தியா ஐக்கிய நாடுகள் சபையில் தீர்மானம் கொண்டு வந்தது நினைவிருக்கலாம். அநேகமாக மேற்படி தீர்மானத்தில் கண்ட ஷரத்துக்களே இன்று ஏற்பட்டுள்ள சமாதான ஒப்பந்தத்தில் இடம் பெற்றிருக்கின்றன.

அவ்விஷயமாக இந்திய சர்க்காரின் நடுநிலைமை நியாயத்தை ஒன்றுக்கொன்று நேர் மாறான கொள்கையுள்ள அமெரிக்காவும் ருஷ்யாவும் கூட அங்கீகரித்துள்ளன.

அப்படியிருந்தும் அவ்விஷயத்தில் இந்தியா நடுநிலைமை வகிக்கவில்லை என்று ரீ கூறுகிறாரெனில், அவரது அரசியல் 'மேதையை'க் குறித்து என்ன சொல்வது!

மிகச் சிறிய நாடான கொரியாவில் நிகழ்ந்த பயங்கரமான யுத்தம், எதிர் காலத்தில் மற்றொரு உலக மகா யுத்தம் ஏற்படுமாயின் அது இன்னும் எத்தனையோ மடங்கு அதிக கோரமாக இருக்கும் என்பதை உலகத்துக்கு உணர்த்தி யிருக்கிறது; மற்றொரு மகா யுத்தம் மூண்டு விடாமல் உலகத்தைக் காப்பாற்ற வேண்டியது எவ்வளவு அவசியம் என்பதையும் வலியுறுத்தி யிருக்கிறது.

# அங்கும் ஒரு விநாயகம் வேண்டும்!

தமிழ்நாட்டில் முருகனுடைய பக்தர்கள் நீண்ட வழிப் பிரயாணம் செய்ய நேரும்போதெல்லாம்,

"திருத்தணி முருகன்
வழித்துணை வருவான்"

என்ற மந்திரத்தைச் சொல்லிக்கொண்டு போவது வழக்கம். வெளிநாடுகளில் வனப்பிரதேசங்களிலே, தனிவழிகளிலே, பிரயாணம் செய்யும் முருகனடியார்களும் அதே மந்திரத்தை உச்சரிப்பார்கள்.

"நம்பினோர் கெடுவதில்லை
நான்கு மறை தீர்ப்பு"

என்று பாரதியார் பாடியுள்ளபடி, முருகனிடம் நம்பிக்கை வைத்திருப்பவர்களுக்கு முருகனே வழித்துணையாக வந்து காப்பாற்றுவான் என்று சொல்லப்படுகிறது. அதற்குப் பல உதாரண நிகழ்ச்சிகளையும் எடுத்துக் காட்டுவார்கள்.

இரண்டு வாரங்களுக்கு முன்பு திருத்தணியில் ஆடிப்பூர மகோத்சவம் நடைபெற்றது. மூன்று லட்சம் முருகனடியார் இந்த உற்சவத்துக்கு வந்திருந்தார்கள். அவர்களில் 23,000 பக்தர்கள் புஷ்பக்காவடி எடுத்துக் கொண்டு வந்தார்களாம். கண்கொள்ளாக் காட்சியாக இருந்ததாம். தினப் பத்திரிகைகளில் இது பற்றிய விவரங்களும் படங்களும் வெளியாகி யிருக்கின்றன.

நாட்டில் நாத்திகப் பிரசாரம் தீவிரமாக நடக்கும் போதுதான் மக்களின் பக்தி உணர்ச்சியும்

பொங்கித் ததும்பிப் பூரண வெள்ளமாகப் பெருகி ஓடும் என்று சரித்திரத்தில் படித்திருக்கிறோம். அதை இப்போது பிரத்யட்சமாகக் காணகிறோம். தமிழ் நாட்டில் இந்த வருஷம் அநேக ஆலயங்களுக்குத் திருப்பணி பூர்த்தி செய்து கும்பாபிஷேகம் நடத்தினார்கள். இந்தக் கும்பாபிஷேக வைபவங்களுக்கும் வழக்கமாக நடைபெறும் ஆலய உற்சவங்களுக்கும் வழக்கத்தைக் காட்டிலும் அதிகமான பக்தர்கள் இவ்வாண்டில் கூடினார்கள். நாட்டில் நடந்து வரும் நாத்திகப் பிரசாரத்தின் பயன் இவ்வாறிருக்க.



ஸ்ரீ கே. விநாயகம்

திருத்தணியில் ஆடிப்பூர உற்சவத்துக்கு வந்திருந்த மூன்று லட்சம் பக்தர்களைச் சிறிது கவனித்துப் பார்த்திருந்தால், அவர்களில் மிகப் பெரும்பாலோர் தமிழர்கள் என்பது தெளிவாகத் தெரிந்திருக்கும்.

தமிழ்த் தெய்வமும் தமிழர்களின் வழித்துணையுமான முருகன் கோயில் கொண்டிருக்கும் திருத்தணித் தலம் தமிழ் நாட்டைச் சேர்ந்தது என்பதில் ஐயம் எதுவும் இல்லை. ஆகையால் இப்போது நடைபெறும் மொழிவாரி மாகாணப் பிரிவினைகளில், திருத்தணி தமிழ் நாட்டைச் சேர வேண்டியது என்பதிலும் சந்தேகமில்லை.

நிர்வாக சௌகரியத்துக்காகச் சில காலத்துக்கு முன்பு சித்தூர் தனி ஜில்லாவாக அமைக்கப்பட்ட போது திருத்தணிப் பகுதி அந்த ஜில்லாவில் சேர்க்கப் பட்டது. இது காரணமாக, திருத்தணி ஸ்தலம் ஆந்திர ராஜ்யத்துக்குப் போய் விடக் கூடிய அபாயம் ஏற்பட்டது.

அந்த அபாயம் நேராமல் தடுப்பதற்கு ஒரு பெருங் கிளர்ச்சி திருத்தணிப் பகுதியில் ஆரம்பித்துப் பொது மக்களின் ஆதரவுடன் நடந்தது. ஸ்ரீ கே. விநாயகம் எம். எல். ஏ. அக்கிளர்ச்சியின் முன்னணியில் நின்று தமிழரசுக் கழகத்தாரின் உதவியுடன் தீவிரமாக நடத்தினார். "எல்லைக் கமிஷன் அமைக்கப்படும்" என்று நேருஜியின் வாக்குறுதி பிறந்தது. இது திருத்தணிக் கிளர்ச்சி வெற்றியின் முதற் படி ஆயிற்று.

பின்னர், சென்னை இராஜ்ய சட்டசபையில் ஆந்திர ராஜ்ய அமைப்பு மசோதா வந்தது. மத்திய சர்க்கார் தயாரித்து அனுப்பிய அம் மசோதாவில் சென்னைச் சட்டசபை சில முக்கியமான திருத்தங்கள் சேர்த்து நிறைவேற்றியது.

அந்தத் திருத்தங்களில் ஒன்று, புதிய ஆந்திர ராஜ்யத் தலை நகர் வசதிகளுக்காக எஞ்சிய சென்னை ராஜ்யம் இரண்டரைக் கோடி ரூபாய் நஷ்ட ஈடு கொடுக்க வேண்டு மென்ற பிரிவை ரத்து செய்ததாகும்.

இன்னும் ஒரு முக்கியமான திருத்தம், சித்தூர் ஜில்லாவில் தமிழர் பெரும்பாலாக வசிக்கும் திருத்தணிப் பிரதேசங்களைப் பற்றி விசாரித்து முடிவு செய்ய ஓர் எல்லைக் கமிஷனை உடனே நியமிக்க வேண்டும் என்பதாகும்.

இந்த முக்கியமான திருத்தத்தை ஸ்ரீ கே. விநாயகம் எம். எல். ஏ. சென்னைச் சட்டசபையில் பிரேரேபித்து நிறைவேற்றினார். திருத்தணிக் கிளர்ச்சியின் இரண்டாவது வெற்றிப்படி என்று இதைச் சொல்லலாம்.

"சாண் ஏறி முழம் சறுக்குதல்" என்று பழமொழி உண்டு. அதுபோல் மேற்கூறிய இரு வெற்றிகளும் பயனற்றுப் போகக் கூடிய முறையில், இந்தியப் பார்லிமெண்டில் ஆந்திர ராஜ்ய மசோதா இப்போது வந்திருக்கிறது. சித்தூர் ஜில்லா எல்லைக் கமிஷனைப் பற்றிய பிரஸ்தாபம் அந்த மசோதாவில் சிறிதும் இல்லை.

பண்டித நேருஜி காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் பேசும் போது, "எல்லைக் கமிஷன்களைப் பற்றிய பிரச்னைகளைச் சம்பந்தப்பட்ட இராஜ்ய சர்க்கார்கள் பேசி விவாதித்து முடிவு செய்ய வேண்டும். பார்லிமெண்டில் வரும் மசோதாவில் அது பற்றிய பிரஸ்தாபம் தேவையில்லை" என்ற கருத்தை வெளியிட்டதாகத் தெரிகிறது.

"வேதாளம் மறுபடியும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது" என்னும் விக்ரமாதித்தன் கதை நிகழ்ச்சியை இது நினைவூட்டுகிறது.

பெல்லாரி சம்பந்தமாக ஆந்திர சகோதரர்கள் கிளர்ச்சி செய்து வருவதை முன்னிட்டு, எல்லைக் கமிஷன் பிரஸ்தாபமே மசோதாவில் வேண்டியதில்லை என்று நேருஜி கருதி யிருக்கக் கூடும்.

ஆனால் இதைத் தமிழர்கள் ஒப்புக் கொள்ள முடியாது. ஆந்திர சகோதரர்கள் பிரிந்து போகும் தருணத்தில் தங்களால் இயன்ற அளவு எஞ்சிய சென்னை ராஜ்யத்தில் அரசியல் குழப்பங்களை ஏற்படுத்தி விட்டுப் போகலாம் என்று முயற்சிப்பதைப் பார்க்கிறோம்.

ஆந்திர சகோதரர்களின் இப்போதைய மனோ நிலையில், எல்லைக் கமிஷன் சம்பந்தமாக அவர்களுடன் சமரச உடன் பாட்டுக்கு வருவது இயலாத காரியம். ஆந்திர சகோதரர்கள் தங்களுக்குள்ளேயே ஆந்திரத் தலைநகர் சம்பந்தமான முடிவுக்கு வர வில்லை. "கர்நூல் தலை நகரம்" என்று முடிவாகி விட்டதாகச் சொன்ன பிறகு, மறுபடியும் அதைப் பற்றித் தீவிரமாகப் பிரதிவாதங்களும் கிளர்ச்சிகளும் நடந்து வருவதைக் காண்கிறோம். அப்படியிருக்கும் போது, எல்லைக் கமிஷன் சம்பந்தமாக அவர்களுடன் பேசிச் சமரச முடிவு காண்பது எங்கே?

ஆகையால் புது டில்லி பார்லிமெண்டில் தமிழர்களின் சார்பாகப் போரிடுவதற்கும் ஒரு விநாயகம் இப்போது தேவையாகி விட்டது. ஒரு விநாயகத்திற்குப் பதிலாகப் பல விநாயகங்கள் தோன்றினாலும் நல்லதுதான். பார்லிமெண்டில் நிறைவேறும் ஆந்திர ராஜ்ய மசோதாவில் சித்தூர் எல்லைக் கமிஷன் நியமனம் அவசியம் இடம் பெற்றே தீர வேண்டும்.

ஆந்திர ராஜ்யத் தலைநகருக்காக எஞ்சிய சென்னை இராஜ்யம் நஷ்ட ஈடு கொடுக்கும் பிரேரணை அம்மசோதாவில் இடம்பெறக் கூடாது.

பார்லிமெண்டில் தமிழ்நாட்டின் சார்பாக வீற்றிருக்கும் அங்கத்தினர்கள் கண்ணும் கருத்துமாயிருந்து தமிழரின் உரிமைகளைக் காப்பாற்றிக் கொடுப்பார்கள் என்று நம்புகிறோம்.

# விடுதலை நாள் கைத்தறிக்கும் வேண்டும்

### சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

சென்னை மாகாணத்தில் பத்து லட்சம் கைத்தறி நெசவாளர் குடும்பங்கள் இருக்கின்றன. அவர்கள் வீடு ஒவ்வொன்றிலும் ஒரு கைத்தறி இருக்கிறது. அதில் இணையில்லாத உயர்ந்த ரகத் துணிகள் உற்பத்தி செய்யப்படுகின்றன. தங்களுடைய தினசரி ஜீவனத்துக்கு இந்தக் கைத்தறிகளையே நம்பிக் கொண்டு நாற்பது லட்சம் ஜனங்கள் வாழ்கிறார்கள்.

பல இடங்களில் பரவலாக உள்ள இந்தப் பத்து லட்சம் தறிகளைப் பிரம்மாண்டமான ஒரு தொழிற்சாலை என்றே சொல்லலாம். ஆனால் இத்தொழிற்சாலை விஷயமாகச் சர்க்காருக்கு யாதொரு செலவும் இல்லை. அவர்கள் அதற்காக மூலதனம் எதுவும் போட்டிருக்கவில்லை. அதில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு வீட்டு வசதி முதலிய வசதிகள் எதுவும் செய்து கொடுத்திருக்கவில்லை.

இந்தியா முழுவதிலுமாக சென்னையிலிருப்பது போல் ஆறு மடங்கு தறிகள், அதாவது அறுபது லட்சம் தறிகள் இருக்கும் என்பது நிச்சயம். அவற்றில் வேலை செய்யும் ஆடவர்களையும் பெண்களையும் கணக்கு எடுத்தால், பம்பாய் மாகாணத்தில் உள்ள ஜனத் தொகையைக் காட்டிலும் அதிகம் இருக்கும்.

ஒரு காலத்தில் நமது கைத்தறி நெசவாளர்கள் லங்காஷயரை எதிர்த்துப் போராட வேண்டியிருந்தது. இப்போதோ அதைக் காட்டிலும் பெரிய ராட்சத விரோதி இந்தியாவுக்கு உள்ளேயே ஏற்பட்டிருக்கிறான்.

கைத்தறி நெசவில் ஈடுபட்டிருக்கும் இரண்டரைக் கோடி ஆடவர், பெண், குழந்தைகளை வேறு எந்த வேலையிலும் ஈடுபடச் செய்வது முடியாத காரியம்.

இந்தியாவில் விவசாயத்துக்கு உகந்த நிலம் இப்போது விவசாயத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்கே போதுமானதாக இல்லை. இந்தியாவில் உள்ள தொழிற்சாலைகளில் மேற்படி கைத்தறி நெசவாளர்களை எடுத்துக் கொள்வது என்பதும் சாத்தியம் இல்லை.

இது விலைவாசிகளைச் சரிக்கட்டும் பொருளாதாரப் பிரச்னை மட்டும் அல்ல. ஆடவர்களும் பெண்களும் குழந்தைகளுமாக இரண்டரைக் கோடி பேருக்கு எப்படி உணவு அளிப்பது என்ற பெரிய பிரச்னையாகும்.

இந்தப் பிரச்னையைத் தீர்ப்பது எப்படி? அவர்கள் பட்டினியால் மடியும்படி விட்டு விடுவதா? லட்சக் கணக்கான கைத்தறித் தொழிலாளர்களைக் காப்பாற்றுவதற்காக, குறிப்பிட்ட சில ரகத் துணிகளைக் கைத்தறிகளுக்காக ஒதுக்கி வைக்க வேண்டும் என்று நான் அடிக்கடி முறையிட்டு வருகிறேன்.

இன்று இந்தியாவின் சுதந்திர தினம். இந்த நல்ல நாளில், சென்னை மாகாணத்தைச் சேர்ந்த அனைவரும், நம்முடைய உதவிக்காக ஏங்கிவரும் லட்சக் கணக்கான கைத்தறி நெசவாளரின் நிலையை எண்ணிப் பார்க்க வேண்டும்.

ஜவுளி உற்பத்தி விசாரணைக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ கனுங்கோ சில வாரங்களுக்கு முன் சென்னைக்கு வந்திருந்தார். கைத்தறி நெசவாளர்கள் அதிகமாக உள்ள சேலம் நகரில் அவர் சில நாட்கள் தங்கியிருந்து அவர்களுடைய பரிதாப நிலைமையை நேரில் பார்த்து அறிந்ததாக என்னிடம் தெரிவித்தார்.

என் இளம் பிராயத்தில் நான் சேலத்தில் வசித்தேன். தேன் கூட்டில் உள்ள தேனீக்களைப் போல் அந்த நகரில் கைத்தறிக்காரர்களின் குடும்பங்கள் சுறுசுறுப்பாக வேலை செய்து கொண்டிருப்பதைப் பார்த்திருக்கிறேன்.

யோக்கியப் பொறுப்பும் உழைப்பும் சுறுசுறுப்பும் படைத்தவர்கள் கைத்தறி நெசவாளர்கள். தேசம் அடைந்த சுதந்திரத்தை அவர்களும் நன்கு அநுபவிக்கும்படி செய்ய வேண்டியது நமது கடமையாகும். அவர்கள் வேறு எதுவும் கோரவில்லை. நியாயமற்ற போட்டியிலிருந்து தங்களுக்கு விடுதலை அளிக்க வேண்டுமென்றுதான் கோருகிறார்கள்.

பட்டினியால் பரிதவிப்போருக்கு வெறும் ஆறுதல் வார்த்தைகளால் யாதொரு பலனும் கிடைக்காது.

கைத்தறிகளுக் கென்று சில ரகத் துணிகளை ஒதுக்கித் தந்துவிட்டு, மற்றவைகளை மாத்திரமே உற்பத்தி செய்யும்படி நாம் மில் முதலாளிகளுக்குக் கண்டிப்பாகக் கூறிவிட வேண்டும்.

ஆலைகள் உற்பத்தி செய்யும் துணிகளை ஆசியா வெங்கும் விற்பனை செய்து, பணம் திரட்ட முடியும்.

ஆகையால் கைத்தறி நெசவாளர்களுடன் ஆலைகள் போட்டியிட்டு அவர்களையும் அவர்களுடைய குடும்பங்களையும் பட்டினி போடக் கூடாது.

ஆலை முதலாளிகள் பெரிய நகரங்களில் இருப்பதால் அவர்களுடைய குறைகளும் புகார்களும் பெரிதாகக் காணப்படுகின்றன. ஆனால் கைத்தறி நெசவாளர்களோ சர்க்கார் அதிகார பீடத்திலிருந்து வெகு தொலைவில் கிராமங்களில் பரவி இருக்கிறார்கள். அவர்களுடைய கஷ்டங்கள் தூரத்தில் உள்ள நட்சத்திரங்களைப் போல் சிறியவையாகத் தோன்றுகின்றன.

சகோதர, சகோதரிகளே! இந்தப் பிரச்னையை ஆழ்ந்து யோசித்துப் பாருங்கள். மில் வேஷ்டிகளையோ அல்லது மில் புடவைகளையோ வாங்காதீர்கள். இதுவரை வாங்கி யிருப்பவைகளையும் அப்பால் வைத்து விடுங்கள். லட்சக்கணக்கான கைத்தறி நெசவாளர்கள் பெரும் கஷ்டத்துக்கு ஆளாகியிருக்கும்போது, மில் வேஷ்டிகளையோ, மில் சேலைகளையோ உடுத்துவது வெட்கக்கேடான காரியம். அந்தக் காரியத்தை நீங்கள் செய்ய வேண்டாம்.

அட்டைப்படம்

# காணாத கண் என்ன கண்ணே!

ஆகஸ்டு 15உ தேசமெங்கும் சுதந்திரத் திருநாள் கொண்டாடப் படுகிறது. அன்றைக்குத் தமிழ் நாடெங்கும் கோலாகலமாகத் தமிழ்த் திருவிழாவும் கொண்டாடப் போகிறார்கள்.

தமிழ்ப் பெரு மூதாட்டியாகிய "ஔவையார்" வாழ்க்கையைச் சித்திரிக்கும் அற்புதமான படம் அன்று அறுபது இடங்களில் திரையிடப் படுமென்று தெரிகிறது.

"ஔவையார்" படத்தைப் பார்த்தவர்கள் "கண்டோம்! களி தீர்ந்தோம்!" என்று களிப்புடன் கூறுவார்கள். படத்தைப் பாராதவர்களிடம் "காணாத கண் என்ன கண்ணே!" என்று கூறி அவர்களுடைய ஆர்வத்தைத் தூண்டி விடுவார்கள்.

* * * *

உலகத்தில் ஆண்களும் சரி, பெண்களும் சரி, இளமையில் அதிகமான மோகம் கொண்டிருப்பது இயல்பு. முதுமையை யாரும் விரும்புவதில்லை. யயாதி மகாராஜன் தன் முதுமைப் பிராயத்தை வாங்கிக் கொண்டு இளமையைத் தரும்படி தன் புதல்வர்களைக் கேட்டுக் கொண்ட வரலாற்றைப் பாரதம் கூறுகிறது.

பெண்மணிகள் தங்கள் பிராயத்தைக் குறிப்பிடவே விரும்புவதில்லை யென்பது ஒரு சிரஞ்சீவி ஹாஸ்யத் துணுக்கு. பிராயத்தைக் குறைத்துச் சொல்லுவார்களே தவிரக் கூட்டிச் சொல்வோர் யாரும் இல்லை.

இந்த மனித இயல்புக்கு மாறாக, முதுமைப் பிராயத்தை வரம் வேண்டிப் பெற்ற பெண்மணியின் சரித்திரம், ஔவையாரின் சரித்திரம். உலகத்துக் கதைகள்—காவியங்களில் எங்கும் நாம் கேட்டறியாத புனிதமான சரித்திரம். தமிழருக்கும் தமிழரின் பண்பாட்டுக்கும் அழியாத புகழ் தரும் சரித்திரம்.

அந்தச் சரித்திரத்தின் மேன்மைக்குத் தகுந்த முறையில், "ஔவையார்" படத்தை ஏழு ஆண்டுகள் முயன்று இணையற்ற படமாகத் தயாரித்து ஜெமினி கோஷ்டியார் வெளியிட்டிருக்கிறார்கள்.

இந்தப் படத்தில் வரும் மகத்தான சில காட்சிகளுக்கு இணை சொல்லக்கூடிய காட்சிகளைத் தமிழ்ப் படங்களிலும் நாம் கண்டதில்லை; மேனாட்டுப் படங்களிலும் கண்டதில்லை.

ஔவை மூதாட்டி விநாயகரைப் பிரார்த்தித்துப் பல அரும் பெரும் காரியங்களை இப்படத்தில் சாதித்துக் காட்டுகிறார். அவற்றிலெல்லாம் பாரி வள்ளலின் புதல்விகளுக்கு மணம் செய்து வைத்தது மாபெரும் சாதனையாகும்.

விநாயகரை ஔவையார் பிரார்த்திப்பதும், உடனே விநாயகர் விக்கிரகம் மறைந்து யானை தோன்றுவதும், அது துதிக்கையைத் தூக்கிக்கொண்டு பிளிறுவதும், உடனே யானைகள் கூட்டங் கூட்டமாகத் திரண்டு வந்து திருக்கோவலூர் இளவரசனைச் சிறைப்படுத்தி யிருந்த கோட்டையைத் தகர்த்து அவனை விடுவிப்பதும், பார்க்கப் பார்க்க ரோமாஞ்சனம் உண்டாக்கும் காட்சிகளாகும்.

"ஔவையார்" படத்தில் அற்புதங்கள் விளைவிக்கும் சில முக்கிய கதா பாத்திரங்களை இந்தக் "கல்கி" இதழ் அட்டை பெருமிதத்துடன் தாங்கிக் கொண்டு வருகிறது.

# பரிதாப முடிவு!



"காஷ்மீருக்குத் தனி அந்தஸ்து வேண்டும்!"
"காஷ்மீர் ஒரு சுதந்திர நாடு."
"காஷ்மீரின் எதிர்காலத்தைக் காஷ்மீரே நிர்ணயிக்கும்."
"நெருக்கடியை முன்னிட்டுத்தான் இந்தியாவுடன் இணைந்தோம்."
"சந்தர்ப்பத்துக்குத் தகுந்தபடி முடிவு செய்வோம்."
"அப்படியானால் இதோ முடிவு செய்து விட்டோம்!"
காஷ்மீர்

# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 35

## குரங்குப் பிடி!

வந்தியத் தேவன் கவனமாகக் காது கொடுத்துக் கேட்டான். ஒரு நிமிட நேரம் காலடிச் சத்தம் கேட்பது போலிருந்தது. சட்டென்று அது நின்றது. மறுபடியும் கேட்டது. இப்போது அந்தச் சத்தம் பின்னோக்கிச் செல்வது போல் வரவரக் குறைந்தது.

"ஐயா! மேலே போகத்தான் வேண்டுமா? திரும்பி விடுவது நல்லதல்லவா?" என்றாள் மணிமேகலை.

"இளவரசி! முன் வைத்த காலைப் பின் வைப்பது எனக்கு வழக்கமில்லை!" என்றான் வல்லவரையன்.

"பிடித்தால், குரங்குப் பிடிதான் என்று சொல்லுங்கள்!"

"முன்னொரு தடவை தங்கள் தோழி சந்திரமதி என்னைக் 'குரங்கு மூஞ்சி' என்று வர்ணித்தாள் அல்லவா? முகத்திற்கேற்பத்தான் பிடியும் இருக்கும்?"

இவ்விதம் சொல்லிக் கொண்டே வந்தியத் தேவன், இதுகாறும் மணிமேகலையின் பின்னால் வந்து கொண்டிருந்தவன், அவளைத் தாண்டிக் கொண்டு முன்னால் போக முயற்சித்தான். அதை மணிமேகலை தடுக்கப் பார்த்தாள்.

இருவரும் ஒருவரோடொருவர் மோதிக் கொண்டார்கள்.

மணிமேகலையின் கையிலிருந்த விளக்கு தடால் என்று விழுந்தது. இரண்டு மூன்று படிகள் தடதடவென்று உருண்டு சென்று அணைந்து விட்டது.

பின்னர் அந்த மேடு பள்ளமான நடைபாதையில் காரிருள் சூழ்ந்தது.

"இளவரசி! இது என்ன இப்படிச் செய்தீர்கள்?" என்றான் வல்லவரையன்.

"தாங்கள் ஏன் என்னைத் தாண்டிக் கொண்டு முன்னால் போகப் பார்த்தீர்கள்?" என்றாள் மணிமேகலை.

"அபாயம் நேரும் போது முன்னால் பெண்களை விட்டுக் கொண்டு போகும் வழக்கம் எனக்கு இல்லை!" என்றான் வந்தியத் தேவன்.

"தங்களுக்கு எது எது வழக்கம், எது எது வழக்கமில்லை என்று ஒருமிக்க எனக்குத் தெரிவித்து விட்டால் நலமாயிருக்கும். அதற்குத் தகுந்தபடி நானும் நடந்து கொள்வேன்."

"ஆகட்டும், அம்மணி! அவகாசம் கிடைக்கும் போது சொல்கிறேன்."

"இப்போது அவகாசம் இல்லாமல் என்ன? வாருங்கள், திரும்பி நந்தவனத்துக்குப் போகலாம். அங்கே அவகாசமாக உட்கார்ந்து கொண்டு சொல்லுங்கள்."

"இருட்டில் வருவதற்குத் தங்களுக்குப் பயமாயிருந்தால் திரும்பிச் செல்லுங்கள்!......"

"தங்களைப் போன்ற வீரர் அருகில் இருக்கும்போது எனக்கு என்ன பயம்?"

"பின்னே வாருங்கள், போகலாம்! வழியில் நிற்பதில் என்ன பயன்?"

இவ்வாறு சொல்லிக் கொண்டே முன்னால் போகப் பார்த்த வந்தியத் தேவன் கால் தடுக்கி விழப் பார்த்தான்.

மணிமேகலை அவன் விழுந்து விடாமல் தாங்கிப் பிடித்துக் கொண்டாள்.



"ஐயா! இந்த வழியில் மேடு பள்ளங்கள் அதிகம். படிகள் எங்கே, சமபாதை எங்கே என்று இருட்டில் கண்டு பிடிக்க முடியாது. நான் இந்த வழியில் எத்தனையோ தடவை போயிருக்கிறேன். படிகள், திருப்பங்கள் உள்ள இடமெல்லாம் நன்றாய்த் தெரியும். ஆகையால், தாங்கள் எவ்வளவு சூராதி சூரராக இருந்த போதிலும், என் கையைப் பிடித்துக் கொண்டு பின்னால் வருவது நல்லது. இல்லாவிட்டால் வேட்டை மண்டபம் போய்ச் சேர மாட்டீர்கள். வழியில் கால் ஒடிந்து விழுந்து இடப்பீர்கள்!" என்றாள் மணிமேகலை.

"இளவரசி! தங்கள் கட்டளைப் படியே நடந்து கொள்கிறேன். வந்தனம்!" என்றான் வந்தியத்தேவன்.

இருட்டில் மணிமேகலை வல்லவரையனுடைய ஒரு கரத்தைப் பற்றிக் கொண்டாள். வந்தியத்தேவனுடைய கரம் ஜில்லிட்டிருந்ததைத் தெரிந்து கொண்டாள். 'இவர் பகைவர்களுக்கு அஞ்சாதவர்; சதிகாரர்களுக்கும் பயப்படாதவர்; இந்தப் பேதைப் பெண்ணின் கையைப் பிடிப்பதற்கு இவ்விதம் ஏன் பயப்படுகிறார்?' என்று அவள் உள்ளம் எண்ணமிட்டது.

சிறிது தூரம் இருவரும் மௌனமாகச் சென்றார்கள். வந்தியத் தேவன் அடிக்கடி தடுமாறி விழப் பார்த்தான். ஒவ்வொரு தடவையும் அவன் விழுந்து விடாமலிருக்கும் பொருட்டு மணிமேகலை அவனுடைய கையை இறுக்கிப் பிடித்துக் கொள்ள வேண்டி நேர்ந்தது.

"நரகத்துக்குப் போகும் வழி இப்படித்தான் இருள் அடர்ந்திருக்கும்!" என்று சொன்னான் வந்தியத் தேவன்.

"ஓகோ! தாங்கள் நரகத்துக்குப் போய் விட்டு வந்திருக்கிறீர்களா?" என்று மணிமேகலை கேட்டாள்.

"நான் நரகத்துக்கும் போனதில்லை; சொர்க்கத்துக்கும் போனதில்லை. பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள்!"

"அவர்களுக்கு, அவர்களுடைய பெரியோர்கள் சொல்லியிருப்பார்கள்!"

சில காலத்துக்கு முன்பு வரையில் நாலு பேருக்கு முன்னால் வருவதற்குக் கூட கூச்சப்பட்டுக் கொண்டிருந்த இந்தப் பெண், இவ்



வளவு வாசலைக மூள்ளவன் ஆனது எப்படி என்று வந்தியத் தேவன் சிந்தித்துப் பார்த்தான்.

"நரகத்துக்குப் போகும் வழிதான் இருட்டா யிருக்கும்; சொர்க்கத்துக்குப் போகும் வழி எப்படி யிருக்குமாம்?" என்றாள் மணிமேகலை.

"ஒரே ஜோதி மயமா யிருக்குமாம்: கோடி சூரியப் பிரகாசமாயிருக்குமாம்!"

"அப்படியானால் நரகத்துக்குப் போகும் வழிதான் எனக்குப் பிடிக்கும்! ஒரு சூரியனே கண்ணைக் கூசப் பண்ணுகிறது! கோடி சூரியனுடைய வெளிச்சம் கண்ணைக் குருடாக்கி விடுமே!" என்றாள் மணிமேகலை.

"நரகத்துக்குப் போகும் வழியாகப் போனால் முடிவில் நரகத்துக்குத் தானே போய்ச் சேரும்படி யிருக்கும்?" என்றான் வல்லவரையன்.

"தங்களைப் போன்ற வீர புருஷரைத் தொடர்ந்து போனால், நரகப் பாதை வழியாகச் சொர்க்கத்துக்குப் போனாலும் போகலாம்!" என்றாள் மணிமேகலை.

"தங்களைப் போன்ற இளவரசியின் கையைப் பிடித்துக் கொண்டு போனால், நரகமே சொர்க்கம் ஆகிவிடும்!" என்றான் வந்தியத்தேவன்.

உடனே உதட்டைக் கடித்துக் கொண்டு "இப்படிச் சொல்லி விட்டோமே? இந்தப் பெண் ஏதாவது தவறாக எண்ணிக் கொள்ளப் போகிறாளோ?" என்று கவலை கொண்டான்.

"தங்களுடைய கரம் ஜில்லிட்டிருப்பதைப் பார்த்தால், தாங்கள் சொர்க்கத்துக்குப் போகிறவராக எண்ண இடமில்லை. கொலைக்களத்துக்குப் போகிறவரைப்போல் தங்கள் உடம்பு நடுங்குகிறது!" என்றாள் மணிமேகலை.

"இளவரசி! இந்தப் பிரயாணத்தின் முடிவில் எனக்குக் கொலைக் களந்தான் காத்திருக்கிறதோ, என்னமோ?"

"தாங்கள்தானே முன் வைத்த காலைப் பின் வைப்பதில்லை என்று பிடிவாதம் பிடிக்கிறீர்கள்? வேட்டை மண்டபத்தில் எத்தனை கொலைகாரர்கள் இருக்கிறார்களோ, என்னமோ?"

"அவர்கள் எத்தனை பேர் வேண்டுமானாலும் இருக்கட்டும்; அவர்களுக்கு நான் பயப்படவில்லை. தாங்களும் நானும் இப்படிக் கைகோத்துக் கொண்டு இருட்டில் போவதைக் கந்தமாறன் பார்த்து விட்டால்,......அதைப் பற்றித் தான் யோசனை செய்கிறேன்."

"ஐயா! நான் உயிரோடிருக்கும் வரையில் என் தமையனால் தங்களுக்கு ஒரு கெடுதியும் நேராது. நான் காணும் கனவில் பாதி இப்போது உண்மையாக நடந்திருக்கிறது; இன்னும் பாதியும் ஒருவேளை உண்மையானாலும் ஆகலாம். யார் கண்டது?" என்றாள் மணிமேகலை.

இந்தச் சமயத்தில் ஏதோ ஒரு கதவு பூட்டப்படும் சத்தத்தைக் கேட்டு இருவரும் திடுக்கிட்டுப் போய் நின்றார்கள்.

மணியம்

"வேட்டை மண்டபத்துக்குச் சமீபத்தில் வந்து விட்டோம்!" என்று மணிமேகலை மெல்லிய குரலில் கூறினாள்.

இதற்குள் சற்றுத் தூரத்தில் சிறிது வெளிச்சம் தெரிந்தது. வரவர அவ்வெளிச்சம் அதிகமானதுடன் அவர்களை நெருங்கி வந்ததாகத் தோன்றியது. மணிமேகலை வந்தியத் தேவனுடைய கரத்தை விட்டு விட்டுச் சற்று விலகி நின்றாள்.

அடுத்த நிமிஷத்தில், ஒரு கையில் தூக்கிப் பிடித்த விளக்குடன் இன்னொரு கையில் முறுக்கித் திருகிய வேலைப்பாடு அமைந்த கூரிய கத்தியுடனும் இடும்பன்காரி அவர்களுக்கு எதிரே தோன்றினான்.

இவர்களைப் பார்த்ததும் அவன் அதிசயத்தினால் திகைத்துப் போனவனைப் போல் நின்றான். ஆனால் அவன் அவ்வாறு வேஷம் போடுகிறான் என்பது இருவருக்கும் தெரிந்து போயிற்று.

"அம்மா! ஐயா! இது என்ன? இந்த இருட்டில் இவ்விதம் தனியாகக் கிளம்பினீர்கள்? அடிமையிடம் சொன்னால் விளக்குப் பிடித்துக் கொண்டு வரமாட்டேனா? எங்கே புறப்பட்டீர்கள்?" என்று கேட்டான்.

"இடும்பன்காரி! மலையமான் படை எடுத்து வருவதாகச் செய்தி வந்திருக்கிறது அல்லவா? ஆகையால் மதில் வாசல்கள் சுரங்க வாசல்கள் எல்லாம் பத்திரமாய்ப் பூட்டியிருக்கிறதா என்று பார்ப்பதற்காக வல்லத்து இளவரசரையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டேன்!" என்றாள் மணிமேகலை.

"அதிசயமாயிருக்கிறது, தாயே! நானும் அதைத்தான் பார்த்து விட்டு வருகிறேன்!" என்றான் இடும்பன்காரி.

"அப்படித்தான் நினைத்தேன். நாங்கள் வரும்போது கொண்டு வந்த விளக்கு வழியில் விழுந்து அணைந்து விட்டது. இங்கே கொஞ்சம் வெளிச்சம் தெரிந்தது. நீயாய்த்தான் இருக்க வேண்டும் என்று எண்ணி மேலே வந்தோம்."

"சின்ன எஜமான் பார்க்கச் சொன்னார்கள்; அதனால் போய்ப் பார்த்து விட்டு வந்தேன். சுரங்கப் பாதையெல்லாம் சரிவர அடைத்துத் தாளிட்டிருக்கிறது. திரும்பிப் போகலாமா, தாயே!"

"உன் கையில் உள்ள விளக்கைக் கொடுத்து விட்டு நீ போ! இந்த இளவரசருக்கு வேட்டை மண்டபத்திலிருந்து ஒரு வேலாயுதம் பொறுக்கி எடுத்துக் கொள்ள வேண்டுமாம். இவருடைய வேல் கொள்ளிடத்தில் போய் விட்டதாம். ஒரு வேளை யுத்தம் வந்தாலும் வரலாம் அல்லவா?......"

"ஆம், அம்மணி! யுத்தம் வந்தாலும் வரலாம். ஆகையால் வேற்று மனிதர்களை வேட்டை மண்டபத்துக்குள் அழைத்துப் போகாமலிருப்பதே நல்லது. தங்களுக்குத் தெரியாததற்கு நான் ஒன்றும் சொல்லத் தேவையில்லை."

"அது உண்மைதான், காரி! ஆனால் இவர் வேற்று மனிதர் அல்ல. சின்ன எஜமானுக்கு உயிருக்கு உயிரான சிநேகிதர் ஆயிற்றே! இன்னும் ஏதேனும் புதிய உறவு ஏற்பட்டாலும் ஏற்படும். நீ விளக்கைக் கொடுத்து விட்டுப் போ!" என்றாள் மணிமேகலை.

இடும்பன்காரி வேண்டா வெறுப்பாக விளக்கை இளவரசியிடம் கொடுத்து விட்டுப் போனான்.

வந்தியத் தேவனும் மணிமேகலையும் மேலே நடந்து வேட்டை மண்டபத்தை அணுகிச் சென்றார்கள்.

எங்கிருந்தோ ஓர் ஆந்தையின் குரல் கேட்டது.

"இது என்ன? அரண்மனைக்குள்ளே ஆந்தை எப்படி வந்தது?" என்று மணிமேகலை வியப்புடன் கூறினாள்.

"ஒரு வேளை வேட்டை மண்டபத்துக்குள் இருக்கும் செத்த ஆந்தைக்கு உயிர் வந்து விட்டதோ, என்னமோ? முன்னொரு சமயம் இளவரசியைப் பார்த்ததும் செத்த குரங்கு உயிர் பெறவில்லையா?" என்றான் வந்தியத்தேவன்.

வேட்டைமண்டபத்தின் கதவு வெளிப்பக்கம் பூட்டப்பட்டிருந்தது.

மணிமேகலை தான் கொண்டு வந்திருந்த சாவியைப் போட்டுப் பூட்டைத் திறந்தாள். பிறகு, கதவையும் இலேசாகத் திறந்தாள்.

இருவரும் உள்ளே பிரவேசித்தார்கள்.

முதலில் சிறிது நேரம் அவர்களைச் சுற்றிலும் செத்த யானைகள், கரடிகள், புலிகள், மான்கள், முதலைகள், பருந்துகள், ஆந்தைகள், — இவற்றின் பயங்கரமான உடல்கள்தான் தெரிந்தன.

விளக்கைத் தூக்கிப் பிடித்து நன்றாக உற்றுப் பார்த்தபோது, அந்தப் பிராணிகளுக்குப் பின்னால் பாதி மறைந்தும் பாதி மறையாமலும் சில மனித உருவங்கள் உட்கார்ந்திருப்பது தெரிந்தது.

அப்போது அவர்கள் திறந்து கொண்டு வந்த வேட்டை மண்டபத்தின் கதவு படாரென்று சாத்தப்பட்டு விட்டது.

யார் அவ்வளவு பலமாகக் கதவைச் சாத்துகிறார்கள்என்று தெரிந்துகொள்ள வந்தியத்தேவன் திரும்பிப் பார்த்தான்.

அதே கணத்தில் அவன் பின்னுலிருந்து பலமாகப் பிடித்துத் தள்ளப்பட்டான். முன்னெரு சமயம் அவன் எந்த வாலில்லாக் குரங்கின் பின்னால் ஒளிந்துகொண்டிருந்தானே, அந்தக் குரங்கின் முன்புறத்தில் போய் மோதிக் கொண்டான்.

இரண்டு கரங்கள் அவனைப் பலமாகப் பற்றிக் கொண்டன. "குரங்குப் பிடி" எவ்வளவு வலிவுள்ளது என்பதை அப்போதுதான் அவன் நன்ருக, அனுபவபூர்வமாகத் தெரிந்து கொண்டான்.

அவனுடைய அரையிலிருந்த கத்தியை எடுக்கச் செய்த முயற்சி சிறிதும் பலிக்கவில்லை. அப்பால் இப்பால் அவனால் திரும்பவே முடியவில்லை.

குரங்கின் கைகள்,—அல்லது குரங்கின் கைகளோடு சேர்ந்து வந்த இரண்டு மனிதக் கைகள்,—அவனை அவ்வளவு பலமாகப் பிடித்துக் கொண்டன.

இன்னும் இரண்டு கைகள் அவனுடைய அரையிலே யிருந்த கத்தியை அவிழ்த்து எடுத்துக் கொண்டன.

"ஐயோ!" என்று பயங்கரமாக அலறிக் கொண்டு அவனருகில் ஓடி வந்த மணிமேகலையின் மார்பை நோக்கி அந்தக் கத்தி நீட்டப் பட்டது.

"சத்தம் போட வேண்டாம். சிறிது நேரம் சும்மா இருந்தால், — நாங்கள் சொல்கிறபடி கேட்டால்,—உங்கள் இருவருடைய உயிருக்கும் அபாயம் இல்லை. சத்தம் போட்டீர்களானால் இருவரும் உயிர் இழக்க நேரிடும். முதலில், இந்த அதிகப்பிரசங்கி இளைஞன் இறந்து விழுவான்!" என்றது ஒரு குரல்.

அது ரவிதாஸனுடைய குரல் என்று வந்தியத் தேவன் தெரிந்து கொண்டான்.

"இளவரசி! சற்றுச் சும்மா இருங்கள்! இவர்கள் எதற்காக வந்திருக்கிறார்கள், என்னதான் சொல்லுகிறார்கள் என்று கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்!" என்று சொன்னான் வந்தியத் தேவன்.

## அத்தியாயம் 36

# பாண்டிமா தேவி

வந்தியத்தேவனை வாலில்லாக் குரங்கோடு சேர்த்துக் கட்டியவர்கள், அவனுக்கு அருகில் சுவரில் மாட்டியிருந்த கலைமானின் கொம்புகளோடு மணிமேகலையைச் சேர்த்துக் கட்டினார்கள்.

"மந்திரவாதி! நான்தான் உங்கள் எதிரி! கடம்பூர் இளவரசியை ஏன் கட்டுகிறீர்கள்? விட்டு விடுங்கள்!" என்றான் வந்தியத்தேவன்.

ரவிதாஸன் அவனைப் பார்த்து, "பொறு, தம்பி, பொறு! பல தடவை நீ எங்கள் காரியத்தில் குறுக்கிட்டிருக்கிறாய்! ஒவ்வொரு தடவையும் உன்னை நாங்கள் உயிரோடு விட்டு வந்தோம். ஆனாலும் நீ எங்களைப் பின்தொடர்ந்து வருவதை நிறுத்தவில்லை!" என்றான்.

வந்தியத்தேவன் சிரித்தான்.

"என்னப்பா, சிரிக்கிறாய்? வாலில்லாக் குரங்கின் ஆலிங்கனம் அவ்வளவு குதூகலமா யிருக்கிறதா!" என்று கேட்டான் ரவிதாஸன்.

"இல்லை! நீ சொன்னதை எண்ணிப் பார்த்துத்தான் சிரித்தேன்!" என்றான் வல்லவரையன்.

"நான் சொன்னவற்றில் எதைக் குறித்து இப்படிச் சிரிக்கிறாய்?"

"உங்களை நான் தொடர்ந்து வருவதாகச் சொன்னாயே? நீங்கள் என்னை விடாமல் தொடர்ந்து வருவதாகவும் சொல்லலாம் அல்லவா? என் காரியத்தில் நீங்கள் குறுக்கிடுவதாகவும் சொல்லலாம் அல்லவா? இப்போது பார்! நான் கடம்பூர் இராஜ குமாரியை அழைத்துக் கொண்டு ஒரு முக்கியமான காரிய நிமித்தமாகப் புறப்பட்டேன். நீ குறுக்கிட்டு என்னை இந்தக் குரங்கோடு சேர்த்துக் கட்டிப் போட்டிருக்கிறாய்!"

"ஓகோ! அப்படியா சமாசாரம்? உன் காரியத்தில் நாங்கள் குறுக்கிடுவதாகவே வைத்துக் கொள். ஆனால் அவ்விதம் நேர்வது இதுதான் கடைசி முறை. இன்று நீ உயிரோடு பிழைத்து விட்டாயானால், பிறகு எங்களைக் காணவே மாட்டாய்!"

"அப்படியானால், நான் உயிரோடிருக்கப் பிரயத்தனப்பட வேண்டியது தான்! மந்திரவாதி! நான் உயிரோடு தப்புவதற்கு நீயே ஒரு தந்திரம் சொல்லிக் கொடு!" என்றான் வந்தியத்தேவன்.

"பேஷாகச் சொல்லித் தருகிறேன், இந்த மண்டபத்திலும் இதற்கு அடுத்த அறையிலும் என்ன நடந்தாலும் நீ அதைப் பார்த்துக்கொண்டு சும்மா இரு!

பதட்டமாக ஒன்றும் செய்யாதே! உன் உயிருக்கு ஆபத்து நேராது."

"ஏன் என் பேரில் உங்களுக்கு அவ்வளவு அபிமானம்? ஏன் என்னைக் கொல்லாமல் விடுகிறீர்கள்?"

"அப்படிக் கேள்! அது பெரிய மூட்டாள் தனந்தான்! ஆனால் எங்கள் தேவியின் கட்டளை!"

"யார் உங்கள் தேவி?"

"இன்னுமா உனக்குத் தெரியவில்லை? பாண்டி மாதேவிதான்! பெரிய பழுவேட்டரையரின் வீட்டில் வந்திருக்கும் வீர பாண்டிய சக்கரவர்த்தியின் வீரபத்தினி நந்தினி தேவிதான்!"

"நல்ல வீரபத்தினி!..."

"சீ! துஷ்டச் சிறுவனே! எங்கள் தேவியைப் பற்றி ஏதேனும் சொன்னால் உயிரை இழப்பாய்! ஜாக்கிரதை!"

"நீங்கள் அல்லவா பழுவூர் ராணியின் மீது அவதூறு சொல்கிறீர்கள்? இன்னொரு புருஷன் வீட்டில் வந்திருப்பவளை வீர பாண்டியனுடைய தேவி என்று சொல்கிறீர்களே?"

"அதனால் என்ன? இராமனுடைய பத்தினி சீதை, இராவணனுடைய வீட்டில் சிலகாலம் இருக்க வில்லையா?"

"இராமர் போய்ச் சீதா தேவியை அழைத்துக் கொண்டு வந்துவிட்டாரே?"

"நாங்களும் எங்கள் பாண்டிமா தேவியை அழைத்துக் கொண்டு போகத்தான் வந்திருக்கிறோம். அவர் பழுவூர் அரண்மனையில் தாமாகவே எந்தக் காரியத்துக்காகச் சிறைப் பட்டிருந்தாரோ, அது இன்றைக்கு முடியப்போகிறது..."

"ஆகா! அது என்ன காரியம்?"

"சற்று நேரம் பொறுமையாயிரு! நீயே தெரிந்துகொள்வாய்! உன் துஷ்டத் தனத்தைக் காட்டினாயானால், நீ மட்டுமல்ல,—இந்தப் பெண்ணும் துர்க்கதிக்கு உள்ளாக நேரிட்டு விடும்!"

இவ்விதம் கூறிவிட்டு ரவிதாஸன் எதிர்ப் பக்கத்துச் சுவரண்டை போவதற்கு யத்தனித்தான்.

"மந்திரவாதி! இன்னும் ஒரே ஒரு விஷயம் சொல்லி விட்டுப் போ!" என்றான் வந்தியத் தேவன்.

ரவிதாஸன் திரும்பிப் பார்த்து, "தம்பி! என்னை 'மந்திரவாதி' என்று இனி அழையாதே!......" என்றான்.

"பின்னே, தங்களை என்னவென்று அழைக்க வேண்டும்?"

"முதன் மந்திரி என்று மரியாதையுடன் அழைக்க வேண்டும்!"

"ஐயா! தாங்கள் எந்த மகா ராஜ்யத்தின் முதன் மந்திரியோ?"

"தெரியவில்லையா, உனக்கு? பாண்டிய மகாசாம்ராஜ்யத்தின் முதன் மந்திரி! பள்ளிப்படைக்கு அருகில் நடந்த பட்டாபிஷேக வைபவத்தை நீ பார்த்துக் கொண்டிருந்தாயே?"

"பார்த்துக்கொண்டிருந்தேன். ஆனால் அது ஏதோ என் மனப் பிரமை என்று நினைத்தேன்......"

"அதனாலேதான் அதைப் பற்றி யாரிடமும் நீ சொல்லவில்லை யாக்கும்!"

"இரண்டொருவரிடம் சொன்னேன். அவர்கள் என்னைப் பைத்தியக்காரன் என்றார்கள்; நான் ஏதோ துர் சொப்பனம் கண்டிருக்க வேண்டும் என்றும் சொன்னார்கள்......"

"ஆகா! அவர்கள் அப்படியே நினைத்துக் கொண்டிருக்கட்டும். நீ வெளியில் சொன்னால் யாரும் நம்ப மாட்டார்கள் என்று நம்பித்தான் உன்னை நாங்களும் உயிரோடு விட்டோம்!......"

"மந்திரவாதி! நீங்கள் என்னை உயிரோடு விட்டதற்கு அது ஒன்று மட்டும் தான் காரணமா?"

"வேறு என்ன?"

"உங்கள் ராணி எனக்காகச் சிபார்சு செய்ய வில்லையா?"

"அதனால் என்ன?"

"இப்போதும் அவருடைய சிபார்சு எனக்குக் கிடைக்கும்."

"கிடைக்கும் வரையில் பொறுத்திரு!"

"மந்திரவாதி! உங்கள் ராணி என்னை அவசரமாக அழைத்து வரும்படி இந்தக் கடம்பூர் இளவரசியை அனுப்பி வைத்தார். அதனாலேதான் நாங்கள் இருவரும் ஒன்றாக வந்தோம்......"

"அப்பனே! இராணியின் அறைக்கு வருவதற்கு வேறு வழி இருக்கிறதே? இந்த வழியில் வருவானேன்?"

"அதைப் பற்றி உன்னிடம் நான் சொல்ல வேண்டியதில்லை. ராணி கேட்டால் சொல்லிக் கொள்கிறேன்......"

"ராணி வந்து கேட்கும் வரையில் பொறுத்துக் கொண்டிரு!"

"மந்திரவாதி! என்னையும் சம்புவரையர் குமாரியையும் உடனே கட்டவிழ்த்து விடச் சொல்! இல்லா விட்டால்......"

"என்ன செய்வாய்?"

"இந்த மண்டபம் அதிரும்படி கூச்சல் போடுவேன்!"

"நீ அப்படிக் கூச்சல் போட்ட உடனே உன் மேல் மூன்று வேல்கள் ஒரே சமயத்தில் பாயும், ஜாக்கிரதை!"

வந்தியத் தேவன் ஒரு முறை சுற்று முற்றும் கூர்ந்து பார்த்தான்.

ஆம்; மூன்று சதிகாரர்கள் கையில் வேலுடன் தயாராகக் காத்திருந்தார்கள்.

"தம்பி! நீ ரொம்பக் கெட்டிக்காரப் பிள்ளை. உன்னை எங்களுடன் சேர்த்துக் கொள்ளலாம் என்ற ஆசைகூட எனக்கு ஒரு சமயம் இருந்தது. ஆனால் அந்தப் பழையாறை மோகினியின் பாசவலையில் நீ விழுந்து விட்டாய். அது போனால் போகட்டும். இப்போது புத்திசாலித்தனமாகப் பிழை! சத்தம் மட்டும் போட்டால் நீ சாவது நிச்சயம்!"

இவ்வாறு ரவிதாஸன் எச்சரித்து விட்டு எதிர்ப் பக்கத்துச் சுவரில் பொருந்தியிருந்த யானை முகத்தை நோக்கிப் போனான். சிறிது நேரம் சுவரண்டை காது கொடுத்துக் கேட்டான். பின்னர், அந்த யானையின் நீண்ட தந்தங்களைப் பிடித்துத் திருகினான்.

அங்கே ஒரு சிறிய துவாரம் ஏற்பட்டது. உள் அறையில் பிரகாசமாக ஜொலித்துக் கொண்டிருந்த தீபங்களின் ஒளி வட்ட வடிவமான பூரண சந்திரனுடைய வெள்ளிக் கிரணங்களைப் போல் வேட்டை மண்டபத்துக்குள்ளும் வந்து சிறிது பிரகாசப் படுத்தியது.

வந்தியத்தேவன் பக்கவாட்டில் திரும்பிப் பார்த்தான். இளவரசி மணிமேகலை தன் இடுப்பில் செருகியிருந்த சிறு கத்தியை எடுத்து அவளைக் கட்டியிருந்த கட்டுக்களை அறுத்து விட்டதைத் தெரிந்து கொண்டான்.

மணிமேகலை இடும்பன்காரியிடமிருந்து வாங்கிக் கொண்டு வந்த சிறிய விளக்கு, வேட்டை மண்டபத்தின் ஒரு மூலையில் 'முணுக்கு' 'முணுக்கு' என்று எரிந்து கொண்டிருந்தது. அதன் வெளிச்சம் மணிமேகலையின் மீது படவே இல்லை. மேலும் சதிகாரர்கள் வந்தியத் தேவனையே கவனித்துக் கொண்டிருந்தபடியால், கடம்பூர் இளவரசி மணிமேகலையைக் கவனிக்கவும் இல்லை.

மணிமேகலை கட்டை அவிழ்த்து விடுதலை அடைந்து விட்டதை வந்தியத் தேவன் கவனித்துக் கொண்டான்.

உடனே வாயைக் குவித்துக்கொண்டு ஆந்தை கத்துவது போல் கத்தினான்.

முதலில் சதிகாரர்கள் மூவரும் சிறிது பிரமித்து நின்றார்கள். திறந்த துவாரத்தின் வழியாக உள்ளே எட்டிப் பார்த்

துக் கொண்டிருந்த ரவிதாஸனும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்.

"ஆகா! உன் வேலையா?" என்று சொல்லிக்கொண்டு வந்தியத் தேவனை நோக்கி விரைந்து வந்தான்.

அவன் யானைத் தந்தங்களிலிருந்து கையை எடுத்ததும், சுவரிலிருந்து துவாரம் மறைந்தது. மறுபடியும் வேட்டை மண்டபத்தில் இருள் சூழ்ந்தது.

சதிகாரர்கள் மூவரும் கையில் வேல்களுடன் வந்தியத் தேவனை நோக்கி விரைந்து ஓடி வந்தார்கள்.

அவர்களில் ஒருவனை முறுக்கிய நீண்ட கொம்புகளை உடைய மான் தாக்கியது. இன்னொருவன் மீது பிரம்மாண்டமான கரடி ஒன்று விழுந்து அவனைக் கீழே தள்ளியது. மற்றொருவன்மீது திறந்த வாயையும் பயங்கரமான பற்களையும் உடைய முதலை பாய்ந்தது. ரவிதாஸன் தலைமீது ஒரு பெரிய ராட்சத வௌவால் தடாலென்று விழுந்தது.

இவ்விதம் திடீரென்று ஏற்பட்ட தாக்குதல்களினால் அவர்கள் ஒரு நிமிடம் செயலற்று நின்றபோது, மணிமேகலை வந்தியத்தேவனை அணுகி அவனுடைய கட்டுக்களை அறுத்து விட்டாள்.

வந்தியத்தேவன் இதுகாறும் தன்னைப் பிடித்துக் கொண்டிருந்த வாலில்லாக் குரங்கைத் தூக்கி அந்தச் சதிகாரர்கள் மேல் வீசி எறிந்தான்.

நால்வரும் தங்கள் மீது விழுந்த செத்த விலங்குகளின் உடல்களைத் தள்ளிவிட்டு மெதுவாகச் சமாளித்து எழுந்தார்கள். இதற்குள் வந்தியத்தேவன் கையில் வேல் ஒன்றை எடுத்துக் கொண்டிருந்தான். தாக்க வருகிறவர்களைத் திருப்பித் தாக்குவதற்குத் தயாராயிருந்தான்.

அச்சமயம் நந்தினி தேவியின் படுக்கை அறைக் கதவு நன்றாகத் திறந்தது.

வேட்டை மண்டபத்துக்குள் வெளிச்சம் புகுந்து பிரகாசப் படுத்தியது.

மறு கணம் நந்தினி தேவியும் வேட்டை மண்டபத்துக்குள்ளே பிரவேசித்தாள்.

"மந்திரவாதி! இது என்ன மூடத்தனம்? இங்கே என்ன தடபுடல் செய்கிறீர்கள்?" என்று கேட்டுக் கொண்டே மேலே வந்தாள். (தொடரும்)

## தாடிக்காரர் கனவு!



# 'தண்ணிப்பால்'




## ராஜாஜி

**ம**ந்தைவெளி கிழக் தெரு ராதா கிருஷ்ணப் பிள்ளை வீட்டில் ஆரவாரம்.

புதிதாக வாங்கிவந்த சிந்திப் பசு கன்று போட்டு விட்ட மகிழ்ச்சி. காளைக்கன்று, கண்ணைக் கவரும் அழகு. குழந்தை கோபாலு துள்ளிக் குதித்து ஒரே குதூகலமாகக் கூத்தாடினான்.

ராதாகிருஷ்ணன் மூன்று கறவைப் பசுக்களை வைத்துக் கொண்டு மயிலாப்பூரில் பால் விற்று, சந்தோஷமாக ஜீவனம் நடத்தி வந்தான். முந்நூறு ரூபாய்க்கு வாங்கிய சிந்திப் பசுவும் பால் நிறையக் கொடுத்து வந்தது.

* * *

**நா**ன்கு மாதங்களுக்குப் பின் ஏனோ தெரியவில்லை, பசு கொஞ்சம் இளைக்க ஆரம்பித்தது. பால் குறைந்து விட்டது. கன்றுக்குட்டியும் வரவர இளைத்துப் போய் ஒன்றுக்கும் பயன்படாது என்று தீர்மானித்து விட்டார்கள்.

ராதாகிருஷ்ணனும் அவன் மனைவியும் துயரத்தில் மூழ்கினார்கள். பசுவுக்காக வாங்கிய கடன் தீரவில்லை, முதலாளி தொந்தரவு அதிகமாயிற்று. செட்டியார் கல்லவர். ஆனால் அவர் என்ன செய்வார்?

"பசு இளைத்துப் போய் விட்டது. பால் சரியாகக் கறக்கவில்லை" என்றாள் ராதாகிருஷ்ணன் மனைவி.

"தீனி சரியா யில்லை போலிருக்கிறது. எப்படியானாலும் இதற்கு நான் என்ன செய்வேன்? உங்கள் அதிர்ஷ்டம்! நான் பாங்கியில் பணம் கட்ட வேண்டும்" என்றார் செட்டியார்.

"எங்கள் அதிர்ஷ்டம்தான், உண்மை. நீங்கள் என்ன செய்வீர்கள்! ஆனாலும் கொஞ்சம் தயவு செய்யுங்கள், இப்போது ரொம்ப கஷ்டமாக இருக்கிறது" என்று கெஞ்சினான் ராதாகிருஷ்ணன்.

* * *

**ஆ**றாவது மாதம் ஒரு சாயபு வந்து கன்றுக் குட்டியைப் பார்த்து விட்டு ராதாகிருஷ்ணனிடம் பேரம் பேசிக் கொண்டிருந்தான். குழந்தை கோபாலுவும் தாயாரும் கொஞ்சம் எட்டி, தூரத்தில் நின்றார்கள்.

"ஐந்து ரூபாய்க்கு மேல் கொடுக்க முடியாது" என்றான் சாயபு.

"அப்படிச் சொல்லவேண்டாம்; பத்து ரூபாயாவது கொடுங்கள்" என்றான் ராதாகிருஷ்ணன்.

"ஐயோ, முடியாது. தோல் கிராக்கி ரொம்பக் குறைந்து போச்சு" என்றான் மூஸ்தபா சாயபு.

"சரி, ஏழு ரூபாய் கொடுங்கள்" என்று சொல்லிப் பேச்சை முடித்தான் ராதாகிருஷ்ணன்.

ராதாகிருஷ்ணனுடைய மனைவியின் கண்களில் நீர் வடிந்தது. "கெட்ட காலம் இப்படி வந்து சூழ்ந்து கொண்டதே" என்று அவள் துயரப்பட்டாள்.

"கன்றுக் குட்டியைக் கொடுத்து விடாதே, அப்பா!" என்ருன் கோபாலு. கன்றைத் தடவித் தடவி முத்தமிட்டான். குழந்தைகளின் உலகமே வேறு. பசுவும் கன்றை நக்கிக் கொடுத்துக் கொண்டிருந்தது. ஒரோரு சமயம் கூடவே கோபாலுவையும் நக்கும். உவர்ப்புக்காகப் பசுக்கள் இவ்வாறு நக்கும் என்று பசு டாக்டர்கள் சொல்லுகிருர்கள். இருக்கலாம். ஆனல் இந்த 'விஞ்ஞான' சமாதானம் எனக்குப் பிடிக்கவில்லை.

• • •

மறுநாள் முஸ்தபா சாயபு வந்து ரூபாய் கொடுத்து விட்டு, கன்றுக் குட்டியைப் பிடித்துப்போய் விட்டான். அன்று வீட்டில் யாரும் பேசவில்லை. பெரும் பாவம் செய்துவிட்ட உணர்ச்சி புருஷன் மனைவி இருவருக்கும். "மாரியாயி! நீ தான் எங்களைக் காப்பாற்ற வேண்டும்!" என்று மனத்துக் குள்ளேயே சொல்லி வேண்டிக் கொண்டாள் ராதாகிருஷ்ணன் மனைவி.

பசு இங்கு மங்கும் ஏங்கிப் பார்த்து, ஒரு புதுக் குரலில் கத்த ஆரம்பித்தது. கண்களில் கோபமும் குழப்பமும் தாண்டவமாடிற்று. ராதாகிருஷ்ணன் சமாதானப்படுத்த முயன்ருன். ஆனலும் அதன் பதட்டம் அடங்கவில்லை. என்னவென்னவோ செய்து பார்த்தார்கள். பால் கறக்கவே முடியவில்லை.

கஷ்டமும் கவலையும் பெருந் தொகை போட்டு வாங்கிய பசுவின் மூர்க்கத்தனமும் எல்லாம் ஒன்று சேர்ந்ததில் ராதாகிருஷ்ணன் உள்ளம் துடித்தது. கடவுளை நிந்தித்தான். ஒரு முறத்தில் தவிடு வைத்துக் கொண்டு பசுவண்டை மெதுவாகப் போனன். சும்மா இருப்பதுபோல் இருந்து பசு திடீர் என்று தலையைத் தாழ்த்திற்று. ராதாகிருஷ்ணன் தூர விலகிப் போவதற்குள் அவனை முட்டித் தள்ளி விட்டது.

"ஐயோ!" என்று கதறிக் கொண்டு ராதாகிருஷ்ணன் கீழே விழுந்து புரண்டான். ரத்தமும் பெருகிற்று. தொடையில் பலமான காயம். மனைவியும் கதறினுள்.

தகப்பன் விழுந்து புரளுவதைப் பார்த்து ஆவேசமாக கோபாலு அங்கிருந்த ஒரு மூங்கில் குச்சியை எடுத்துப் பசுவை பட் பட் என்று அடித்தான். பசுவோ கோபம் தணிந்து கோபாலுவின் தலையை நக்க ஆரம்பித்தது. தான் செய்த தவறை உணர்ந்த மாதிரியே அதன் கண்களில் நீர் ததும்பிற்று.

ராதாகிருஷ்ணன் மனைவி அவன் காயத்துக்கு ஒரு பழந் துணியைக் கிழித்துக் கட்டி ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்ருள். காயம் சீக்கிரமாகவே சொஸ்தப்பட்டது.

• • •

கொஞ்ச நாளுக்குப் பிறகு, பாவம், சிந்திப் பசு பழையபடி சாதுவாகப் போயிற்று. கன்றை மறந்து விட்டு, கன்றில்லாமலே ஓரளவு பால் தரச் சம்மதித்தது. கோபாலு, தவிடு வைத்துக் கொண்டு பக்கத்தில் நிற்பான். அவன் நின்ருல்தான் பால் சுரக்கும். ஆனல் முன்னளவு இல்லை. அது இயற்கையின் வேலை, பசுவைக் குற்றம் சொல்லுவதற்கில்லை.

இரண்டு மாதம் கழித்து ராதாகிருஷ்ணன் பசுவை வேலூருக்குக் கொண்டு போய் ரூ. 200-க்கு விற்று விட்டுச் செட்டியாருக்குக் கட்டி விட்டான். இன்னும் கொஞ்சம் கடன் பாக்கிதான். அதற்கு என்ன செய்கிறது?

• • •

"இப்போதெல்லாம் பாலில் ஏன் இப்படித் தண்ணீர் சேர்த்து ஊரைப் பாழாக்குகிருர்கள்?" என்ருர் வக்கீல் இரத்தினசபாபதி தம் குமாஸ்தாவிடம்.

"ஆமாம்; எல்லாரும் கெட்டுப் போனுர்கள்" என்ருர் குமாஸ்தாவும்.

வாசலில் ராதாகிருஷ்ணன் ஒரு மயிலை நிறப் பசுவைப் பிடித்து, பால் கறந்து கொடுக்கக் காத்திருந்தான். வீட்டு எஜமானி வருவதற்காகக் காத்துக் கொண்டிருந்தான். பக்கத்தில் கோபாலுவும் ஒரு பித்தளைத் தகடு பாத்திரம் வைத்துக் கொண்டு நின்ருன். பாத்திரத்தைத் தலை கீழாகத் திருப்பி வீட்டுக்காரியம்மாவுக்குக் காட்டிய பிறகுதான் பால் கறக்க வேண்டும். ஆனலும் அந்த அம்மாளின் சந்தேகம் தீராது.

வக்கீல் இரத்தின சபாபதிக்குத் தண்ணீர்ப் பால் கலந்த காப்பி பிடிப்பதில்லை, மனைவியைக் கோபிப்பார். சில சமயம் "இந்தப் பால்க்காரர்களைக் கண்டிக்க ஏன் சர்க்கார் கடுமையான சட்டம் செய்ய மாட்டேன் என்கிருர்கள்!" என்பார்.

அவரவர்கள் கஷ்டம் அவரவர்களுக்குத்தானே தெரியும்?



# கீதா

## ரசம் சாம்பார் பொடி

மூன்றே நிமிஷத்தில் ருசியுள்ள ரசம், சாம்பார், கறி முதலியன தயார் செய்யலாம். (உப்பு, புளி எல்லாம் இதிலேயே அடங்கியுள்ளன.)

சாம்பிள் பாக்கெட் அணா 10




கீதா & கோ., 42, நாகப்பையர் தெரு, சென்னை 5

உயர்தர சிகரெட்டுகள்




SCISSORS

S/G/230A

# WANTED AGENTS

to Secure Orders for our

## CALENDARS

LARGE VARIETIES : LOWEST PRICES

HIGHEST WORKMANSHIP

*Apply for terms and literature to:*

**ORIENTAL CALENDAR Mfg. CO.**

Section 49, P. B. No. 11212 :: CALCUTTA - 14




## 5. அவள் திரும்பினாள்!



நந்த குமாரனிடம் விடை பெற்றுச் சென்ற பிரபா, நேரே தன் இருப்பிடத்துக்குச் சென்றாள்.

செல்லும் வழியெல்லாம் பிரபா, நந்த குமாரனைப் பற்றியே நினைத்துக் கொண்டு சென்றாள். அவன் குழலோசையின் இனிமையை வியந்து கொண்டே சென்றாள். ஏன், அவள் காதில் அந்த இன்னோசை சதா ஒலித்துக் கொண்டே யிருந்தது.

இப்படிச் சென்ற பிரபா, வீட்டை யடைந்த போது, அவளை மந்திரவாதி வரவேற்றான். "என்ன பிரபா, தனியாக வருகிறாயே, லக்ஷ்மி எங்கே?" என்று கேட்டான்.

அப்போதுதான் அவளுக்கு லக்ஷ்மியின் நினைவு வந்தது. "அடாடா! லக்ஷ்மியைக் காட்டில் விட்டு விட்டு வந்து விட்டேனே" என்று அலறிப் புடைத்துக் கொண்டு திரும்பி ஓட முயன்றாள்.

அந்தச் சமயம் மந்திரவாதி சிரித்துக் கொண்டு, "பிரபா, எங்கே ஓடுகிறாய்? லக்ஷ்மி உனக்கு முன் வீட்டுக்குத் திரும்பி வந்து விட்டது. நீதான் நேரம் கழித்து வந்திருக்கிறாய். ஏன் உனக்கு இத்தனை நாழிகை?" என்று கேட்டான்.

அதற்குப் பிரபா, "தாத்தா, காட்டில் ஒருவர் புல்லாங்குழல் வாசித்துக் கொண்டிருந்தார். அந்த இனிய கானத்தைக் கேட்டுக் கொண்டே யிருந்தேன். நேரம் போனதே தெரியவில்லை" என்றாள்.

*  *  *

அடுத்த நாள் மாலை, அதே நேரத்துக்குக் குழலோசை காற்றினில் மிதந்து வந்து அவள் காதில் ஒலித்தது. அந்த நேரம் பிரபா, மாட்டுக் கொட்டிலில் லக்ஷ்மிக்குத் தண்ணீர் காண்பித்துக் கொண்டிருந்தாள். இந்தக் குழலோசை காதில் விழுந்ததும் பிரபா அப்படியே மெய் மறந்து நின்று விட்டாள். பிறகு குழல் வந்த திசையை நோக்கி விரைந்தாள். ஏன், ஓடினாள் என்றே சொல்ல வேண்டும். அப்போது, "பிரபா! எங்கேபோகிறாய்?" என்று குரல் வந்தது. பிரபா சற்றுத் தயங்கினாள்.

ஆம், அவளைக் கூப்பிட்டது மந்திரவாதிதான். மந்திரவாதியினிடம் சொல்லிக் கொள்ளாமல் பிரபா வெளியில் போனதே கிடையாது. இன்று கேட்காமல் வெளியே போகவே, மந்திரவாதிக்கு மனசு 'திக்' என்றது.

"தாத்தா, சற்று நேரம் புல்லாங் குழலைக் கேட்டு விட்டு வருகிறேன்" என்றாள் இளவரசி பிரபா.

"சரி, போய் வா!" என்றான்.

பிரபா சென்ற பிறகு, மந்திரவாதி தன்னைப் பற்றியே ஒரு கணம் நினைத்துப் பார்த்துக் கொண்டான். 'அடாடா! எனக்கு என்ன நேர்ந்து விட்டது! பிரபா, 'போகிறேன்' என்றவுடன் 'போய் வா' என்று கூறுகிறேனே? நிஜமாகவே நான் நான்தானா? என் உள்ளத்தில் கூட இவ்வளவு அன்பு இருக்கமுடியுமா? வாழ்க்கை முழுவதும் கொடுமையே செய்து வந்த என் உள்ளத்திலும் இவ்வளவு அன்பா?' என்று எண்ணி எண்ணி வியந்தான்.

இதற்குப் பின் சுமார் ஒரு மாத காலத்திற்கு மேல் பிரபாவும் நந்தகுமாரனும் தினம் வனத்தில் சந்தித்துப் பேசி வந்தனர். சாயங்காலமானால் நந்தகுமாரன் குழல் எடுத்து ஊதுவான்; அதற்காகக் காத்திருக்கும் பிரபா, அந்தக் குழலோசை காதில் விழுந்ததும் கானகத்தை நோக்கி ஓடுவாள். இப்படி ஒரு வழக்கம் அவர்களுக்குள் நிலைத்து விட்டது.

ஒரு நாள் பிரபாவும் நந்தகுமாரனும் பேசிக் கொண்டே காட்டில் வெகு தூரம் சென்று விட்டார்கள். நன்றாக இருட்டி விட்டது; வானில் பூரண சந்திரனும் உதித்து விட்டான். அப்போதுதான் பிரபா வெகு நேரமாகி விட்டதை யுணர்ந்தாள். உடனே, "ராஜகுமாரா, நான் போய் வருகிறேன்! தாத்தா எனக்காகக் காத்திருப்பார்!" என்றாள்.

"பிரபா, ஒரு நாளைப் போல் 'தாத்தா, தாத்தா' என்று உயிரை விடுகிறாயே! எனக்கானால் உன்னை விட்டுப் பிரியவே மனம் வரவில்லை. நீ என்னுடன், வந்து விடு. இந்தக் காட்டை விட்டு வெளியேறி வேறு ஒரு நகரத்துக்குப் போவோம். அங்கே நாமிருவரும் கல்யாணம் செய்து கொண்டு இன்பமாகக் குடித்தனம் நடத்துவோம்" என்றான் நந்தகுமாரன்.



"சே, சே, இதெல்லாம் என்ன பேச்சு! என் தாத்தாவை விட்டு விட்டு நான் எங்கேயும் வரமாட்டேன்" என்றான்.

"அப்படியானால் நானாவது உன் தாத்தாவை வந்து பார்த்து உன்னை எனக்குக் கல்யாணம் செய்து தரும்படி கேட்கிறேன்" என்றான் நந்தகுமாரன்.

"வேண்டாம், வேண்டாம்! நீ நான் இருக்கு மிடத்துக்கு வரக் கனவில்கூட நினைக்கக் கூடாது! என்னைத் தப்பித்தவறி நான் இருக்குமிடத்தில் பார்க்க வந்தாயோ, அல்லது என் தாத்தாவை நேரில் பார்த்துக் 'கல்யாணம் பண்ணிக் கொடு' என்று கேட்டாயோ, பெரிய ஆபத்துத்தான் ஏற்படும். அதனால் தயவு செய்து அம்மாதிரி முயற்சிகளில் எதிலும் முற்படாதே!" என்று கூறி விட்டுத் திரும்பி விட்டாள்.

பின்னர், பிரபாவைச் சந்திக்கும் நாள் எல்லாம் நந்தகுமாரன், "நாம் கண் காணாத தேசத்துக்குப் போய் விடுவோம்" என்று சொல்லி வந்தான்.

சுரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும் என்று சொல்லுவார்கள் அல்லவா? அம்மாதிரி, பிரபாவின் உள்ளமும் ஒரு நாள் நெகிழ்ந்து விட்டது. நந்தகுமாரனுடன் காட்டை விட்டு வெளியேறத் துணிந்து விட்டாள். மந்திரவாதி தாத்தாவைத் துறந்து விட்டுப் போகத் துணிந்து விட்டாள். நந்தகுமாரனுடன் உல்லாசமாகப் பேசிக் கொண்டே நடந்து போகவும் ஆரம்பித்து விட்டாள்.

கொஞ்ச தூரம் நடந்தாள். காட்டின் எல்லையை அடைந்து விட்டாள். இன்னும் ஒரு அடி எடுத்து வைத்தால் காட்டைக் கடந்து ஒரு தேசத்தின் எல்லையில் கால் அடி எடுத்து வைத்து விடுவாள்! ஆனால் அந்தோ பரிதாபம்!

அந்தச் சமயம் சம தரையாக இருந்த பூமியில் பயங்கரப் பிளவு ஏற்பட்டது! இன்னும் ஒரு அடி எடுத்து வைத்தால், வேற்று நாட்டை அடைந்து விடலாம் என்றிருந்த நிலை போய் விட்டது. அதற்கு மாறாக இன்னும் ஒரு அடி எடுத்து வைத்தால், மதியைக் கலக்கும் பயங்கர பள்ளத்தில், கிடு கிடு பள்ளத்தில் விழ வேண்டியதுதான் என்ற நிலைமை ஏற்பட்டிருந்தது. இதைப் பார்த்து அப்படியே திக்பிரமை பிடித்து நின்று விட்டனர், பிரபாவும், நந்தகுமாரனும்!

கொஞ்ச நேரமாயிற்று, பிரபாவுக்கும் நந்தகுமாரனுக்கும் அந்தப் பிரமையிலிருந்து விடுபட. பிறகு கொஞ்ச நேரம் ஒருவரை யொருவர் பார்த்தனர். என்ன பேசுவது என்றே அவர்களுக்குப் புரியவில்லை. பிறகு பெரிய விக்கலுக்கும் விம்மலுக்குமிடையே, "ராஜகுமாரா, என்னை மன்னித்து விடு! நான் உன்னுடன் வரவில்லை. எனக்குப் பயமா யிருக்கிறது!" என்றாள் பிரபா.

"பிரபா, நீ ஏன் அழுகிறாய்? உனக்கு ஏன் பயமா யிருக்கிறது? இதெல்லாம் பற்றி, இந்தப் பள்ளம் நேர்ந்ததைப் பற்றி உனக்கு ஏதாகிலும் தெரியுமா? தெரிந்தால் எனக்குச் சற்று விவரமாகச் சொல்லேன்!" என்று கெஞ்சினான்.

"ராஜகுமாரா, என் தாத்தா ஒரு மந்திரவாதி. அவருக்கு இருந்த இடத்திலிருந்தே, எல்லா விஷயங்களும் அறிந்து கொள்ளும் சக்தியுண்டு. அந்தச் சக்தியின் மூலம் தான் இன்று நான் அவரை விட்டு விட்டு உன்னுடன் போகிறேன் என்பது அவருக்குத் தெரிந்து விட்டது. அதைத் தடுக்கவே தமது மந்திர சக்தி மூலம் இப்படி யொரு பெரிய அகழி யுண்டாக்கி யிருக்கிறார். ஆகவே, ராஜகுமாரா! நான் திரும்பிப் போகிறேன், என்னை மன்னித்து விடு!" என்று கூறிவிட்டுத் திரும்பினாள்.

அவனுக்குப் போக மனமில்லை. ஆம், திரும்பிச் சென்றால் மந்திரவாதி தனக்கு என்ன தண்டனை வைத்திருக்கிறாரோ என்று பயந்தான். ஆனால், மந்திரவாதியினிடமிருந்து தப்பிச் செல்லலாம் என்றாலும் வழியில்லை. இப்படி அவள் உள்ளம் இருதலைக் கொள்ளி எறும்பைப் போல் துடித்தது! பிறகு என்ன வானாலும் ஆகட்டும் என்று மனசைத் திடப்படுத்திக் கொண்டு முன்னேறினாள்.

நந்தகுமாரன், அவள் செல்லும் திசையையே பார்த்துக் கொண்டே நின்றான். பிரபா, அவன் கண் பார்வையிலிருந்து மறையும்வரை பார்த்துக் கொண்டேயிருந்தான். அவள் மறைந்ததும் மிகவும் மனச் சோர்வுடன் திரும்பினான். என்ன ஆச்சரியம்! சற்று முன் பெரிய பள்ளமாக இருந்த இடம் பழையபடி சம தரையாக மாறி இருந்தது! (தொடரும்)

# சம்பளம் எவ்வளவு?





**எம். எல். சபரிராஜன்**

காலை நேரம், மணி பத்தரை இருக்கும், ஜனங்கள் சுறுசுறுப்பாக அங்குமிங்கும் போய்க் கொண்டிருந்தார்கள். அமிஞ்சிக் கரை பஸ்-ஸ்டாண்டை விட்டுச் சென்னை சர்க்கார் பஸ் புறப்பட்டுக் கொண்டிருந்தது. கண்டக்டர் ஊது குழல் கூட ஊதிவிட்டான். அப்போது, "ஹோல்டான்!" "ஹோல் டான்!" என்று ஒரு குரல்—பரிதாபக்—குரல் கேட்டது. கண்டக்டர் திரும்பிப் பார்த்தார். ராஜகோபாலன் கையில் டிபன் பையுடன் விறுவிறுக்க ஓடிவந்து கொண்டிருந்தான். அப்போது அவன் ஓடிய வேகத்தைப் பார்த்தால், பஸ் அறுபது மைல் வேகத்தில் போயிருந்தாலும் கூட எட்டிப் பிடித்து விடுவான் போலிருந்தது.

"இந்த ஐயா, எப்பவும் இப்படித்தான்" என்று சலித்துக் கொண்டார் கண்டக்டர். பாவம், அவருக்கென்ன தெரியும் ராஜகோபாலன் நிலைமை!—பஸ் சற்று நேரம் நின்றது. ராஜகோபாலன் 'தாங்க்ஸ்' என்று சொல்லி விட்டு வண்டியில் ஏறினான்.

* * *

ராஜுவின் தந்தை கோவிந்தராஜ நாயுடு சுமாரான ஒரு விவசாயி. சில புலங்கள் ரொம்ப இல்லாவிட்டாலும், இருப்பதை வைத்துக் கொண்டு கௌரவமாய்க் காலந் தள்ளி வந்தார். அவருக்கு மொத்தம் ஆறு குழந்தைகள்; ஒரு பையன், ஐந்து பெண்கள். ராஜு உள்ளூரில் படித்து, எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் சிறப்பாய்த் தேறினான். நாயுடுவுக்குப் பையன்மேல் ரொம்ப ஆசை. நன்றாக அவனைப் படிக்க வைத்து, முன்னுக்குக் கொண்டு வந்துவிட வேண்டுமென்று விரும்பினார். உழவுத் தொழில்மீது அவருக்கு மட்டமான அபிப்பிராயம் இருந்தது. அதை ரொம்ப ரொம்பத் தாழ்வாக நினைத்தார். "நான்தான் இப்படி ஆகிவிட்டேன். என் பையனையும் இதில் இறங்கவிட மாட்டேன்" என்று மனத்தை உறுதி செய்து கொண்டார். ஆகையால், ராஜுவைப் பட்டணத்துக்கு அனுப்பி, மேலே படிக்க வைத்தார். மாதம் அறுபது-எழுபதுக்கு மேலேயே பணம் அனுப்பினார். சக்திக்கு மிஞ்சிய செலவு. கடன் வாங்கியே அனுப்பி வந்தார். படிப்பைப் பொறுத்தவரையில், பையன் கெட்டிக்காரன்தான். எப்போதும் புத்தகமும் கையுமாய் இருப்பான். ஒவ்வொரு ஆண்டும் ஒவ்வொரு வகுப்பாய்த் தேறி வந்தான். நாலாவது வருஷக் கடைசியில் பி. ஏ. பட்டம் பெற்றான். நாயுடுவுக்கு ஏற்பட்ட சந்தோஷம் சொல்லி முடியாது.

செலவு மொத்தம் மூவாயிரத்தை எட்டிப் பார்த்தது. "பூ, என்ன பிரமாதம்! பையனுக்கு ஒரு நல்ல வேலை கிடைத்துவிட்டால், இது எம்மாத்திரம்?" என்று சொல்லிக் கொண்டார்.

உத்தியோக வேட்டை தொடங்கிற்று. விண்ணப்பங்கள் நாளொன்றுக்குப் பத்தாய்ப் பறந்தன. தந்தையும் மகனும் நேரிலே போய்ப் பலரைப் பார்த்தார்கள். ரயிலிலும் மோட்டாரிலும் அலைந்தார்கள். ஒன்றும் நடக்கவில்லை. நாயுடுவுக்கு இப்போதுதான் விஷயம் விளங்கியது. அவர் உற்சாகம் குன்றிப் போனார். கட்டிய கோட்டையெல்லாம் இடிந்து விட்டது போலிருந்தது அவருக்கு. கடைசியில் ரொம்பச் சிபார்சின் மேல், சென்னை செக்ரடேரியட்டில் ஒரு குமாஸ்தா உத்தியோகம் கிடைத்தது. சம்பளம், அலவன்ஸ் உள்பட மொத்தம் எண்பது ரூபாய் தான். சும்மா இருப்பதற்கு அந்த வேலையாவது கொஞ்ச காலம் பார்க்கலாமென்று

நாயுடுவுக்குத் தோன்றியது. தவிரவும், அவருக்குத் தெரிந்தவர் ஒருவர் சொன்னார். "செக்ரடேரியட் ஒரு கோட்டையில் இருக்கிறது. அதற்குள்ளே புகுந்துவிட்டால், சர்க்கார் கோட்டையையே பிடித்தது மாதிரி. கொஞ்ச நாளைக்குப் பிறகு நிச்சயமாய்ப் பெரிய வேலை கிடைக்கும்." நாயுடுவுக்கும் இது கொஞ்சம் நம்பிக்கை அளித்தது.

பையன் பட்டணத்துக்குப் போய் வேலையில் அமர்ந்தான்.

அடுத்தபடியாகக் கல்யாணம் நடக்க வேண்டும் அல்லவா? அவன் தமக்கை மூன்று வருஷமாய்த் தன் செல்வப் புதல்வியை அவனுக்காக வைத்துக் கொண்டிருந்தாள். கல்யாணம் நடந்தது. ராஜு குடித்தனம் வைத்தான்; எண்பது ரூபாயை வைத்துக் கொண்டு பட்டணத்தில் காலந் தள்ள முடியுமா?

ஆகையால் ராஜுவின் தந்தை அவன் குடும்பச் செலவுக்காக மாதம் இருபது ரூபாய் ஊரிலிருந்து அனுப்பி வந்தார்.

ராஜுவுக்கு வாழ்க்கையில் கொஞ்சங் கூட உற்சாகமே இல்லாமற் போய்விட்டது. எப்போது பார்த்தாலும் அவன் முகத்தில் கவலை ததும்பி யிருந்தது. சிரிப்பை அவன் முகத்தில் காண்பதே அபூர்வமாய் விட்டது. அதை அவன் மறந்தே போய்விட்டான் என்று கூடச் சொல்லலாம். குடும்பக் கவலை; அத்துடன், "ஏராளமாய்ப் பணச் செலவு செய்து தன்னைப் படிக்க வைத்தது மட்டுமல்லாமல், இப்போது குடும்பச் செலவுக்காகவும் அப்பா பணம் அனுப்ப வேண்டியதா யிருக்கிறதே!" என்பதை நினைத்தபோது, அவனுக்குச் சொல்ல முடியாத வேதனை ஏற்பட்டது. சாப்பிடப் பிடிக்கவில்லை. எதைக் கண்டாலும் ஒரே வெறுப்புத்தான். உயிரற்ற ஓர் இயந்திரம் போல நாளைக் கழித்து வந்தான். இதுதான் அவன் கதை.

* * *

அன்று பஸ்ஸில் கூட்டம் அதிகமாயில்லை. இடம் இலகுவாய்க் கிடைத்தது. அதாவது உட்காருவதற்கு, நன்றாய் நீட்டி நிமிர்ந்து. தோளை 'ஸீட்'டில் சாய்த்துக் கொண்டு ராஜாமாதிரி உட்கார்ந்தான். நெற்றியிலிருந்த வியர்வையைக் கைக்குட்டையால் துடைத்து விட்டு, சுற்றிலுமிருந்த பிரயாணிகளை ஒரு முறை சாவகாசமாய்ப் பார்த்தான். அருகே—தன்னருகே, உட்கார்ந்திருந்த ஆள் கவனத்தைக் கவர்ந்தார். ஆசாமி கறுப்பா யிருந்தார். தலையில் குடுமி வைத்திருந்தார். க்ஷவரம் செய்து கொள்ளாததால் முகத்தில் மயிர் அடர்த்தியாக வளர்ந்திருந்தது. கசங்கிப் போன ஒரு சட்டை போட்டிருந்தார். வாடிப்போன வெற்றிலையை ஒவ்வொன்றாய் எடுத்துச் சுண்ணாம்பு தடவி வாயில் போட்டு மென்று கொண்டிருந்தார். நீங்களோ நானோ அவரைப் பார்த்திருந்தால், பொருட்படுத்தி யிருக்கவே மாட்டோம். 'யாரோ ஒரு பட்டிக்காட்டான்' என்று அலட்சியமாகப் போயிருப்போம். ஆம், ஒரு விசேஷமும் கிடையாது. ஆனால், ராஜுவுக்கு என்னவோ அந்தப் பேர்வழியிடம் ஒரு விசேஷம் தென்பட்டது. அவருடன் பேச்சுக் கொடுக்க விரும்பினான். ஆனால், முன் பின் தெரியாதவருடன் பேச அவனுக்குக் கூச்சமா யிருந்தது. அந்த ஆசாமியின் முகத்தைப் பார்ப்பதும் பிறகு வெளியே பார்ப்பதுமாக இருந்தான்.

பஸ், சென்ட்ரல் ஸ்டேஷனை அணுகி விட்டது. ராஜு தைரியத்தை வரவழைத்துக் கொண்டு. "உங்களுக்கு எந்த ஊர்?" என்று அவரைக் கேட்டான்.

வெளியே பார்த்துக் கொண்டிருந்த அந்த ஆசாமி 'சட்'டென்று திரும்பிப் பார்த்து விட்டு, "என்னைக் கேட்கிறீர்களா?" என்றார்.

"ஆமாம்" என்றான் ராஜு.

"எனக்குத் தெக்கே தொலைவுங்க—ராமநாதபுரம் ஜில்லாவுலே திருப்பத்தூரு என்று ஒரு ஊரு; தெரியுங்களா?"

ராஜுவின் முகத்தில் ஒரு மெல்லிய புன்னகை ததும்பியது. அடேயப்பா, எத்தனை நாளைக்குப் பிறகு! (ஜில்லா அபிமானம் முற்றும் துறந்த முனிவர்களைக்கூட விடாது போலும்!) திருப்பத்தூருக்குப் பக்கத்திலே தான் ராஜுவின் ஊரும் இருக்கிறது.

"தெரியும், நன்றாய்த் தெரியும் அந்த ஊரை" என்றான் ராஜு.

"எப்படி?—அந்தப் பக்கம் வந்திருக்கீங்களா?" என்றார் அவர்.

"இரண்டொரு தடவை வந்திருக்கிறேன்" என்றான் ராஜு மறுபடியும் சிரித்துக் கொண்டே.

"உங்களுக்கு எந்த ஊருங்க?"

ராஜு உண்மையைச் சொல்ல விரும்பவில்லை. பேச்சு மிகவும் நீண்டு விடுமென்று கருதினான். ஆகையால், "எனக்கு இந்த ஊர்தான்" என்று ஒரு பொய்யைச் சொன்னான்.

"பொறந்து வளர்ந்ததெல்லாம் இந்த ஊர் தானா?" என்று கேட்டார்.

"ஆமாம்!"

இந்தச் சமயத்தில் டிக்கட் பரிசோதகர் வந்து குறுக்கிட்டார். அவர் போனதற்கப்புறம் ராஜு மறுபடியும் பேச்சைத் தொடங்கினான்.

"இப்போதெல்லாம் ராமநாதபுரம் ஜில்லாக்காரங்க இந்தப் பக்கம் அதிகமாய்த் தென்படுகிறார்களே, ஏன்?"

"என்ன பண்றதுங்க? நாலு வருசம், அஞ்சு வருசமா மழையே இல்லீங்க. பயிர் பச்சையெல்லாம் கருகிப் போச்சு. குடிக்கத் தண்ணீர் கிடையாது. குழந்தை குட்டிகளை வச்சுக்கிட்டு நாங்க எவ்வளவோ கஷ்டப் பட்டோம். கடைசியிலே, பஞ்சம். பொழைக்கிறதுக்காக இங்கே வந்தோம்."

"இங்கே எல்லோருக்கும் வேலை கிடைக்கிறதா?" என்று கேட்டான் ராஜு.

"பட்டணம் பெரிசு இல்லீங்களா? பணப் பொழக்கமும் சாஸ்தி. ஒரு எடத்துலே இல்லாவிட்டாலும் இன்னொரு எடத்துலே வேலை கிடைச்சுக்கிட்டே இருக்கும்."

இதைக் கேட்டு ராஜுவுக்கு ரொம்ப ஆச்சரியமா யிருந்தது.

"உங்களுக்கு என்ன வேலை?" என்று கேட்டான்.

"தச்சு வேலைங்க. ராயபுரத்திலே ஒரு ஐயா பெரிய பங்களா கட்டுறாரு. அதுக்கு வேண்டிய சாமானை யெல்லாம் நானும் இன்னும் அஞ்சாறு பேரும் செய்து குடுக்குறோம்."

"சம்பளம் எவ்வளவு?"

"தினசரிக் கூலிதானுங்க—ஒரு நாளைக்கு மூணரை ரூபா."

ராஜு கணக்குப் போடத் தொடங்கினான். அவனுக்குக் கணக்குச் சரியாய் வராது. ஆனால், இந்தச் சம்பள விஷயத்தில் மாத்திரம் எப்பேர்ப்பட்ட தொகையையும் மிக்க எளிதாய்க் கண்டு பிடித்து விடுவான்.

ஒரு நாளைக்கு மூன்றரை ரூபாய். ஒரு மாசத்துக்கு? $30 \times 3 = 90$; $30 \times \frac{1}{2} = 15$; $90 + 15 = 105$. மொத்தம் நூற்று ஐந்து ரூபாய்.

மூத்திருளாண்டித் தேவருக்கு—அதுதான் அந்த ஆசாமியின் பெயர்—ஒரு மாசத்துக்கு நூற்று ஐந்து ரூபாய். ஆரம்பப் பள்ளிக் கூடத்தைக் கூட அந்த ஆள் எட்டிப் பார்த்திருக்க மாட்டார். ஆனால், மிஸ்டர் ராஜு பி. ஏ.,க்கு எண்பது ரூபாய். எப்படி இருக்கிறது விஷயம்! இந்த எண்பது ரூபாய்க்குக் கூட அவன் எவ்வளவு கஷ்டப்பட வேண்டியதாயிருக்கிறது? யார் யாரை அடி பணிய வேண்டியதா யிருக்கிறது? அது இருக்கட்டும்-அந்த வேலை கிடைப்பதற்குக் கூட அவன் என்ன பாடுபட வேண்டியதா யிருந்தது!—படிப்பு, படிப்பு, நாசமாய்ப் போன படிப்பு! இன்னும் மூன்று தங்கைகளுக்குக் கல்யாணமாக வேண்டும்—அடாடா, பி. ஏ. படிப்பதற்குப் பதிலாக ஒரு கொத்து வேலையோ தச்சு வேலையோ படித்திருக்கலாமே! ஏன், ஏதோ ஓரளவு உள்ளூரில் படித்து விட்டு, பேசாமல் கிராமத்தில் நிலபுலங்களைக் கவனித்துக் கொண்டிருந்தாலுங் கூட அப்பாவுக்கு உதவியா யிருந்திருக்குமே......! அடாடா......அடாடா!

"ஐயா படிக்கிறீஹளா?"—திடீரென்று தேவர் கேட்டார்.

ராஜுவுக்கு வயது இருபத்தைந்து ஆகிவிட்ட போதிலும் பார்ப்பதற்குப் பள்ளிச் சிறுவன் மாதிரியே இருப்பான்.

"இல்லை. எனக்குப் படிப்பெல்லாம் ஆகிவிட்டது" என்றான் ராஜு பெருமூச்சு விட்டுக் கொண்டே.

"எது வரையிலும் படிச்சிருக்கிஹ?"

"படிச்சிருக்கேன் பி. ஏ., வரையிலும்" என்று அலுப்புடன் சொன்னான் ராஜு.

"இப்போ வேலை பாக்கிறீஹளா?"

"ஆமாம்."

"என்ன வேலைங்க?"

"ஏதோ ஒரு ஆபீசில் இருக்கிறேன்" என்று ரொம்ப சங்கடத்தோடு சொன்னான்.

"சம்பளம் எவ்வளவுங்க?"

திடுக்கிட்டான் ராஜு. என்ன பதில் சொல்வது இதற்கு? தலை சுற்றுவது போலிருந்தது. நல்ல வேளையாக அருகே ஒரு 'ஸ்டாப்' இருந்தது. "ஹோல்டான்!" என்று பலமாகக் கத்திக் கொண்டே எழுந்தான். வண்டி நின்றது. முண்டியடித்துக் கொண்டு, அவசர அவசரமாய்க் கீழே இறங்கினான். எதிர்ப் புறத்திலிருந்த சந்துக்குள் மறைந்தான்.

பாவம், அவன் வழக்கமாக இறங்கும் இடம் இன்னும் இரண்டு பர்லாங்குக்கு அப்பால் இருந்தது!

# காந்தி நகரில் கலை நிகழ்ச்சிகள்

அடையாற்றிலுள்ள கலாக்ஷேத்திரம் மூன்னரே பிரசித்தி யடைந்திருக்கும் ஸ்தாபனம். ஸ்ரீமதி ருக்மணி தேவியின் மூலம் அகில இந்தியாவிலும் மேனாட்டிலுங்கூடக் கலா க்ஷேத்திரம் புகழ் அடைந்திருக்கிறது. இந்த ஆண்டில் அந்த ஸ்தாபனத்திற்கு மற்றொரு மாபெரும் சிறப்புக் கிட்டி யிருக்கிறது. சங்கீத கலாநிதி காரைக்குடி ஸ்ரீ சாம்பசிவய்யர் அவர்கள் கலா க்ஷேத்திரத்தின் தலைமைப் பேராசிரியராக அமர்ந்திருக்கிறார்கள். இதுவரையில் அப்பெரியார் ஒரு ஸ்தாபனத்தில் அமர்ந்து மாணவ மாணவிகளுக்கு இசைப்பயிற்சி அளிக்க முன்வந்தது கிடையாது. ஸ்ரீ சாம்பசிவய்யரைக் கலா க்ஷேத்திரத்தில் கொண்டு வந்து சேர்த்தது, ஆகாச கங்கையைப் பகீரதன் பூவுலகத்துக்குக் கொண்டு வந்ததை யொத்த கைங்கரியம் என்று சொல்லலாம்.

புராதனமான கர்நாடக சங்கீதம், பரத நாட்டியம் ஆகிய கலைகளுக்கு ஸ்ரீமதி ருக்மணி தேவி செய்திருக்கும் அருந்தொண்டுகளை நாம் அறிந்திருக்கிறோம். பரத நாட்டியக் கலைக்குப் புத்துயிர் அளித்து வளர்த்து வருவது மட்டுமன்றி, அதன் சிறப்பை உலகெங்குமுள்ள கலை அன்பர்கள் அறிந்து கொள்ளுமாறு பெரும் பிரயத்தனம் செய்து வருகிறார். ஸ்ரீ சாம்பசிவய்யரைக் கலாக்ஷேத்திரத்தின் பேராசிரியராகும்படி செய்ததின் மூலம் கர்நாடக சங்கீதத்துக்கு இப்போது அரும்பெரும் தொண்டு செய்தவராகிறார்.

* * *

அடையாறு கலாக்ஷேத்திரத்தில் ஸ்ரீ சாம்பசிவய்யரின் வீணையில் எழும் நாதம் கடற்காற்றில் மிதந்து அருகிலுள்ள காந்தி நகரிலும் பரவுவது இயல்பே யல்லவா! இதன்பயனாக, காந்தி நகரிலுள்ளவர்கள் பலர் கலை உணர்ச்சி பெற்று வருகிறார்கள். காந்தி நகர் கிளப்பின் ஆதரவில் அடிக்கடி அருமையான கலை நிகழ்ச்சிகளை ஏற்படுத்தி வருகிறார்கள்.

ஆகஸ்டு மாதம் 2-உ ஸ்ரீமதி மீனலோசனி ராமஸ்வாமியின் வாய்ப் பாட்டுக் கச்சேரி நடக்

தது. ஸ்ரீமதி மீனலோசனி இனிய குரலைப் படைத்திருக்கிறார். நல்ல முறையில் சங்கீதக் கலை பயின்றிருக்கிறார். கர்நாடக சுத்தமான பாணியில் ராக ஆலாபன முறைகளைக் கையாளுகிறார். உருப்படிகளையும் நன்றாகப் பாடுகிறார். இந்த இளம் பாடகியின் கச்சேரிக்குச் சங்கீத கலாநிதி ஸ்ரீ சாம்பசிவய்யர் விஜயம் செய்து மங்களம் பாடும் வரையில் சபையில் வீற்றிருந்து ஆசி கூறினார். ஸ்ரீமதி மீனலோசனியின் சங்கீதத்துக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறதென்று எதிர்பார்க்கலாம்.



ஸ்ரீமதி மீனலோசனி

* * *

கர்நாடக சங்கீத உலகில் இப்போது வழங்கிவரும் சாஹித்தியங்களில் மிகப் பழமையானது ஸ்ரீ ஜயதேவர் இயற்றிய "கீத கோவிந்தம்" என்பது அனைவரும் அறிந்ததே. பிருந்தாவனத்தில் பாலகோபாலன் செய்த லீலைகள் உயர்தரமான கவிதா ரஸத்துடன் "கீத கோவிந்த"ப் பாடல்களாக இயற்றப் பட்டிருக்கின்றன. கீத கோவிந்தப் பாடல்களை ஸ்ரீ ஜயதேவர் என்ன வர்ண மெட்டுக்களில், எந்த சங்கீத பாணியில் அமைத்தார் என்பது நமக்குத் தெரியாது. தென்னாட்டில் அவற்றுக்குக் கர்நாடக சங்கீத ராகங்களில் மெட்டுக்கள் அளிக்கப்பட்டு அஷ்டபதி என்ற பெயருடன் திவ்ய நாம சங்கீர்த்தன பஜனைகளிலும் ராதா கல்யாண மகோத்ஸவங்களிலும் நீண்ட காலமாகப் பாடப்பட்டு வருகின்றன. கீத கோவிந்தத்தின் வரலாறு, அதன் கவிதைச் சிறப்புகள், சங்கீதக் கலைச் சிறப்புகள் ஆகியவை பற்றி மயிலாப்பூர் ஸ்ரீ வி. சுந்தரம் ஐயர் பி. ஏ. பி. எல். ஜூலை மாதம் 11ந் தேதி காந்திநகர் கிளப்பில் ஆராய்ச்சிக்குகந்த அரிய சொற்பொழிவு ஒன்று நிகழ்த்தினார். இடையிடையே பாடல்களைப் பாடிக் காட்டியும் சபையோரை மகிழ்வித்தார்.

* * *

இந்திய சரித்திரத்தில் புகழ்பெற்ற மொகலாய சக்ரவர்த்திகளில் பாபர், ஹுமாயூன், ஷாஜஹான், அவுரங்கஜீப் முதலியவர்கள் தாடி வளர்த்திருக்க அக்பர் பாதுஷாவுக்கு மட்டும் தாடி இல்லாதிருப்பதேன்! (சரித்திரப் பாட புத்தகங்களில் வரும் படங்களைப் பார்த்தவர்களுக்கு அக்பருக்குத் தாடியில்லை என்பது நினைவிருக்கும்.) இதன் மர்மம் என்ன என்பதைப் பேராசிரியர் ஆர். சீனிவாசன் அவர்கள் மேற்படி காந்தி நகர் கிளப்பில் ஒரு நாள் சங்கேதமாக விளக்கிக் கூறினார். "ஸேனு பாக்யானம்" என்ற காலட்சேபத்தைப் பாகவத சம்பிரதாயப்படி பக்க வாத்தியங்களுடன் நிகழ்த்திய போதுதான் அந்த இரகசியத்தைக் குறிப்பாக வெளிப்படுத்தினார்.



பேராசிரியர் ஆர். சீனிவாசன்

அக்பர் பாதுஷாவுக்கு ஒரு நாள் சாக்ஷாத் மகா விஷ்ணுவே க்ஷவரம் செய்யும்படி நேர்ந்து விட்டதாம்! பகவானே அவ்விதம் தமது பக்தர் ஒருவருக்கு உதவி செய்வதற்காக க்ஷவரக் கத்தியைக் கையில் எடுத்திருக்கும்போது அக்பர் பாதுஷா அம்மாதிரி தாடியின்றிக் காட்சி தருவதில் வியப்பில்லை அல்லவா!

ஸேனன் என்னும் நாவிதர் பகவானிடம் பரமபக்தி கொண்டவர். அவர் அக்பர் பாதுஷாவின் மனதுக்குகந்தபடி நாவிதத் தொழில் செய்து வந்தவர். ஒரு நாள் அவர் பகவானுடைய நாமத்தைப்பாடிக் கொண்டே மெய் மறந்து பரவசமாகி இருந்து விட்டாராம். குறித்த காலத்தில் அக்பருக்கு க்ஷவரம் செய்யப் போகவில்லையாம். அக்பர் மிகக் கோபமடைந்து "கொண்டு வா அந்த ஸேனனை!" என்று கட்டளை இட்டு விட்டாராம். சேவகர்கள் அப்பால் போனதும், இங்கே ஸேனர் "இதோ வந்து விட்டேன், சம்ராட்!" என்று வந்து நின்றாராம். அக்பரும் கோபத்தை மறந்தாராம். அன்று வழக்கத்தைக் காட்டிலும் க்ஷவரம் சுகமாக இருந்ததாம்! "அப்பனே! ஸேனு! நீயே க்ஷவர கலாநிதி!" என்று அக்பர் பூரித்துப் புகழ்ந்து கொண்டிருக்கும்போது, உண்மையான ஸேனு நாவிதரைச் சேவகர்கள் அழைத்துக் கொண்டு வந்தார்களாம்! * * *

தொழில்களிலே உயர்வு, தாழ்வு கற்பித்துக் கொண்டு பலவித சங்கடங்களுக்கு உள்ளாகிறவர்கள் இந்தக் கதையைக் கேட்டு மனந் திருந்துவார்கள் என்று எதிர்பார்க்கலாம். நமது முன்னோர்கள் பகவானையே நாவிதத் தொழில் செய்யப் பண்ணியிருக்கிறார்கள். ஸ்ரீ சங்கராச்சாரியார் அந்தத் தொழிலின் நுட்பத்தை நன்கு அறிந்திருந்ததாக வரலாறுகள் கூறுகின்றன. இப்படியெல்லாம் இருந்தும், நாவிதத் தொழிலை மட்டமென்று நினைக்கும் மடமையைப் பற்றி என்னவென்று கூறுவது! நிற்க.

பேராசிரியர் ஆர். சீனிவாசன் திருவனந்தபுரம் கலாசாலையில் நீண்ட நாள் தலைமைப் பீடத்திலிருந்து கல்வித் தொண்டு புரிந்த பிறகு, ஓய்வு பெற்றுச் சென்னைக்கு வந்து குடியேறியிருக்கும் அறிஞர். சங்கீதக் கலையில் விசேஷ ஆராய்ச்சி அறிவுடன் பாடும் திறமையும் பெற்றவர். இத்தகைய மேதை ஒருவர் பாகவதர்களைப்போல் கதா காலட்சேபம் செய்யும் ஆர்வமுடையவரா யிருப்பது கலை அன்பர்கள் செய்த அதிர்ஷ்டம் என்றே சொல்ல வேண்டும்.

பேராசிரியரின் செல்வக் குமாரி ஸ்ரீமதி கமலா கிருஷ்ணமூர்த்தி, தந்தைக்கு உதவியாக மேடையில் அமர்ந்து இனிய எடுப்பான குரலில் பின்பாட்டுப் பாடிக் காலட்சேபத்தை மேலும் சிறப்புறச் செய்தார். —"கர்நாடகம்"

# கன்னித் தெய்வம்

"கடகம்"

"இதோ பார், பொன்னு! நீ சொல்றது சரியில்லே. தெய்வயானை யார்! உன் மாமன் மகள்தானே! அவளை வேண்டாம் என்று சொல்கிறாயே! தாய், தகப்பனற்ற அவளுக்கு நம்மை விட்டால் வேறு யார் கதி! உனக்கு இந்தப் பிடிவாதம் வேண்டாம். எங்கிருந்தோ புதுசாய் முளைத்து வந்த அந்தப் பொன்னியை மறந்துவிடு. தெய்வயானைதான் உனக்கேற்ற பெண்! அவள் அழகிலும் குறைந்து போய்விடவில்லை. என் வார்த்தையைத் தட்டாதே!" என்று ஒருநாள் ஆறுமுகம் தன் மகன் பொன்னனைப் பார்த்துச் சொன்னார்.

"அப்பா! தெய்வயானையினிடத்தில் எனக்கு அன்பில்லை என்று நான் சொல்லவில்லை. அவளைக் கல்யாணம் செய்து கொள்ளத்தான் என்னால் முடியாது. சிறு வயதிலிருந்து நாங்கள் பழகியிருந்தாலும், இப்படி ஒரு கட்டம் வரும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. இதை நான் விரும்பவுமில்லை. பொன்னியைத் தான் நான் விரும்புகிறேன், தெய்வயானைக்கு வேறு யாரையாவது பார்த்து, கல்யாணம் செய்து வைத்து விடுவோம். இதுதான் என் எண்ணம், அப்பா" என்று பொன்னன் தந்தைக்கு, தன் தீர்மானத்தை விட்டுக் கொடுக்காமலே பதில் சொன்னான்.

"அடே, தறுதலைக் கழுதை! உன் அப்பன் வார்த்தையை மீறிப் பேசுகிறாயா! தெய்வயானையைத்தான் நீ கட்டிக் கொள்ள வேணும். இல்லாவிட்டால் உனக்குச் சொத்து, சுதந்தரம் ஒன்றும் கிடையாது. நீயும் எனக்குப் பிள்ளையில்லை; நானும் உனக்குத் தகப்பனில்லை. யோசித்துப் பார், உன் மாமன் மகள் தெய்வயானைதான் உனக்கு முறைப் பெண். கடைசியாகச் சொல்கிறேன்; என் வார்த்தையைத் தட்டாதே" என்றார் ஆறுமுகம் தம் மகனுக்குப் புத்தி புகட்டு முறையில்.

"அப்பா, பன்னிப் பன்னி ஆயிரம் பேசவேண்டாம், சொத்தும் வேண்டாம், சுதந்திரமும் வேண்டாம், பொன்னிதான் எனக்கு வேணும். நான் வீட்டை விட்டே போய்விடுகிறேன், அப்பா, இதுதான் என் மனசுக்குச் சம்மதமாயிருக்கிறது" என்று கூறிவிட்டு, பொன்னன் அப்பொழுதே அடக்க முடியாத ஆத்திரத்துடன் வீட்டை விட்டு வெளியேறினான்.

கண்களில் கோபக் கனல் பறக்க, ஆறுமுகம் அவன் போவதை வெறிக்க, வெறிக்கப் பார்த்துக் கொண்டே அங்கேயே நின்றார். மகனின் பிடிவாதத்தைக் கண்டும், தம் வார்த்தைக்கு அவன் கட்டுப்படாமல் போவதும் அவருக்கு அவன் மீதுள்ள கோபத்தைத்தான் அதிகரித்தது. "எங்காவது தொலைந்து போகிறான், போ. இனி அவன் முகத்தில் விழிக்கவும் கூடாது" என்று முணுமுணுத்துக் கொண்டே தெய்வயானை இருந்த இடத்துக்கு வந்தார் அவர்.

தகப்பனுக்கும் மகனுக்கும் நடந்த வாக்குவாதத்தை, ஒன்று விடாமல் மறைவில் நின்று கவனித்துக் கொண்டிருந்த தெய்வயானைக்கு ஒரே மன வேதனையாய்ப் போய்விட்டது. இப்படி இந்தக் குடும்ப கலகத்திற்கு, அவள் ஒரு காரண கர்த்தாவாக இருக்கிறாள் என்றால், அவளால் அதைச் சகித்துக் கொள்ளவே முடியவில்லை. "என் பொருட்டு அத்தான், வீட்டை விட்டே போய் விட்டால், ஊரை விட்டே போய்விட்டால் என்ன செய்வது! ஆனால், அத்தான் அப்படிப் போகக் கூடாது. நானே இங்கிருந்து போய்விடுவதுதான் நல்லது. அத்தான் பொன்னியைக் கட்டிக் கொண்டு, சுகமாக வாழட்டும். மாமாவின் மனசும் மாறிப் போயிடும்" என்று அவள் தனக்குள்ளே எதை யெல்லாமோ நினைத்து மனத்தைக் குழப்பிக் கொண்டிருந்தாள். அவள் கண்களைக் கண்ணீர் மறைத்தது; வேதனை மனத்தை அழுத்தியது. நிம்மதி பெற வாய் விட்டு அழவேண்டும் போல் அவளுக்குத் தோன்றியது.

அதற்குள், ஆறுமுகம் "தெய்வயானை" என்று கூப்பிட்டுக் கொண்டே அவ்விடம் வந்து விட்டார்.

"தெய்வயானை, பார்த்துக் கொண்டாயா பயல் பேசின பேச்சை! இந்த ஆறுமுகம் சொன்னால், கட்டுப்பட்டு நடக்க வேணும். இல்லாவிட்டால் தொலைந்து போயிடணும். வீட்டிலே வளர்கிற பெண் வேணுமாம். அந்தப் பிச்சைக்கார நாய் பொன்னிதான் வேணுமாமே. என் மூச்சு இருக்கும் வரையில் அந்தக் கழுதை இந்த வீட்டு வழி வரக்கூடாது. நாளையே அவன் புத்தி திருந்தி வந்தால் போச்சு" என்று ஆறுமுகம் படபடவென்று பொரிந்து தள்ளினார். அவர் பேச்சைக் கேட்ட அவள் பயந்து நடு நடுங்கிப் போய் விட்டாள். இருந்தாலும், தன் மனசில் உள்ளதை வாய் விட்டுச் சொல்லாமலும் அவளால் இருக்க முடியவில்லை.

"மாமா! அத்தான்மீது இந்தக் கோபம் வேண்டாம், மாமா! அத்தான் இஷ்டப்படியே விட்டுவிடுங்கள். என்னைப் பற்றி நீங்கள் கவலைப் படவேணும். நான் இப்படியே இருந்து விடுகிறேன். என்னால் உங்கள் குடும்பம் சீர் கெட்டுப் போகவேண்டாம், மாமா" என்று கூறும்போதே தெய்வயானை அழுது விட்டாள்.

"உன் தாய்க்கு, அவள் சாகும்போது நான் கொடுத்த வாக்குறுதி என்ன ஆவது, தெய்வயானை! உன்னை இவ்வளவு தூரம் அருமை பெருமையாய் நான் வளர்த்து வந்ததுதான் எதற்காக! எங்கள் குடும்பத்துப் பெண்ணாகவே நீ எங்கள் குலத்தை விளக்க வைப்பாய் என்று எண்ணிய என் எண்ணமும் பாழாய்ப் போய் விடுவதா! அவன் போகட்டும், போ! அவனுக்கு என் சொத்து கிடையாது" என்று கூறிக் கொண்டே கழனியைப் பார்க்கப் போய் விட்டார் ஆறுமுகம்.

* * *

அந்தக் கிராமத்தில் ஆறுமுகம் கொஞ்சம் சொத்துக்கு அதிபதியாய் இருந்தார். நிலபுலன்கள் அதிகம் என்று சொல்ல முடியாவிட்டாலும், இரண்டு மூன்று காணி நன்செய் நிலங்கள் அவருக்கிருந்தன. தம்முடைய சொந்த முயற்சியாலும், தளராத உழைப்பினாலும், நேர்மையான முறையில் சம்பாதித்தவைதான் அவைகள். அல்லும் பகலும், கருமமே கண்ணாயிருந்து அயர்விலாத ஆர்வத்துடன், நிலத்தைக் கண்ணும் கருத்துமாய்க் கவனித்து, வளம் செழிக்கும் பூமியாக அதை அவர் மாற்றி யிருந்தார். உழைப்பிற்கேற்ற ஊதியத்தையும் நிலம் வழங்கிக் கொண்டிருந்தது. எனவே கவலையின்றி, கௌரவமாக தலை நிமிர்ந்து அவரால் அங்கு வாழ முடிந்தது.

அவருக்கு ஒரே மகன்தான்; அவன்தான் பொன்னன். அவர் மனைவி இறந்துபோய்ப் பதினைந்து வருஷங்கள் ஆகியிருந்தன. பொன்னனைக் கிராமத்துப் பள்ளிக்கூடத்துப் படிப்போடு நிறுத்தி, தம் வேலையிலேயே இழுத்து விட்டிருந்தார்.

ஆறுமுகத்தின் தங்கை அம்புஜத்தின் மகள்தான் தெய்வயானை. தெய்வயானையின் தகப்பன் அவள் சிறு குழந்தையாக இருக்கும்போதே, சம்பாதித்து வாரிவர அக்கரைச் சீமைக்குப் போனவன் பின்பு திரும்பி வரவேயில்லை. போன இரண்டு மூன்று வருஷங்களுக்குப் பிறகு அங்கேயே ஒரு நாள் செத்துத் தொலைந்தான்.

கணவனையும் இழந்து, சொத்து சுதந்திரமுமின்றி ஏழையாகி அம்புஜம் அண்ணன் வீடே கதி யென்று, தன் மகளோடு வந்து ஆறுமுகத்தின் வீட்டில் தங்கிவிட்டாள். அவள் அப்படி வந்து சேர்ந்தது ஆறுமுகத்தின் குடும்பத்துக்கு நல்ல உதவியாக இருந்தது. அம்புஜமே அந்தக் குடும்பப் பொறுப்பை ஏற்றுக் கொண்டாள்.

ஆறுமுகமும், அம்புஜமும், பொன்னனும் தெய்வயானையும் தக்க வயதை யடைந்ததும் அவர்களை மண வாழ்க்கையில் இழுத்து விட்டு, அவர்கள் இன்புறுவதைக் காணவே விழைந்தார்கள். இந்தக் கல்யாணப் பேச்சு அவர்களிடம் அடிக்கடி நடக்கும். பொன்னனும், தெய்வயானையும் வயதில் முதிர்ச்சி அடைய அடைய, அவர்கள் தோற்றத்தில் பருவகால வளர்ச்சி மாண்புற்று விளங்க விளங்க, இந்த நம்பிக்கை உறுதிப்பட்டுக் கொண்டு வந்தது.

தெய்வயானை அத்தானை மணாளனாக அடைவதில் ஏங்கினாள். அவனை மணந்து, கணவன் மனைவியாக வாழும் நாளை எதிர்பார்த்து, எதிர்பார்த்துத் தவம் கிடந்தாள் அவள்.

ஆனால் பொன்னனின் மனத்தை அவளால் எளிதில் புரிந்து கொள்ள முடியவில்லை. அவளை நெருங்கிப் பேசுவதுமில்லை. அவளை அவன் விரும்புகிறானா இல்லையா என்பது யாராலுமே புரிந்து கொள்ள முடியவில்லை.

அம்புஜம் ஒருநாள் தன் ஆசை நிறைவேறாமலே, கண்ணை மூடி விட்டாள். கடும் நோய் அவள் உயிரை வாங்கிக்கொண்டு போய் விட்டது. "அண்ணா, தெய்வயானைக்கு நீங்கள்தான் இனி ஆதரவு. பொன்னனுக்கு அவளைக் கட்டி வைத்து விடுங்கள். அது போதும்" என்று அவள் சாகும் தறுவாயில், நல்ல புத்தி இருந்த நிலையில் கண்களை மறைத்த கண்ணீரோடு சொன்னாள்.

"அம்புஜம்! கவலை வேண்டாம். உன் மகள் என் மகனுக்காகப் பிறந்தவளாயிற்றே. கல்யாணம் செய்து வைக்கிறேன்" என்று ஆறுமுகம் சொன்னதைக் கேட்டு ஆறுதல் பெற்று நிம்மதியாகக் கண்ணை மூடி விட்டாள்.

காலச் சக்கரம் சுழன்றது. இரண்டு ஆண்டுகள் மறைந்தன.

ஒரு நாள் பொன்னன் சந்தைக்குக் காய்கறிகள் விற்கப்போனவன், பறி கொடுத்த மனத்தோடு திரும்பி வந்தான். அவனைப் போலவே வியாபாரத்துக்கு வந்திருந்த பக்கத்து ஊர்க்காரி பொன்னியிடம் அவன் காதல் கொண்டு விட்டான். அவளுடைய அழகிய தோற்றமும், சரளமான பேச்சும், அவனை மயக்கி விட்டன. அத்தை மகள் தெய்வயானையிடம் காணாத ஏதோ ஒரு விதப் புதுமையை அவளிடம் கண்டான் அவன்.

இந்தச் சந்தைச் சந்திப்பு அதிகரித்தது. அன்பு இந்த இருவரிடத்தும், மலைபோல வளர்ந்தது. எத்தகைய இடையூறு நேர்ந்தபோதிலும், பிரிக்க முடியாதபடி நேசம் அவர்களைப் பிணைந்து வைத்திருந்தது.

பொன்னியின் பெற்றோர்களும், பொன்னனை விரும்பினர். இக் காதலர்களின் மனோரதம் நிறைவேறாமல் செய்யக்கூடிய ஒரு முட்டுக் கட்டையாக தெய்வயானை, பொன்னன் வீட்டிலே வளர்ந்து வருவதை அவர்கள் அறியாமலில்லை. ஆறுமுகம் உடன்பட்டால், பொன்னியைப் பொன்னனுக்குக் கொடுக்கத் தயாராக இருந்தனர்.

இந்த நிலையில்தான், தகப்பனுக்கும் மகனுக்கும் வாக்குவாதம் ஏற்பட்டு, பொன்னன் வீட்டை விட்டே வெளியேறினான். ஆறுமுகத்தின் மனம் மகனுக்காக இரக்கம் காட்டவில்லை. தெய்வயானையின் எதிர்காலம்தான் அவர் கண் முன்னாலே இருந்தது. தமக்கிருக்கும் சொத்துக்கு உரிமை வாரிசாகப் பொன்னனும் தெய்வயானையு மிருக்க வேண்டும் என்று எண்ணியிருந்ததற்கு மாறாக பொன்னிக்குத் தம் குடும்பத்தில் இடம் கொடுத்து தெய்வயானையை ஏங்க வைத்து வேறு ஒருத்திக்குக் கொடுக்க, அவர் ஏன் சம்மதிக்கப் போகிறார்!

இரண்டு மூன்று மாதங்கள் எங்கெங்கோ போய்ச் சுற்றி யலைந்து விட்டு, பொன்னன் பொன்னியின் பெற்றோர்களைச் சந்தித்து, அவர்களைச் சமாதானப்படுத்தி, பொன்னியை மணந்துகொண்டான். மனைவியின் வீட்டோடேயே தங்கி, உழைத்துப் பிழைக்கவும் தொடங்கி விட்டான்.

* * *

பொன்னனின் செய்கை ஆறுமுகத்தின் கோபத்தை அதிகரித்தது. "நான் சம்பாதித்த சொத்து அந்தத் துரோகிப் பயலுக்குக் கிடையவே கிடையாது. எனக்கிருந்த மகன் செத்துப் போய் விட்டான். எனக்கு இனிமேல் தெய்வயானைதான் பெண்போல. அவளுக்குத்தான் எல்

லாம் சேர வேணும்" என்று அவர் தீர்மானம் செய்து கொண்டார். அவர் மனத்தில் வைராக்கியம் தீவிரமாக வளர்ந்து, வைரம் போல் கெட்டிப் பட்டு விட்டது.

ஆனால் அவருடைய கவலை யெல்லாம் தெய்வயானையைப் பற்றித்தான். அவளுக்கு எங்காவது மணமகனைப் பார்த்துக் கல்யாணம் செய்து வைத்துவிடத் தீவிரமாக முனைந்தார் அவர். அது மட்டுமல்ல. தம்முடைய சொத்துக்களான காணி. மனை எல்லாவற்றையும் அவள் பெயருக்கே மாற்றி எழுதி அவளைச் சொத்துக்காரியாக ஆக்கிவிட்டார். அவளுடைய சொத்துக்காக வேனும், அனாதையான அவளை மணக்க எவனும் தயங்க மாட்டான் என்ற நினைப்பு அவருக்கு.

ஆறுமுகத்தின் இந்த ஆசை பூர்த்தியாவதற்கு முன்பே, விதி குறுக்கிட்டது. மாரடைப்பினால் ஒரு நாள் அவர் இறந்து போனார்.

இப்படி ஆதரவற்று நின்ற, தெய்வயானையின் சோகத்தின் எல்லையை, அவள் மன வேதனையை இன்னதென்று விவரிக்கவே முடியாது. அழுதழுது அவள் கண்கள் வீங்கிப் போயின.

அப்பொழுதுதான் பொன்னன், பிறந்த வீட்டை நோக்கி வந்தான். தெய்வ யானைக்காகக் கண்ணீர் பெருக்கினான். அவள் கல்யாணத்துக்கான ஏற்பாடுகளை யெல்லாம், தானே எடுத்து நடத்துவதாகச் சொன்னான்.

ஆனால் தெய்வ யானை மறுத்துவிட்டாள். "அத்தான்! என்னைப் பற்றி நீ கவலைப்பட வேண்டாம். நான் யாரையும் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை. என் மனத்தில் என் அருமை அத்தான் இருந்த 'இடத்தில் வேறு யாரையும் நான் குடிவைக்க மாட்டேன். இந்த என் இஷ்டம் நிறைவேறத்தானோ என்னமோ, மாமா இப்படித் திடீரென்று இறந்து போனார். இல்லாவிட்டால், பெற்ற தாய் தந்தையரைவிடப் பேணி வளர்த்த, மாமாவின் வார்த்தையைத் தட்ட முடியாமல், வேறு யாருக்காவது மாலை யிட்டிருப்பேன். தெய்வத்தின் சம்மதம் என் பக்கம் இருக்கிருக்கிறது. போகட்டும் போ, அத்தான்! நீ சுகமாக இருந்தால் எனக்குப் போதும். உனக்குச் சேரவேண்டிய சொத்து இதோ இருக்கிறது. எடுத்துக் கொள். உனக்கும் பொன்னிக்கும் பிறந்திருக்கிற என் மகன் பெயருக்கு எழுதிக் கொடுத்து விடுகிறேன். என்னை நிம்மதியாகவே வாழவிடு. அதுவே எனக்குப் போதும்" என்று கூறித் தெய்வயானை அழுதாள்.

கெட்டிப்பட்டுப் போயிருந்த பொன்னன் மனமும் இளகி, கசிந்து உருகியது. அவனும் அழுதான். தன் மீது அவள் கொண்டிருந்த தணியாத ஆசையை அறிந்த அவன், "புத்தி கெட்டுப் போய், தெய்வயானையை வெறுத்து, இப்படித் தவிக்க விட்டு விட்டேனே! அப்பாவின் கோபத்துக்கும் ஆளானேனே!" என்று பலவாறாக எண்ணித் தன் தவறுகளுக்காக வருந்தினான்.

"தெய்வயானை, உனக்கிருக்கும் அறிவும் புத்தியும் எனக்கில்லை. போனது போகட்டும், அப்பாவின் சொத்து எனக்கு வேண்டாம். நான் வாங்கிக் கொள்ளவே மாட்டேன். நீ கல்யாணம் செய்து, சுகமாக வாழ வேணும். மாப்பிள்ளை பார்த்து வருகிறேன். இதற்கு நீ என்ன சொல்கிறாய்!" என்றான் பொன்னன்.

"அத்தான்! நான் உயிரோடு இருக்கவேண்டுமானால், என்னைக் கன்னியாகவே இருக்க விடு. இந்தச் சொத்தையும் வாங்கிக் கொள். இல்லாவிட்டால், ஏதாவது விஷப் பச்சிலையைத் தின்று, உயிரை மாய்த்துக் கொண்டு விடுவேன். இது நிச்சயம். தெரிந்து கொள்" என்று தெய்வயானை பிடிவாதம் செய்தாள்.

பொன்னன் அவள் வார்த்தையை ஏற்க வேண்டியவனாகி விட்டான். அவள் பிடிவாதம் அவனுக்குத் தெரிந்ததுதான். சொன்னபடியே அவள் செய்து காட்டிவிடுவாள்.

தெய்வயானை தன் மீதுள்ள சொத்தைப் பொன்னன் மகனுக்கே அளித்து, உழைத்துப் பிழைத்து ஏழையாகவே வாழ்ந்தாள். பொன்னியிடம் அவள் துவேஷம் காட்ட வில்லை; அன்பு செலுத்தினாள். பொன்னியின் குழந்தைகளை எடுத்து வைத்து, கொஞ்சி மகிழ்ந்தாள். அவர்கள்மீது தன் அன்பை யெல்லாம் சொரிந்தாள். சுருங்கச் சொன்னால், பொன்னனிடத்து, அவள் கொண்டிருந்த அன்பு, அவள் உள்ளத்தில் வளம் பெற்று, செழுமையுடன் வளர்ந்து கொண்டே யிருந்தது. இந்த அன்பு உணர்ச்சியே அவள் உடலுக்கும், உள்ளத்துக்கும் வலுவைக் கொடுத்து அவளை வாழச் செய்தது.

இந்த தனித்த வாழ்வில், தெய்வயானை தன் உள்ளத்தை அலையவிடவில்லை. பெண்ணின் பண்புக்கு இழுக்கு ஏற்படாமலே அவள் வாழ்ந்தாள்.

தன் வாழ்வில் ஏற்பட்ட ஏமாற்றத்தைப் பொறுத்து, மனத் திண்மையுடன், தூய வாழ்வு கன்னியாகவே வாழ்ந்தாள். அவளைக் கிராமத்தில் எல்லாருமே 'கன்னித் தெய்வம்' என்று போற்றி அழைத்தார்கள். நாளடைவில் அவள் இயற் பெயர் மறைந்து, 'கன்னித் தெய்வம்' என்ற பெயரே அவளுக்கு நிலைத்து நின்று விட்டது.

இந்தக் 'கன்னித் தெய்வ'த்தினிடம் பொன்னனும் பொன்னியும் மிகுந்த மரியாதை செலுத்தினார்கள். தங்கள் வாழ்வுக்கு அவளையே துணையாகக் கொண்டு வாழ்ந்து வந்தார்கள்.

## திருமணம்

சென்னை டி. ஐ. சைக்கிள் கம்பெனி மானேஜர் ஸ்ரீ என். கே. ஐயரின் குமாரி சௌபாக்கியவதி லீலாவுக்கும், இளையான்குடி ஸ்ரீ எஸ். கிருஷ்ணய்யர் பி. ஏ. பி. எல்., இண்டியன் ஆடிட் அண்ட் அக்கௌண்ட்ஸ் சர்விஸ் (ரிடயர்ட்) அவர்களின் குமாரன் ஸ்ரீ வெங்கட்ரமணி பி. எஸ். ஸி. (இன்ஜ்.) க்கும் திருமணம் வெகு சிறப்பாக நடந்தது.

நாள் முழுவதும்
# தெம்பூட்டி நறுமணம்
அளிப்பது




கேரள
சோப் இன்ஸ்டிட்யூட்,
கோழிக்கோடு



சென்னை இண்டஸ்ட்ரீஸ் &
காமர்ஸ் டிபார்ட்மென்டின் பகுதி.
SISTA'S—KS—39



அப்பா:—ஏண்டா, கிட்டு! தலை வலி மண்டையைப் பிளக்கிறது என்று சொல்லி பள்ளிக்கூடத்துக்கு டிமிக்கி கொடுத்தாச்சு. இப்பொழுது என்ன டான்னு தலைகால் தெரியாமல் குதிச்சிக்கிட்டு இருக்கிறயே!

கிட்டு:—உண்மையா, தலையை வலிக்கத்தான் செய்தது. ஆர். எஸ். பதி மருந்து கொஞ்சம் தடவின உடனே தலைவலி பறந்தே போய் விட்டது.

## 15 நாள் சலுகை!

ஒவ்வொரு கடிகாரமும் 12 வருஷ உத்தரவாதம். ஒவ்வொரு ஆர்டருக்கும் ஒரு பவுண்டன் பேனாவும், ஒரு சிகரெட் லைட்டரும் இலவசம். மூன்று கடிகாரங்கள் ஒரு தடவையில் ஆர்டர் கொடுத்தால் ஒரு கடிகாரம் இலவசம்.



செ. 1 (அளவு 8½") 15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு ரூ. 37
,, ,, 15 ஜுவல்ஸ் 10 மைக்ரோன்ஸ் ரூ. 42



வாட்டர் ப்ரூப்
செ. 2 (அளவு 8½") 15 ஜுவல்ஸ் க்ரோம் கேஸ் ரூ. 37
,, ,, 17 ஜுவல்ஸ் க்ரோம் கேஸ் ரூ. 48



ஆடவருக்கும் பெண்டிருக்கும்
செ. 3 (அளவு 8½") 15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு ரூ. 35
,, ,, 15 ஜுவல்ஸ் 10 மைக்ரோன்ஸ் ரூ. 37

இங்கிலீஷ் அலாரம் டைம்பீஸ் ரூ. 18 உயர்ரகம் ரூ. 20
பாக்கெட் கடிகாரம் ரூ. 12

தபால் செலவு தனி. மூன்று கடிகாரங்கள் ஒரு தடவையில் ஆர்டர் செய்பவர்களுக்கு தபால் செலவு இலவசம். கடிதங்கள் ஆங்கிலத்தில் எழுதப்படல் வேண்டும்.

**CALCUTTA WATCH CO. (SEC. 73-K)**
**Post Box No. 12203, CALCUTTA-5**

THE ARISTOCRAT ON WHEELS!

# DODGE

*Kingsway*




Wherever there is need for a car that combines beauty with economy and comfort with convenience, there the DODGE KINGSWAY is in great demand.

Its novel features alone render it unique among the latest & best in automobiles.

**THE PREMIER AUTOMOBILES LIMITED**

FACTORY, AGRA ROAD, KURLA, H. O. CONSTRUCTION HOUSE, BOMBAY.

SISTA'S PAL-[illegible]

Dealers : ADDISON & CO, LTD., Mount Road, MADRAS

# வட்ட மேஜை

## "ஏற்றுக்கொண்டு விட்டோம்"

'தமிழ் நாட்டுத் தவப் புதல்வரான' நம் ராஜாஜி அவர்கள் கொண்டு வரும் திட்டங்கள் அநேகமாகப் புரட்சிகரமானவைகளாக யிருக்கும். பழமையில் மோகங் கொண்டவர்கள் நிறைந்த நாட்டில் 'புரட்சிகரமான' திட்டங்களுக்கு (அவைகளினால் எவ்வளவுதான் நன்மைகள் கிடைப்பதாயினும் சரி) ஓரளவு எதிர்ப்பு எதிர்பார்க்கப்பட வேண்டியதே. 'பாகிஸ்தான் கொடுப்பதைப் பற்றிக் கனவு காண்பதுகூடத் தகாத காரியம்' என்று காங்கிரஸ் கூறி வந்த காலத்தில், 'நாம் இஷ்டப்பட்டாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, பாகிஸ்தான் ஏற்படவே போகிறது' என்று ராஜாஜி மிகுந்த தீர்க்க தரிசனத்துடன் கூறினார். மகானின் தீர்க்க தரிசனம் அலட்சியம் செய்யப்பட்டது. அதற்கான பலனைத் 'தேசப் பிரிவினை' காலத்தில் அனுபவித்தோம். உணவுக் கண்ட்ரோலை' எடுத்தபோதும் மிகுந்த எதிர்ப்பு இருந்தது. 'உணவுக் கண்ட்ரோல் ஆபீஸர்கள்' எனும் அரக்கர்கள் ஒழிந்தார்கள் என்று ஜனங்கள் இன்று நிம்மதிப் பெருமூச்சு விடுகிறார்கள்.

வழக்கம் போலவே அவரது கல்வித் திட்டத்திற்கும் ஓரளவு எதிர்ப்பு உதயமாகி யிருக்கிறது. ஐந்து வருஷங்களுக்குப் பிறகு இன்று இத்திட்டத்தைக் காரசாரமாக எதிர்ப்பவர்கள் எல்லாம் வாய் மூடி மௌனிகளா யிருக்கப் போகிறார்கள்.

தமிழ்க் குழந்தைகளின் தாத்தாவான ராஜாஜி அவர்கள், தம் வாழ்நாளிலேயே செய்திருக்கும் பெரிய சேவையாக இதை ஏற்றுக் கொள்ளும்படி நம்மிடம் கேட்டுக் கொள்கிறார். 'நாங்கள் ஏற்றுக்கொண்டு விட்டோம்' என்பதைத் தவிர வேறு பதிலே சொல்வதற்கில்லையே!

பட்டாம்பி
6-7-53

கே. எஸ். ராமையா

•

## அதிசயம், ஆனால் உண்மை!

சென்ற 5-6-53 வெளியான தினப்பத்திரிகையில் ஓர் அபூர்வமான, ஆனால் உண்மையான செய்தி வெளியாயிற்று. அந்தச்செய்தி இதுதான். சப் இன்ஸ்பெக்டர் பரீட்சைக்கு ஆஜரானவர்களில் சிலர், "எவரெஸ்ட் சிகரத்தை எட்டிப் பிடித்த வீரர் டென்சிங் ஒரு ஆங்கிலேயர்; ஐஸன்ஹோவர் என்பது ஒரு நீண்ட பாலத்தின் பெயர்" என்று பதிலுரைத்தனர். மேலும், சிங்மன் ரீ யார்! ரோஸன்பர்க் தம்பதிகள் யார்! தற்போதைய காங்கிரஸ் அக்கிராசனர் யார்! என்ற கேள்விகளுக்கு ஒருவருக்காவது பதில் தெரியவில்லை. இந்தப் பரீக்ஷைக்கு 750 மெட்ரிக் தேறிய மாணவர்கள் ஆஜராகி யிருந்தனர். ஒரு படித்த மாணவனுக்குக் காங்கிரஸ் அக்கிராசனர்கூட யார் என்பது தெரியாம லிருக்கிறது என்ற உண்மையைக் கண்டு நாம் எல்லோரும் மிகவும் வெட்கப்பட வேண்டும். அம்மாணவனைக் கண்டு அல்ல. அம்மாணவனை அக்கதிக்குக் கொண்டு வந்த கல்வி முறை இன்னும் இருப்பதைக் கண்டுதான். நிற்க. நம் மதிப்பிற்குரிய ராஜாஜி மந்திரி சபையானது இளம் மாணவர்களை எவ்வாறு மெக்காலே கல்வி முறையிலிருந்து விடுவித்ததோ அதே போல் உயர்தரப் பள்ளி மாணவர்களையும் மேற்படி குமாஸ்தாக் கல்வி முறையில் இருந்து சீக்கிரமே விடுவிக்கும் என்று நம்புகிறேன்.

உசிலம்பட்டி
6-7-53

கே. நாராயணன்

•

## ஆயிரம் ரூபாய் தண்டம்!

கல்கி 12-7-53 இதழில் "எந்தக் கணக்கில் எழுதுவது" என்ற தலையங்கத்தில் ஜில்லா போர்டு பள்ளிகளின் விவசாய முறையையும் கைத்தொழில் லட்சணத்தையும் பற்றி எழுதியிருந்ததை நானும் நண்பர்களும் படித்தோம்.

நீங்கள் எழுதியவை நூற்றுக்கு நூறு உண்மை. எங்கள் ஊரில் ஒரு ஜில்லா போர்டு உயர்தர ஆரம்பப் பள்ளி உள்ளது. எட்டாம் வகுப்புவரை உள்ள இங்கு ஒரு கைத்தறி நெசவு வகுப்பும் உள்ளது. அதற்கென ஒரு கைத்தொழில் ஆசிரியர்.

ஐயோ! அந்த அழகை ஏன் கேட்கிறீர்கள்! இதற்காக ஓராண்டு காலம் தனியாகப் பயிற்சி பெற்று 'சர்டிபிகேட்' வாங்கியவர் இவர். இவருக்குச் சம்பளம் மாதம் (30+19) 49 ரூ. கைத்தறிச் சாமான்களே இவருக்கு முற்றிலும் புதியன. அதை எப்படி, எவ்வாறு கையாளுவதென்பதே இவருக்குப் புரியாது. புதிய சட்டப்படி இப்போது பள்ளி வகுப்புகள் நடைபெறுவதால் 6,7.8 வகுப்புகளுக்குத்தான் இவர் பாடம் எடுக்கலாம். ஒரு நாளைக்கு 4 பீரியட்கள்தான். அந்த நாலு பீரியட்களும் என்ன என்கிறீர்கள்! ஏதாவது பிரசங்கம்; இல்லையானால் அரட்டை. இதனால் அடுத்த வகுப்புகளுக்கும் இல்லாத தொல்லை. பாவு போடவோ, அது சம்பந்தமான நுணுக்க வேலைகளோ இந்த சர்டிபிகேட் ஆசிரியர்களுக்குத் தெரியாது. எதையாவது செய்து காண்பிக்க வேண்டுமே! பக்கத்தில் உள்ள கிராமத்தி லிருக்கும் பரம்பரைத்தொழில் பார்க்கும் நெசவுத் தொழிலாளர்களை அழைத்து வந்து வேண்டியதை அவர்கள் உதவியால் செய்து வைப்பார்.

ஒரு பரிதாபம் என்னவென்றால், அடிக்கடி இவருக்கு உதவியாக வந்து இவரது கௌரவத்தைக் காப்பாற்றிச் செல்லும் நெசவுத் தொழிலாளர்களுக்கு இது பரம்பரைத் தொழிலானதால் நல்ல பயிற்சி உண்டு. இருந்தும் இது சம்பந்தமான சர்டிபிகேட் பெறுவதற்கு இவர்கள் லாயக்கற்றவர்கள். காரணம் இவர்கள் எட்டாம் வகுப்பு வரை படித்துத் தேர்ச்சி பெறாததுதான்.

தறி இருக்கும் ஒவ்வொரு பள்ளியிலும் இதே லட்சணம்தான். வருஷத்துக்கு ஒரு தறி ஆசிரியர் சம்பந்தப்பட்ட அளவில் சர்க்கார் பணம் ரூபாய் ஆயிரம் தண்டம்.

ஏராளமாக வேலையற்றுப் பரிதவிக்கும் கைத்தொழில் வகுப்பினரை இத்தொழிலுக்கு ஆதரவளித்து அமர்த்தினால் அவர்களுக்கும் பலன், தொழிலுக்கும் விமோசனம்.

• • •

13—7—53

எஸ். பி. எம். சாமி

[இவருடைய ஊர் இங்கு வேண்டுமென்றே விடப்பட்டிருக்கிறது. அநேக ஊர்களில் இப்படி நடக்கும்போது ஓர் ஊரை மட்டும் குறிப்பிடுவானேன்!
— ஆசிரியர்]

## சொந்த அநுபவம்

மூன்று ஆண்டுகளுக்கு முன் என்னுடைய ஊரில் (பாகநேரி) சொந்த ஆரம்பப் பாடசாலை ஒன்றைத் தனிப்பட்ட முறையில் நடத்தி வந்திருக்கிறேன். அதில் சிற்சில மாணவர்களுக்கு அதாவது 2, 3, 4, 5 வகுப்புக்களுக்கு மட்டிலும் 2½ மணி நேரம் கல்வி கற்பித்து வந்திருக்கிறேன். அவர்களும் இப்போது உயர்நிலைப் பள்ளிகளில் வாசித்து வருகிறார்கள். இது என்னுடைய சொந்த அநுபவம். ஆசிரியர்கள் மனம் வைத்தால் முடியும்.

ஆகையால் ஆரம்ப ஆசிரியர்களை ஊக்கப்படுத்தி இப் புதிய கல்வித் திட்டத்தை வெற்றிபெற நடத்தச் செய்வது அரசாங்கத்தாரின் கடமை. புதிய கல்வித் திட்டம் மிகவும் உயர்ந்தது. இதைத் தமிழ் மக்களாகிய நாம் ஆதரித்து இத் திட்டம் வெற்றி பெற ஆரம்ப ஆசிரியர்களுடன் ஒத்துழைக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

பாகநேரி
23—7—53 ஆ. மங்களநாதன்

●

## சுயநலம்தான்

நான் 1949-ல் பழைய கல்வித் திட்டத்தின் படி எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்தேன். அதன் பயனாகக் குமாஸ்தா வேலைக்குத் தயாரிக்கப்பட்டு வேலையும் கிடைக்காமல் பலருடைய ஏச்சுக்கும், பேச்சுக்கும் ஆளாகி மனம் உடைந்து நிற்கிறேன். நான் படிக்கும் காலத்திலேயே புதிய கல்வித் திட்டம் அமுலுக்கு வந்திருந்தால் ஓய்வு நேர வேளைகளில் கைத்தொழில்களில் தேர்ச்சி பெற்றுக் குறைந்த பக்ஷம் குடும்பச் செலவுக்குக் கட்டக் கூடிய அளவுக்கேனும் இன்று நான் சம்பாதித்துக் கொண்டிருப்பேன் அல்லவா! ஏன்! என்னைப் போன்ற எத்தனையோ மாணவர்களின் குடும்பங்களும் பொருளாதார முன்னேற்றம் அடைந்து மக்களின் வாங்கும் சக்தியும் வாழ்க்கைத் தரமும் எவ்வளவோ மேன்மையாக இருந்திருக்கும். தற்போது இத்திட்டத்தை எதிர்ப்பவர்கள் நாட்டின் நலனையே கருதாமல் சுயநலக் கருத்துடனே ராஜாஜியின் திட்டம் எதுவாயினும் எதிர்க்க வேண்டும் என்று எதிர்ப் பிரசாரம் செய்கிறார்கள்.

மதுரை
24—7—53 நசரதநந்தேசுவரன்

●

## வர்ணாசிரம முறை மறையும்

ராஜாஜியின் புதிய கல்வித் திட்டத்துக்குத் தமிழ் நாட்டில் எதிர்ப்பு இருப்பதைக் கண்டு ஆச்சரியப்படும் பம்பாய் வாசிகளில் நானும் ஒருவன். கல்வி பயின்று கொண்டே, தொழிற் கல்வியும் சிறிதளவேனும் தெரிவதற்கு வகை செய்த ஒரு காரணத்துக்காகவே இத் திட்டத்தைப் போற்ற வேண்டும். அணு (atom), பொறியியல், மின்னணு இயல் (Electronics) போன்ற அரிய பெரிய விஷயங்களில் மேல்நாடு சென்று நல்ல தேர்ச்சி பெற்று, இந்தியா திரும்பி உயர்ந்த பதவிகளில் இருக்கும் பெரியார்களுடன் தொடர்பு கொண்டவன் நான். இந்தியாவிலிருந்து ஒரு சிறிய தொகையை உபகாரச் சம்பளமாகப் பெற்றுச் சென்ற அப் பெரியார்கள் அங்கு தாம் படித்த ஆராயப் புகுந்த இடங்களில் பிறர் உண்ட தட்டுக்களைக் கழுவுதல், அவர் தம் குழந்தைகளைக் கவனித்தல், மின்சார வேலை செய்தல், பழங்களைப் பொறுக்கிப் பெட்டிகளில் அடைத்தல் போன்ற தம் ஆராய்ச்சிக்குப் புறம்பான, நாம் "இழி தொழில்கள்" எனக் கருதும் வேலைகளில் ஈடுபட்டு நாளொன்றுக்கு இரண்டு மூன்று டாலர்கள் சம்பாதித்து, தங்கள் ஆராய்ச்சி செய்யத் தேவையான பொருளைச் சம்பாதித்துக் கொண்டனர். இவ் வேலைகளில் ஈடுபடுவோரை இழிவுடன் நோக்கும் மக்கள் அங்கு இல்லை. இத் தொழில்களில் ஈடுபடாவிடில் பலர் அங்கு வாழத் தேவையான பொருளும் பெற்றிருக்க முடியாது. அறிஞர் போற்றும் ஆராய்ச்சியாளராய்த் திரும்பி யிருக்கவும் முடியாது. பால் பண்ணை முறையை ஆராய அமெரிக்கா சென்ற இந்திய மாணவர் ஒருவர் தாமே ஒரு மாட்டின் பாலைக் கறக்க வெட்கப்பட்டு மறுத்தார் என அமெரிக்க நிபுணர் ஒருவர் குறை கூறியது பொதுவாக நம் இந்திய மாணவர் சமூகத்துக்கே பொருந்தும். எனவே கல்வி பயிலும் மாணவர், ஏட்டுக் கல்வியுடன் சிறிதளவேனும் பிற தொழில்களை அறிவாராயின் அந்தத் தொழில்களைச் செய்யும் தொழிலாளர்களைக் கேவலமாக நினைக்க மாட்டார்கள். இதனாலேயே வர்ணாசிரம முறையும் மறைந்து அழிந்து போகும்.

பம்பாய் விஜயராகவன்
25—7—53 (டாடா ஆராய்ச்சிக்கூடம்)

●

## எதை எதிர்க்கிறார்கள்?

ராஜாஜியின் தொழிற் கல்வித் திட்டம் உற்பத்தியைப் பெருக்கும்; மக்களின் வாங்கும் சக்தி அதிகமாகச் செய்யும்; வாழ்க்கைத் தரமும் உயரும்படி செய்யும். இறுதியாக, காலக் கோட்டின்முடிவில், சோஷலிஸப் பாதைக்கு அழைத்துச் செல்லவும் செய்யும்!

"உற்பத்திக்கு அத்தியாவசியமானவை நிலமும் உழைப்பும்" என்கிறார் மார்ஷல். நிலத்தை அதிகமாக்க முடியாது. உழைப்பைச் சிறப்பாக்கவோ அதிகரிக்கவோ முடியும். உழைப்பவர்களுக்கு விஷயம் தெரிந்திருக்க வேண்டும்.

இந்தத் தொழிற் கல்வி இளமையிலிருந்தே கற்கப்பட வேண்டும். ஐந்தில் குந்தியிருந்து விட்டு ஐம்பதில் வளையப் பார்த்தால் முதுகுதான் ஒடியும். எனவே ராஜாஜி சிறு வயது முதல் தொழிற் கல்வி பயில வைத்திருப்பது மண்டையிலே களிமண் இல்லாதவர்கள் எல்லாரும் ஒப்புக்கொள்ளக் கூடியது.

ராஜாஜியின் புரட்சிகரமான இந்தத் திட்டம் போல 1918-ல் இந்தியத் தொழில் கமிஷன் தொழிற் கல்வியை வற்புறுத்தி ஒரு திட்டம் வகுத்தது. பிரிட்டிஷ் கல்வி அறிஞர்கள் அப்பாட் (Abbot), வுட் (Wood) ஆகியோரும் அதை வற்புறுத்தினார்கள். ஆனால் பிரிட்டிஷ் சர்க்கார் அதற்கு இணங்கவில்லை. இப்போது சுதந்திர சர்க்கார் அதைச் செய்ய வந்திருப்பது நமக்குப் பெருமையை யளிக்கிறது.

தொழிற் கல்வி பயின்ற அமெரிக்கத் தொழிலாளி நம்முடைய மத்திய சர்க்கார் மந்திரியின் சம்பளத்தைப் போல் மூன்று நான்கு மடங்கு சம்பாதிக்கிறான். நம்முடைய தொழிலாளி அப்படி உயர்ந்து விடுவானோ என்று எண்ணும் சுயநலக்காரர்கள் ராஜாஜி திட்டத்தை எதிர்க்கலாம்.

இந்தத் திட்டத்தை எதிர்ப்பவர்கள் மக்கள் வாழ்க்கைத் தரம் உயருவதை, மக்களிடையே சோஷலிஸ உணர்ச்சி பரவுவதை, வேலையில்லாத் திண்டாட்டம் போவதை, சுபிட்சம் ஏற்படுவதை எதிர்ப்பவர்கள் ஆவார்கள்.

ஹூப்ளி
24—7—53 கே. சி. லக்ஷ்மிநாராயணன்

## சிறுவர்களின் வெற்றி!

இவ்வூரில் ஜூலை 20உ "பெற்றோர் மறியல் தினம்" என்று சொல்லிக் கொண்டு, பள்ளிக்கூட மதில் சுவர் ஓரமாகப் பாடசாலைக்கு வரும் வழிக்கு ஐம்பது அடி தூரத்தில் நின்று கொண்டு, "இன்று பள்ளிக்கு வராதீர்கள். நாளை வாருங்கள்" என்று சொல்லியும், "வராதே!" என்று சைகை காட்டியும், மீறிவந்த சிறுவர்கள் மீது சிறு கற்களை வீசியும் ஒருவர் ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருந்தார். தெருவின் மூலையில் வந்து கொண்டிருந்த இரண்டொரு சிறுவர்களையும் "இன்று பள்ளிக்குப் போகாதே!" என்று கழுத்தைப் பிடித்து கெட்டித் தள்ளினார். இன்னாரின் செய்கைக்குப் பயந்த சிறுவர்களும் சிறுமிகளும் 10-30மணிக்குப் பாடசாலைக்குள் வந்துசேர்ந்தனர்.

இவருடைய கல் வீச்சுக்கும் கெட்டித் தள்ளலுக்கும் பயந்து எட்டுப் பிள்ளைகள்தான் அன்று பள்ளிக்கு வரவில்லை.

12 மணிக்குப் பாடசாலை விட்ட பிறகு நண்பரைப் பார்த்த சிறுமிகள் "மறியலில் வெற்றி எங்களுடையதே" என்று அவர் முன்னிலையில் கோஷமிட்டனர். "உங்களையும் உங்கள் வாத்தியாரையும் காவேரியில்தான் தள்ள வேண்டும்" என்று நண்பர் குறைப்பட்டுக் கொண்டார்.

போச்சம்பள்ளி　　　கே. பழனியப்பன்
21—7—53　　　(போர்டு ஸ்கூல் ஆசிரியர்)

●

## நன்மையே விளையும்

பொருளாதார சாஸ்திரத்தைப் படித்தவர்களும், அநேகமாக பொருளாதாரத்தை ஒரு பொழுது போக்காகக் கருதுபவர்களும் டாக்டர் ஆல்பர்ட் மார்ஷல் என்பவரைப் பற்றித் தெரிந்து கொள்ளாமல் இருக்க முடியாது. ஆல்பர்ட் மார்ஷல் என்பவரைப் 'பொருளாதார சாஸ்திரத்தின் தகப்பனார்' என்று அழைப்பதுண்டு. அப்படிப்பட்ட மார்ஷல், தம்மிடம் படித்த ஒரு இந்திய மாணவனிடம் "இந்தியாவில் ஜப்பானியரைப் போல் சுறு சுறுப்புள்ளவர்களும், உண்மையை உணர்ந்தவர்களும், கேவலம் அரசியல், சட்ட விவாதம் முதலிய வாய்ப் பேச்சுகளுடன் நில்லாதவர்களும், சில ஆயிர மக்கள் இருந்தார்களானால், இந்தியா ஒரு பெரிய தேசமாகிவிடும். ஆனால், மேல் படிப்பு படித்த இந்தியர்கள் சுகபோகிகளாகவும், சட்ட விவாதங்களில் பணத்தை எதிர்பார்ப்பவர்களுமாக இருந்தால், அவர்கள் தங்கள் தேசத்திற்குக் கடற்கரை மண்ணைப் போல் உபயோகமில்லாமல் இருப்பார்கள்" என்றாராம்.

ஒருவன் மோட்டார் சைக்கிள் ஓட்டக் கற்றுக் கொள்ள வேண்டுமென்றால், அவனுக்குச் சொல்லிக்கொடுப்பவன் முதலில் 'உனக்குச் சைக்கிள் விடத் தெரியுமா?' என்று கேட்பான். சைக்கிள் விடத் தெரிந்தவனுக்கு மோட்டார் சைக்கிள் அவ்வளவு கஷ்டமிருக்காது. அதேமாதிரி இன்று குடிசைத் தொழில்களைக் கற்றுக் கொள்பவன் தான் நாளைக்கு மில்களிலோ அல்லது தொழிற்சாலைகளிலோ பெரிய வேலையைத் தேடலாம்.

நம் கல்வியிலுள்ள குறைகளை அவ்வப்போது ஆங்கிலேயர்களே எடுத்துக் காட்டி வந்திருக்கிறார்கள். உதாரணமாக 1936 வருஷம் நவம்பர் மாதத்தில் இந்தியா சர்க்காரின் விசேஷ அழைப்பின் பேரில் ஏ. ஆபட், எஸ். எச். வுட் என்ற இரு கல்வி மேதாவிகள் இந்தியாவுக்கு விஜயம் செய்தார்கள்.

அவர்கள் "உழைப்பின் மேன்மை உணர்த்தும் ஒரு அறிவுள்ள கல்வித் திட்டம் மிகவும் அவசியமானது. ஆரம்பப் பள்ளிக்கூடங்களில், சிறுவர்களுக்குப் போதனை அவரவர்களுடைய சுய இஷ்டத்தைப் பொறுத்து அமைந்திருக்க வேண்டும்" என்று கூறிச் சென்றார்கள்.

தற்போதுள்ள நிலையில் இந்தியாவில் ஒவ்வொரு பாடசாலையிலும் கைத்தொழில்களைப் புகட்ட வேண்டுமென்பது சாத்தியமற்ற காரியமாகும். கைத்தொழில் தெரிந்த உபாத்தியாயர்களையே இங்கு காண்பது அரிது. அடுத்தபடியாகச் சிறுவர்களுடைய சுய இஷ்டத்தைப் பொறுத்துக் கல்வித் திட்டம் அமைய வேண்டுமென்பதைக் குறித்து அதிகம் சொல்ல வேண்டியதில்லை.

ஒரு ஆங்கிலப் பேராசிரியர் சொன்னபடி 'மனிதன் ஒரு வாயுடன் பிறக்கிறான் என்றாலும், அவனுக்குக் கடவுள் இரண்டு கைகளையும்கூடக் கொடுத்திருக்கிறார். அவன் வாயால் ஒரு பங்கு சாப்பிடுவதைப் போல் கைகளால் இரண்டு பங்கு வேலை செய்ய வேண்டும்.' ஏட்டுப் படிப்பும் கைத்தொழில் கல்வியும் சேர்ந்தால் அதனால் நன்மை விளையுமே தவிரத் தீமை விளையாது.

சென்னை
21—7—53　　த. அ. கிருஷ்ணசாமி எம். ஏ.,

●

## சாலியமங்கலத்தில் உண்டு

ஜூலை 19-ம் தேதி கல்கி இதழில் "மேலட்டூர் பாகவத மேள காட்டிய-நாடகம்" என்ற தலைப்பில் ஸ்ரீ ச. கிருஷ்ணய்யர் எழுதியிருக்கும் கட்டுரையை வரவேற்கிறோம்.

ஆனால் அதே கட்டுரையில் தஞ்சை ஜில்லா "சாலியமங்கலம்" என்ற கிராமத்தில் மேற்படி காட்டிய - நாடகங்கள் நடை பெறவில்லை என எழுதப்பட்டிருப்பது கண்டு திடுக்கிடுவதோடு, ஆச்சரியப் படவேண்டியும் இருக்கிறது.

சாலியமங்கலத்தில் பாகவத மேள காட்டிய-நாடகங்கள் பல வருடங்களாகத் தஞ்சையை ஆண்ட ஸ்ரீ அச்சுதப்ப நாயகர் கால முதற் கொண்டு பக்தியுடனும் கலாச்சாரப் பண்புடனும் விமரிசையாக ஆண்டுதோறும் நடந்து வருவதை ஸ்ரீ ச. கிருஷ்ணய்யர் அவர்கள் கவனத்துக்குக் கொண்டு வர விரும்புகிறோம்.

இவ்வாண்டில் சென்ற மே மாதம் 27, 29, 30 முதலிய தேதிகளில் நடந்த விழாவுக்கு ஆயிரக்கணக்கான கலா ரசிகர்கள் வந்திருந்தார்கள். ஸ்ரீ நரஸிம்ம நிலையம் என்ற கட்டிடம் மேற்படி விழாவின் தேவைகளுக்காக இவ்வாண்டில் திறந்து வைக்கப்பட்டிருக்கிறது.

தஞ்சை　　　டி. எஸ். லெக்ஷ்மணன்
25-7-53　　　எஸ். நாகராஜன்

●

## யார் விரும்புவார்கள் ?

சென்னை மாகாணத்தை 'மாதிரி ரஷ்யா'வாக ஆக்கப் போவதாக வாய்ச் சவடால் பேசி, ஐக்கிய முன்னணி என்ற பல ஒட்டுப் போட்ட போர்வையில் பதவியைப் பிடிக்கத் திட்டமிட்ட கூட்டம் இன்று ராஜாஜி பதவியிலிருந்து விலகுவதை விரும்பலாம். திராவிடக் கழகம், திராவிட முன்னேற்றக் கழகம் இவற்றின் செல்வாக்கைச் செல்லாக் காசாக்கி, திட்டமிட்டுப் பெரிய வெற்றிகாண வகுத்த போராட்டங்களை யெல்லாம் புகையச்

செய்து மக்கள் மன்றத்தில் ஏற்றம் காண முடியாமல் செய்ததற்காக அந்தோழர்கள் விரும்புவர் ராஜாஜி பதவியிலிருந்து விலகுவதை.

இவர்கள் விரும்புவது இயற்கை. ஆனால் அந்தக் கூட்டத்தில் சில காங்கிரஸ் மேதைகள் பங்கு பெறுவதுதான் புரியாத புதிராக உள்ளது.

சுயநலவாதிகளும், பதவிக்காக எதிர்நோக்கியுள்ளவர்களும் விரும்பும் விருப்பப்படி ராஜாஜி பதவியிலிருந்து விலகி விடுவாரா! அல்லது மக்கள் கருத்துக்கேற்ப தனது சிறந்த அரசியல் அறிவினால் காந்திஜி மக்கள் நலம் கருதிச் செய்ய எண்ணிய திட்டங்களைக் கொணர்ந்து, மக்களுக்கு நல்வாழ்வு அளிக்க நம் மாகாணப் பிரதமராக நீடித்துப் பணியாற்றுவாரா!

ஒக்கூர்
20—7—53 எஸ். ஜெயநாதன்

நமது இலங்கைக் கடிதம்

# அரசாங்கத்தின் முன்னேற்பாடு

கொழும்பு, ஆகஸ்டு 1௨.

இலங்கைக்கு இது சோதனை மிக்க மாதம். உலகிலேயே சமாதானமும் அமைதியும் நிலைத்து நிற்கும் தேசமென்று பெயரெடுத்த இந்நாட்டில் இப்பொழுது பெரிய கொந்தளிப்பும் பரபரப்பும் மலிந்திருக்கிறது.

செலவைச் சரிக்கட்ட முடியாது விழிக்கும் அரசாங்கம், அரிசி மான்யத்தையும் பள்ளிப் பிள்ளைகளுக்கு அளித்து வந்த இலவச மத்தியான போஜனத்தையும் நிறுத்தி, தபால் தந்தி டெலிபோன் கட்டணங்கள், வரிகள், தீர்வைகள் ஆகியவற்றை உயர்த்தியது. இதை எதிர்த்து நாடெங்கிலும் பாரதூரமான ஆர்ப்பாட்டங்கள் நடைபெறுகின்றன. கொழும்பில் நடந்த ஓர் ஆர்ப்பாட்டத்தில் போலீசார் கண்ணீர்ப் புகைப் பிரயோகம் செய்தனர். இந்த அருமையான சந்தர்ப்பத்தை எதிர்க் கட்சியினர் நன்கு பயன்படுத்தி ஒரு பெரிய அரசியல் போராட்டத்தைத் தீவிரமாகத் தொடங்கியிருக்கிறார்கள். பலாத்கார முறையில் சர்க்காரைக் கைப்பற்ற எதிர்க் கட்சிகள் முயற்சிப்பதாயும் காலித்தனத்தை நசுக்க அரசாங்கம் திடமாகத் தீர்மானித்திருக்கிறதென்றும் பிரதம மந்திரி சேனநாயகா இவ்வாரம் பார்லிமெண்டில் அறிவித்தார். வேலை நிறுத்தத்தில் சேரும் அரசாங்க சிப்பந்திகளுக்கு வேலையே போய் விடுமென்றும் கண்டிப்பாக எச்சரிக்கப் பட்டிருக்கிறது.

## ஒற்றுமை இல்லையே!

நிற்க. பார்லிமெண்டிலுள்ள எதிர்க் கட்சி அங்கத்தினர்களெல்லாம் கூட்டாக ராஜினாமாச் செய்து மற்றொரு பொதுத் தேர்தல் நடத்த வேண்டிய நிர்ப்பந்தத்தை உண்டுபண்ண வேண்டுமென்று ஸ்ரீ டபிள்யூ. தஹநாயகா என்ற ஒரு அங்கத்தினர் யோசனை கூறினார். ஆனால் இவ்வாரம் நடந்த எதிர்க் கட்சிகளின் கலப்புக் கூட்டத்தில் இந்த யோசனைக்கு ஆதரவு இல்லையென்பதோடு தற்போதைய அரசாங்கத்துக்குப் பதிலாக மாற்று அரசாங்கத்தை நிறுவும் அளவுக்குக் கட்டுப்பாடும் ஒற்றுமையும் எதிர்க் கட்சிகளிடம் இல்லை. சேனநாயகா அரசாங்கத்தைத் தோற்கடிக்க வேண்டுமென்பதில் ஒருமனப்பட்ட அபிப்பிராய மிருக்கிறது. ஆனால் புதிய சர்க்காரை நிறுவுவதிலும் இத்தகைய ஒற்றுமையிருந்தால்தானே!

"எதிர்க் கட்சிகள் ஒவ்வொன்றும் வெவ்வேறு அரசியல் கொள்கைகளும் வேலைத் திட்டங்களும் உடையவைகளா யிருக்கின்றன. இப்படிப் பட்டவர்களை நம்பி மக்கள் அரசாங்கத்தை எப்படி ஒப்படைப்பார்கள்!" என்று ஸ்ரீ ஸி. சுந்தரலிங்கம் கலப்புக் கூட்டத்தில் வினவினார்.

## துயர சம்பவம்

சென்ற ஞாயிற்றுக்கிழமை இலங்கை முதலாளிகளுக்காக மீன் பிடிக்க 75 இந்திய மீன் பிடித்தொழிலாளர்கள் கடலுக்குச் சென்று புயலில் சிக்கி நால்வர் மரணமடைந்து விட்டார்கள். பலருக்குக் காயம். படகுகளையும் வலைகளையும் பறிகொடுத்துப் பிழைக்க வழியில்லாமல் தவிக்கிறார்கள். இறந்தவர்களின் குடும்பங்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்கும் யோசனை ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. ஸ்ரீ தாமோதரம் என்பவரும் வேறு சிலரும் தவிக்கும் இந்தத் தொழிலாளருக்கு உதவி நிதி திரட்ட முயற்சி செய்து வருகின்றனர்.

## இலங்கை திரும்பினர்

மன்னாரில் மற்றும் பல இந்திய மீன் பிடித் தொழிலாளரைப் போலீசார் கைது செய்து அவர்களை நாடு கடத்த இந்திய ஹைகமிஷனின் அனுமதியைக் கேட்டிருக்கிறார்கள். நாடு கடத்தப் பட்டிருப்பவர்களெல்லாம் இந்தியப் பிரஜைகள் தானா என்பதை நேரில் விசாரித்துப் பார்க்க ஹைகமிஷனைச் சேர்ந்த ஒரு அதிகாரி மன்னாருக்குப் புறப்பட்டுப் போயிருக்கிறார். இந்திய அரசாங்கம் எடுத்துக் கொண்ட புத்திசாலித்தனமான நடவடிக்கையின் பயனாக இந்திய ஹைகமிஷனின் அனுமதியில்லாமல் இலங்கை அரசாங்கம் இங்கிருந்து ஒரு எலிக் குஞ்சைக்கூட இந்தியாவுக்கு நாடு கடத்த முடியாம லிருக்கிறது.

இலங்கைப் பிரஜா வுரிமைக்கு மனுக் கொடுத்திருந்த வி. கந்தையா என்ற ஒரு தொழிலாளி நியாயமின்றி இந்தியாவுக்கு நாடு கடத்தப்பட்டு விட்டதாக இலங்கை இந்தியக் காங்கிரஸைச் சேர்ந்த ஸ்ரீ எஸ். எம். சுப்பையா பிரதம மந்திரியிடம் புகார் செய்து கொண்டதற் கிணங்க மேற்படி கந்தையாவை இலங்கை அரசாங்க அதிகாரி யொருவர் தனுஷ்கோடியில் சந்தித்து இலங்கைக்குத் திருப்பி யழைத்து வந்து விட்டார்.

சென்றவாரம் இணுவில் என்னுமிடத்தில் தமிழ் அரசுக் கட்சியின் கூட்டமொன்று நடைபெற்றது. அப்பொழுது திரு ஸி. வன்னிய சிங்கமும் வேறு பல கட்சித் தலைவர்களும் பேசினார்கள். தமிழர் வாழும் பிரதேசங்களில் நூற்றுக்கணக்கான சிங்களக் குடும்பங்களைக் குடியேற்ற அரசாங்கம் முயன்றுவருகிறதென்று பலரும் புகார் செய்தனர்.

மதத் துவேஷமான புத்தகங்கள் இந்தியாவிலிருந்து பல்லாயிரக் கணக்கில் இலங்கைக்கு வந்தவண்ண மிருக்கின்றன. இம்மாதிரியான புத்தகங்களின் இறக்குமதியையும் விநியோகத்தையும் தடை செய்யக் கண்டிப்பான நடவடிக்கை யெடுப்பதென்று மந்திரி சபை இவ்வாரம் தீர்மானித்திருக்கிறது. —ஜனி

# பெண் உள்ளம்

– கி. ரங்கராஜன் –



எப்போது விடுமுறை விடப் போகிறார்கள்? எப்போது கடைசிப் பரீட்சைத் தாளை எழுதி எறிந்து விட்டு ஊருக்குப் புறப்படப் போகிறோம் என்று துடித்துக் கொண்டிருந்த ராதாமணி, விடுமுறை ஆரம்பமாகி ஒரு வாரம், பத்து நாள் ஆன பிறகும் சென்னையை விட்டுக் கிளம்பாமல் இருந்தது அவள் பெற்றோருக்கு ஆச்சரியமாக இருந்தது.

ஒரு முறைக்கு நான்கு முறையாக அவளைப் புறப்பட்டு வருமாறு அவள் தகப்பனார் வேதராம ஐயர் கடிதம் எழுதின பிறகுதான் அவள் கிராமத்துக்கு வந்து சேர்ந்தாள்.

வந்து ஒரு வாரம் வரைக்கும் அவளுக்கு யாருடனும் பேசப் பிடிக்கவில்லை. அந்த ஊரிலே இருந்த அத்தனை ஜனங்களும், சுத்த அநாகரிகம் படைத்த ஜந்துக்களாக அவளுக்குத் தோன்றினார்கள். திரும்பத் திரும்ப அந்தப் போஸ்டு மாஸ்டரும், அவர் மனைவியாமே, அந்த ஒட்டி உலர்ந்த பிரகிருதி. இப்படிப் பார்த்த முகங்களையே பார்த்துக் கொண்டிருப்பது அவளுக்கு வேதனையாக இருந்தது. திரும்பச் சென்னைக்கே போய் விட்டால்தான் என்ன என்று நினைத்துக் கொண்டிருந்த பொழுது திடீரென்று ஒரு பெண் ரொம்ப 'ஸ்டைலா'கத் தன் வீடு நோக்கி வருவதை அறிந்தாள். பத்தரை மாற்றுத் தங்கத்தினால் செய்ததொரு சிலை உயிர் பெற்று எழுந்து வந்தாற் போன்று, அந்தப் பெண்மணி அங்கே வந்தாள்.

"நான் அடுத்த தெருவில் இருக்கிறேன். கோயமுத்தூரிலிருந்து விடுமுறைக்கு வந்திருக்கிறேன். அங்கே 'ஆர்ட்ஸ்' காலேஜில் படிக்கிறேன். நீங்கள் வரப்போவதாகச் சொன்னார்கள். லீவு முடிகிறவரைக்கும் எனக்கு நல்ல பொழுதாகப் போகும். எனக்கு ஒரு நல்ல 'கம்பெனி' கிடைத்தது" என்றாள் அந்தப் பெண்.

ராதாமணிக்கு உயிர் வந்தது. "நல்லவேளை; இந்தப் பட்டிக் காட்டில் பொழுது எப்படித் தொலையும் என்று நினைத்தேன். கடவுள் காப்பாற்றினார். வாருங்கள் உள்ளே" என்று சொல்லிக் கொண்டே வந்தவளை அழைத்துக் கொண்டு உள்ளே போனாள்.

இரண்டு வாரங்கள் ஆகவில்லை. அதற்குள் ராதாமணியும், ரேணுகாவும் பல வருஷங்கள் ஒன்றாய்ப் பழகினவர்கள் போலப் பழகினார்கள். ஒரு நாள் ஒரு யுகமாகக் கழிந்த ராதாமணிக்கு இப்பொழுது ஒரு மாதம் ஒரு நாளாகக் கழிந்தது. விடுமுறை நாட்கள் வேகமாகக் கழிந்து கொண்டிருந்தன.

காலேஜ் திறக்கும் சமயமும் நெருங்கிக் கொண்டிருந்தது.

தன்னுடைய தோழியைப் பிரியப் போகிறோமே என்று ஒரு சமயம் நினைத்தாலும், மறு சமயத்தில் சென்னையில் பழைய நண்பர்களை யெல்லாம் மீண்டும் சந்திக்கப் போகிறோம்என்ற மகிழ்ச்சியில் அப் பிரிவுத் துயர் ராதாமணியை அவ்வளவாகப் பாதிக்கவில்லை. கோயமுத்தூரில் காலேஜ் திறந்துவிடவே, ரேணுகா புறப்பட்டு விட்டாள். ரயிலுக்குப் புறப்படும் சமயத்தில்தான் தன் தோழி ராதாமணிக்குத் தன் ஞாபகமாக ஏதாவது ஒன்றைக் கொடுக்க வேண்டும் என்று நினைத்தாள். எதைக் கொடுக்கலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தபோது, முன்பு ஒரு சமயத்தில் எடுத்த தன்னுடைய புகைப் படம் அவள் ஞாபகத்துக்கு வந்தது. பெட்டியின் அடியில் இருந்த அந்தப் படத்தைத் தேடி எடுத்து ராதாமணியிடம் கொடுத்து "ராதா, இதை என் ஞாபகமாக வைத்துக் கொள்" என்று சொல்லிக் கொடுத்தாள்."

படத்தைக் கையில் வாங்கிக் கொண்ட ராதாமணி, அதனைக் கூர்ந்து கவனித்தாள். படத்தில் ஆணும் பெண்ணுமாக இருவர் காட்சி அளித்தனர். ஒன்று ரேணுகா. மற்றொன்று? அது யார்? அது யார்?......

ராதாமணிக்குக் கண்கள் இருண்டன. உலகமே சுழல்வது போல ஒரு தோற்றம் அவளுக்கு ஏற்பட்டது. சட்டென்று தன் உள்

ளத்தில் எழுந்த கிளர்ச்சியைத் தன் தோழி அறியாதபடி மறைத்துக் கொண்டு, அவளுக்கு விடை கொடுத்து அனுப்பி விட்டு உள்ளே வந்தாள்.

அவளுடைய நெஞ்சத்தில் பல்வேறு உணர்ச்சிகள் பொங்கிப் பொங்கித் தணிந்து கொண்டிருந்தன. சிந்தனை ஒரேயடியாகக் குழம்பிப் போய்ச் செயலற்று நிற்கும் எல்லையை எட்டிக் கொண்டிருந்தது.

சென்னையில் ராதாமணி படித்த வகுப்புக்கு ஒரு வகுப்பு மேலே சபேசன் என்ற அந்த இளைஞனும் படித்தான். ஆரம்பத்தில் தாம் உண்டு, தம் வேலையுண்டு, தம் பாடம் உண்டு என்று நினைத்துப் படித்துக் கொண்டிருந்த அந்த இரண்டு உள்ளங்களில், ஒருவரைப் பற்றி மற்றவர் அறிந்துகொள்ள வேண்டும் என்ற எண்ணம் உதிக்கத் தலைப்பட்டது.

சிறுகச் சிறுக அவர்களுக்குள் பேச்சு வார்த்தை ஆரம்பித்தது. பாடப் புத்தகங்களில் அடிக்கடி சந்தேகம் வரத் தலைப்பட்டது. பாடங்களில், சபேசனுக்கு உதிக்கும் சந்தேகங்களை ராதாமணியும், ராதாமணிக்கு உதிக்கும் சந்தேகங்களைச் சபேசனுமாகத் தீர்த்துக் கொண்டார்கள். அவர்கள் இருவரும் 'தொல்பெருங் காலமெல்லாம்' பழகினவர்போல மனம் கலந்து பழகினார்கள்; கடற்கரைக்குப் போனார்கள்; சினிமாவுக்குப் போனார்கள்; தத்தமது நெஞ்சத்தில் உதிக்கும் எண்ணங்களை, ஒளிவு மறைவின்றி வாய்விட்டுப் பேசி மகிழ்ந்தார்கள். கடைசியாகப் பரீட்சை வந்து தொலைந்தது. கூடவே விடுமுறையும் வந்தது. தந்தையிடமிருந்து, சரமாரியாகக் கடிதங்கள் பறக்கவே, 'தெய்வமே' என்று கிராமத்துக்கு வந்து விட்டாள்.

அன்று ராதாமணியின் மனக் கண்முன் இந்தப் பழைய நினைவுகளின் சித்திரங்கள் ஒவ்வொன்றாக எழுந்தன.

படத்தில் ரேணுகாவுடன் இருப்பது நிச்சயமாகச் சபேசன்தான். ரேணுகாவுக்கு அவன் என்ன உறவு? ஐயோ! இந்த ஆண் மக்கள் தாம் எவ்வளவு மோசக்காரர்கள்! ஒன்றை விட்டு ஒன்றைப் பற்றுவதுதான் அவர்கள் இயல்போ? சரியான சமயத்தில் இந்தப் படத்தைப் பார்க்கும்படியான ஒரு வாய்ப்பு ஏற்பட்டதே. இல்லாவிட்டால் என்னென்ன அனர்த்தங்களுக்கு ஆளாக வேண்டியிருக்குமோ? யார் கண்டார்கள்? என்றெல்லாம் நினைத்து வருந்தினாள்; ஏங்கினாள்.

அன்று ராதாமணி சென்னைக்குப் புறப்பட வேண்டிய தினம். தன்னுடன் வரவேண்டிய சாமான்களை ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்தாள் அவள். அப்போது அவள் தகப்பனார் அவள் சமீபம் வந்து "அம்மா ராதா! இந்த வருஷத்தோடு உனக்குப் படிப்பு முடிகிறது. மேலே டாக்டருக்குப் படிக்கிறேன், அதற்குப் படிக்கிறேன், இதற்குப் படிக்கிறேன் என்று சொல்லிக் கொண்டிராமல் உனக்குப் பிடித்த ஒருவனை விவாகம் செய்து கொண்டு குடியும் குடித்தனமுமாக இருக்க வேண்டும். நீ பழகுகிற இடத்தில் யாராவது உனக்குப் பிடித்திருந்தால் சொல்லு. ஜாதகம் வரவழைத்துப் பொருத்தமாக இருக்கிறதா என்று பார்க்கிறேன்" என்றார்.

வேறொரு சமயமாக இருந்தால் நிச்சயம் ராதாமணி, சபேசனைப் பற்றிப் பிரஸ்தாபித்திருப்பாள். ரேணுகாவிடமிருந்து கிடைத்த அந்தப் படத்தைப் பார்த்த பிறகு அப்படிச் சொல்லுவாளா?

சிரிப்புக் கலந்த குரலில் "என்ன அப்பா இப்படிச் சொல்லுகிறீர்கள்? படிப்பில் எனக்கிருக்கும் கவலையில் மற்ற விஷயங்களெல்லாம் என் மனசில் இடம் பெறவில்லை. அதோடு, நீங்களும் அம்மாவும் இருக்கும் போது நான் எதற்கு அப்பா—" வாக்கியத்தை மேலே முடிக்கவில்லை. ராதாமணி அங்கிருந்து ஓடி விட்டாள்.

ரயிலில் ஏறி உட்கார்ந்த பிறகு ராதாமணி தன் மனசுக்குள் ஒரு திட்டம் வகுத்துக் கொண்டாள். எக்காரணத்தைக் கொண்டும் சபேசனுடன் பேசக் கூடாது. அவனுடன் பழகுவதை நிறுத்திக் கொள்ள வேண்டும். அதுமட்டுமல்ல. வேறு எந்தப் புருஷப் பையனுடனும் பழகுவதே கூடாது. சுத்த சுயநல ஆசாமிகள் அவர்கள் என்று தீர்மானித்து விட்டாள்.

எதற்கெடுத்தாலும் தன்னைச் சுற்றிச் சுற்றிக் கொண்டு கலகலப்பாகப் பழகிய ராதாமணி தன்னைக் காணும்போதெல்லாம் முகத்தைச் சுளித்துக் கொண்டு அப்பால் போய் விடுவதன் ரகசியம் சபேசனுக்கு விளங்கவில்லை. அன்றொரு நாள், "கிராமத்திலிருந்து எப்பொழுது வந்தீர்கள்?" என்று அவன் அவளைக் கேட்டபோது, ஏதோ காதில் பட்டதும் படாததுமாக 'நேற்று' என்று அரை வார்த்தையில் சொல்லி விட்டு அப்பால் போய் விட்டது எதனால் என்று அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை. ஒரு வேளை அவளுக்கு வேறு இடத்தில் அவள் பெற்றோர்கள் 'வரன்' பார்த்திருக்கிறார்களோ? அப்படி அவர்கள் பார்த்திருந்தால் இவளுக்கு வாய் எங்கே போய் விட்டது? என் பெயரைச் சொல்லி அவரைத்தான் விவாகம் செய்து கொள்ளுவேன் என்று சொல்லுவதற்கென்ன? ஒருகால் இவளுக்கு வேறு யார் மீதிலாவது நாட்டம் விழுந்திருக்குமோ? அடே அப்பா! இந்தப் பெண்கள்தாம் எவ்வளவு மோசக்காரர்கள்! கடைசி வரைக்கும் நம்பவைத்துக் கழுத்தை அறுத்து விடுவார்கள்" என்று பெண் இனத்தையே மனதார வைது தீர்த்தான்.

நாட்கள் ஓடின. ஆண் மக்களிடம் ராதாமணி கொண்டிருந்த வெறுப்பு சிறிது சிறிதாக மாறத் தொடங்கியது. காலப் போக்கு மட்டும் அதற்குக் காரணம் அல்ல. ஸ்ரீதரன் தான் ஓரளவு அத்தகைய மனமாற்றத்துக்குக் காரணம் என்று சொல்ல வேண்டும்.

ஸ்ரீதரனுக்கும், ராதாமணிக்கும் விவாகம் ஆனபிறகுதான், அவர்கள் இருவருக்கும் ஒருவருக்கொருவர் காதல் ஆரம்பமாயிற்று. காதலுக்குப் பிறகு கல்யாணமா, கல்யாணத்துக்குப் பிறகு காதலா என்று யாராவது அவர்களைக் கேட்டால், விவாகத்துக்குப் பிறகு தான் காதல் என்று நிச்சயமாக அவர்கள் சொல்லுவார்கள்.

ஸ்ரீதரன் ஆபீசுக்குப் போன பிறகு ராதாமணிக்கு வேலை ஓடாது. வருகிற தமிழ்ப் பத்திரிகையும், ஆங்கிலப் பத்திரிகையும், படிப்பாரற்று மூலையில் குவிந்து கிடக்கும். மணி எப்பொழுது ஆறு ஆகும், ஸ்ரீதரன் எப்பொழுது வீட்டுக்கு வருவான் என்பதைத் தவிர வேறொன்றையும் சிந்தித்தறியாள்.

அவர்கள் வாழ்க்கை "ஊனும், உயிரும் உணர்வும் போல்" இருந்தது என்று சொன்னால் அது மிகையாகாது.

ஒருநாள் ஸ்ரீதரன், ராதாமணியை வேடிக்கையாகக் கேட்டான். ஆமாம், நீ எத்தனையோ வருஷம் சென்னையிலேயே இருந்திருக்கிறாய். அந்த நகரத்தைப் பற்றி ஒரு வார்த்தை கூட நீ பேசவில்லையே ஏன்?"

"ஏனா? சென்னை ஒரு ஊரா? டிராம் வண்டிச் சத்தமும், பஸ் சத்தமும், சாக்கடை நாற்றமும், யாருக்குப் பிடிக்கிறது அந்த ஊர். சென்னை நகரத்துக்கு, நரகம் எவ்வளவோ மேல். அது கிடக்கட்டும்; திடீர் என்று அந்த ஊரைப் பற்றி உங்களுக்கு நினைவு எழுவானேன்?"

"காரணம் இல்லாமலா? சென்னையில் என் நண்பன் ஒருவனுக்கு வருகிற ஞாயிற்றுக்கிழமை விவாகம். அந்த விவாகத்துக்கு நாம் இருவரும் போக வேண்டும்."

"நீங்கள் மட்டும் போனால் போதாதா? நான் வேறு எதற்கு?"

"அவசியம் வர வேண்டும். அத்துடன் தம்பதி சகிதமாகத் தான் வர வேண்டும் என்று ஒரு தடவைக்குப் பத்து தடவையாக எழுதி யிருக்கிறான்" என்றான் ஸ்ரீதரன்.

"சரி, வருகிறேன்" என்றாள் ராதாமணி.

செங்கோட்டை பாஸஞ்சர் எழும்பூரை மிதிக்கும்போது நன்றாக விடிந்து விட்டது. ஸ்டேஷனைப் பார்க்கும்போது ராதாமணிக்கு வேதனையாய்த் தின்றது. வீவுக்குப் புறப்படும் ஒவ்வொரு சமயத்திலும், கூடவே ரயிலடிக்கு வந்து தன்னை வழி அனுப்பிய சபேசன் ஞாபகம் வந்து அவளை வதைத்தது. "சே, அவனும் ஒரு மனுஷனா? மோசக்காரன்" என்று நினைத்துத் தன் மனத்தினின்றும் வேகமாக அவனை ஒதுக்கி விட்டுக் கீழே இறங்கினாள்.

புரசைவாக்கத்தில், சுப்பிரமணிய முதலியார் தெருவில், நாலைந்து வீடுகள் அடைத்துப் பிரமாதமான பந்தல் போடப்பட்டிருந்தது.

இருவரும் அங்கே போனார்கள். அவர்கள் போன சமயம் மணமக்கள் மாலை மாற்றிக் கொண்டிருந்த சமயமாக இருந்தது. ஸ்ரீதரன் தன் நண்பனை மணக் கோலத்தில் பார்த்து மகிழ்ந்தான். மணமகள், தன் எதிரே வந்து கொண்டிருந்த அந்த இருவரைப் பார்த்ததும் வியப்பும் பிரமிப்பும் மேலிட்டவளாய்ச் செயல் மறந்து போனாள். ராதாமணியும் அதே நிலையில்தான் இருந்திருக்க வேண்டும். தன் தோழி ரேணுகாவை, அவள் விவாகத்தின்போது சந்திப்போம் என்று அவள் நினைத்திருக்க முடியுமா? தன் கணவரின் நண்பரா தன் தோழியின் கணவர் என்று நினைத்து அவரை வாழ்த்தினாள்.

விவாக வைபவம் முடிந்து ஊருக்குப் புறப்படும்போது, ரேணுகாவைச் சந்தித்துச் சிறிது நேரம் அவளுடன் பேசிக் கொண்டிருந்தாள் ராதாமணி.

"உன்னுடன் கூடவந்தவரா, உன் கணவர்? நீ ரொம்ப அதிர்ஷ்டக்காரிதான் அம்மா! போகிறது, எப்படியோ என் விவாகத்துக்கு வந்தவரைக்கும் திருப்திதான்!" என்று ரேணுகா சொல்லிக் கொண்டிருக்கும் போது, அந்தப் பக்கமாகவந்த ஒரு யுவனிவை, தன் தோழிக்கு அறிமுகம் செய்விக்கும் பாவனையில் "இவன்தான் என் புதிய மன்னி-மாலதி சபேசன். என் அண்ணாவை என் போட்டோவில்பார்த்திருப்பாயே?" என்றாள்.

'உன் அண்ணாவா சபேசன்?' என்று கேட்க வாயெடுத்த, ராதாமணி சட்டென்று நிறுத்திக்கொண்டு "நான் போய் வருகிறேன்" என்று விடை பெற்றுக் கொண்டாள்.

நாலைந்து தினங்களுக்குப் பிறகு ஒரு நாள் ஸ்ரீதரன் தன் மனைவியுடன் ஏகாந்தமாகப் பேசிக் கொண்டிருந்தபோது "என் நண்பன்" ரொம்பக் கொடுத்து வைத்தவன். இல்லாவிட்டால் இந்த அதியற்புதமான பெண் அவனுக்குக் கிடைத் திருப்பாளா?" என்றான்.

ஏதோ விசேஷம் இருக்கவேண்டும் என்று ஊகித்தவளாய் "ஏன், என்ன விசேஷம்?" என்று கேட்டாள் ராதாமணி.

"இந்தப் பெண்ணை ஏற்கெனவே எனக்குத் தெரியும். கோயமுத்தூரில் என்னுடன் வாசித்தவள்தானே இவள்? இந்தப் பெண்ணை எனக்குக் கொடுப்பதாகக் கூட ஒரு பிரஸ்தாபம் இருந்தது. ஜாதகம் பொருத்தமில்லை."

"உங்கள் நண்பர் அதிர்ஷ்டக்காரரோ இல்லையோ, நான் அதிர்ஷ்டக்காரி என்பது நிச்சயம்" என்றாள் ராதாமணி. அப்போது அவள் தோழி ரேணுகா, தன்னிடம் நீ "நீ ரொம்ப அதிர்ஷ்டக்காரி" என்று சொன்னது அவள் நினைவுக்கு வந்தது.

அது மட்டுமல்ல, அவள் அதிர்ஷ்டக்காரியானதனால்தானே, சபேசனுக்கு மனைவியாக வேண்டியவள் ஸ்ரீதரனுக்கு மனைவியானாள்?

அந்த விருத்தாந்தத்தை எல்லாம் தன் கணவனிடம் கூற அவள் விரும்பவில்லை.

ஸ்ரீதரன் ஆண் பிள்ளை. அவன் தன்னுடன் படித்த பெண்களைப் பற்றிப் பெருமையாக மனைவியிடம் சொல்லலாம்

ராதாமணி அப்படி யெல்லாம் சொல்ல முடியுமா? அவள் பெண்தானே!

# வீட்டுச் சலவை வேலையை

## சுலபமாக்குகிறது



501 ஸோப்புகளின் செழுமையான நுரை துணி மணிகளுக்குள் ஊடுருவிச் சென்று, அழுக்கை யெல்லாம் மாயமாய் வெளியேற்றுகிறது. இந்த ஸோப்புகள் வீட்டுச் சலவை வேலையை உங்களுக்கு அதிக சுலபமும் சிக்கனமுமாக்குகின்றன.




# 501

## சலவை ஸோப்புகள்

எல்லாம் டாடா தயாரிப்புகளே 

டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்





ரமண்லால் வஸந்தலால் தேசாய் :: மொழிபெயர்ப்பு : ரா. வீ.

## 9. கனவு கலைந்தது!

வெட வெட வென்று நடுங்கியவாறு நின்று கொண்டிருந்த மாலதியின் மனத்தைத் துயரச் சுமை அழுத்தியது. பரமானந்தர் கட்டாயம் ரஹ்மத்தைக் கொளுத்தியே தீருவார் என்று அவளுக்குப் பட்டது. ஆனால் அவள் விஷயத்தை அவ்வளவு முற்றவிட விரும்பவில்லை. அவள் எப்படியாவது பரமானந்தருக்கு எடுத்துச் சொல்லி அந்தக் கொடுஞ் செயலைத் தடுக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டாள்.

அதே சமயம் வேலைக்காரன் கையில் தீப்பெட்டியுடன் வந்து சேர்ந்தான்.

அவனைப் பார்த்துப் பரமானந்தர், "இந்தப் பந்தத்தில் தீ வை!" என்று உத்தரவிட்டார். வேலைக்காரன் அவருடைய கட்டளையை நிறைவேற்றுவதற்காக அவரை நோக்கி முன்னேறினான்.

அதைக் கண்ட மாலதி அவனுக்கு முன்னால் முன்னேறிப் பரமானந்தரை நெருங்கினாள்.

"இவ்விஷயத்தில் நான் இப்படிக் குறுக்கிட நேருவதற்காக மன்னிக்க வேண்டும். தயவு செய்து இவனை மன்னித்து விடுங்கள். மனிதனைக் கொன்று அந்தப் பாவத்தைச் சுமப்பது சரியல்ல. என் சொல்லைக் கேளுங்கள்!" என்றாள். அவளுடைய அந்தச் சொல்லில் வருத்தமும் இலேசமும் தொனித்தன.

"மாலதி! என் விஷயத்தில் நீ இம்மாதிரி குறுக்கிடுவது எனக்குச் சிறிதும் பிடிக்காது. ஆமாம், சொல்லி விட்டேன். இந்தக் காட்சியைக் காண உனக்குச் சகிக்கவில்லையென்றால் உள்ளே போய் விடு!" என்று கூறிக்கொண்டு வந்த பரமானந்தரின் குரலில் இன்னும் சூடேறியது. "இங்கே இப்பொழுது ஒரு கொலை மட்டும் அல்ல; இரண்டு கொலைகள் நடக்கப் போகின்றன!" என்று சூடேறிய அதே குரலில் மூச்சோடு மூச்சாகச் சொல்லி நிறுத்தினார்.

எண்ணெயில் துணிகளை நனைத்துக்கொண்டிருந்த வேலைக்காரன் அந்தச் சொல்லைக் கேட்டதும் கதிகலங்கித் துணுக்குற்றான்.

சுதாகருக்கோ வியப்பு ஏகமாக மேலிட்டது. 'இதென்ன கூத்து! இன்னொரு விசித்திரமான வெடிகுண்டை யல்லவா இவர் தூக்கிப் போடுகிறார்!' என்று எண்ண மிடத் தொடங்கி விட்டான் அவன்.

பரமானந்தர் இலேசாக இளநகை புரிந்து விட்டு, "ஊம்! சீக்கிரம்! ரஹ்மத்துக்கு அடுத்தபடியாக உன் முறைதான்!" என்றார்.

வேலைக்காரனின் கையிலிருந்து எண்ணெய்ப் பாத்திரம் நழுவிக் கீழே விழுந்தது. அவன் முகம் சுக்காகச் சுண்டி விட்டது. உயிரே போய்விட்டது போன்ற உணர்ச்சியில் அவனுடைய நினைவு கூடத் தவறி விட்டது. அவனுக்கு என்ன செய்வது என்று ஒன்றுமே தோன்றவில்லை. அப்படியே பரமானந்தரின் காலடிகளில் விழுந்தான்.

"எஜமான்! மன்னிக்கணும். நான் செய்தது பெருங் குற்றந்தான். என் குற்றத்தை மறந்து நீங்கள் மன்னித்துத்தான் ஆகவேண்டும்!" என்று கெஞ்சாக் குறையாகக் கெஞ்சினான்.

"நீ உன் குற்றத்தை ஒப்புக் கொண்டாலும் ஒப்புக் கொள்ளாவிட்டாலும் எனக்கு அக்கறை யில்லை. ரஹ்மத்திடமிருந்து பணம் பெற்று எங்கள் ரகசியத்தை யெல்லாம் அவனிடம் சொல்லித் திரிகிறாய் என்பது எனக்குத் தெரியும். அதிர்ஷ்டவசமாக இன்று நாங்கள் மயிரிழை தப்பினோம். இல்லாவிட்டால் ஒன்று நானோ அல்லது சுதாகரோ தீர்ந்திருக்க வேண்டும். நன்றிகெட்ட நாயே! நாங்கள் இங்கே வரப்போகும் செய்தியை நீதானே ரஹ்மத்துக்குச் சொன்னாய்? உண்மையை ஒளிக்காமல் சொல்!" என்று கர்ஜித்தார் பரமானந்தர்.

இந்த விஷயங்களை யெல்லாம் பரமானந்தர் எப்படித் தெரிந்து கொண்டார் என்று எல்லோருக்குமே ஆச்சரியமாக இருந்தது.

பரமானந்தர் எண்ணெயில் தோய்ந்த பந்தத்தைக் கையில் எடுத்துக் கொண்டார். பிறகு தீக்குச்சியைப் பற்ற வைத்துப் பந்தத்தை ஏற்றிக் கொண்டார்.

குற்றம் எவ்வளவுதான் பெரிதாக இருந்த பொழுதிலும் இரண்டு மனிதர்களை இம் மாதிரிக் காட்டுமிராண்டித்தனமான முறையில் கட்டிக் கொளுத்திக் கொலை செய்வது என்றால் அது பயங்கரத்திலும் பயங்கரமானதாகத்தானே தோன்றுகிறது!

வெளியே அமைதியே உருவான நள்ளிரவு குழுமி யிருந்தது. அமைதி யென்றால் சாதாரண அமைதியா? மயான அமைதி அல்லவா நிலவி யிருந்தது! ஆனால் அமைதியே உருவான ஜீவனற்ற அந்த நள்ளிரவிலும், உலகத்தின் சூன்யமே உருவான ஒரு மூலையில், காலனின் கொடுங் கொலைவாள் சுவு. இரக்கம், தயை, தாட்சிண்யம் சிறிதும் இன்றித் தன் கோர கிருத்தியத்தைச் செய்வதில் மூண்டிருந்தது! அதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று யாருக்காவது தோன்றினால் தானே? அப்படியே தோன்றினாலும், ஒரு மூலையில் நடந்து கொண்டிருக்கும் அந்த நிகழ்ச்சியை ஒருவன் எப்படித் தெரிந்து கொள்ள முடியும்? அப்பப்பா! இரவின் இருளுக்குத்தான் என்ன சக்தி! மாபெரும் மயிர்க் குத்தலிடும் குற்றங்களைக்கூட விழுங்கி ஜீரணித்து விடுகிறதே!

பந்தம் பற்றிக் கொண்டு பிரகாசத்தைக் கக்கத் தொடங்கியதும் மாலதி அருகில் நின்று கொண்டிருந்த சுதாகரின் முகத்தைப் பார்த்தாள். இருவருடைய நிலைமையும் ஒன்று போலவே இருந்தது. சுதாகர் திகைத்துத் திக்பிரமை பிடித்தவன்போல் நின்று கொண்டிருந்தான். மாலதி அவனைப் பார்த்து மிகவும் மெதுவான குரலில், "நீங்கள் சொல்லிப் பாருங்கள். உங்கள் சொல்லை ஒரு வேளை கேட்டாலும் கேட்கலாம்!" என்றாள்.

திடீரென்று விழித்தெழுந்து நினைவு வந்தவன் போலச் சுதாகர் பரமானந்தரை அணுகினான். அணுகினதும் முதல் காரியமாக அவருடைய கையை இறுகப் பிடித்துக் கொண்டு மிகவும் வணக்கம் நிறைந்த, ஆனால் கம்பீரம் வாய்ந்த குரலில், "எனக்காக இவ் விருவரையும் மன்னித்து விடுங்கள். என்னால் இந்தக் கோரக் காட்சியைக் காண முடியாது. நினைத்துப் பார்க்கக் கூட என் நெஞ்சு கூசுகிறது. தயவு செய்து......!" என்றான்.

"உன் நெஞ்சு கூசலாம். ஆனால் என்னைக் கொல்வதற்கு இது ரஹ்மத்தின் ஐந்தாவது முயற்சி என்பது உனக்குத் தெரியுமா? தெரிந்திருந்தால் நீ இப்படிப் பேசவே மாட்டாய்!" என்றார் பரமானந்தர். அப்பொழுது அவருடைய முகத்தில் மென்மை படர்ந்தது. முகத்தில் படர்ந்த அந்த மென்மை குரலிலும் இலேசாகத் தொனித்தது. அதைக் கண்ணுற்ற சுதாகர் அதைத் தனக்குச் சாதகமாகப் பயன் படுத்திக் கொள்ள விரும்பினான்.

"அது எப்படி யிருந்தாலும், ஐந்தாவது தடவையாக இருந்தாலும் சரி, ஆயிரத்தைந் நூறாவது தடவையாக இருந்தாலும் சரி, எனக்காக நீங்கள் இவர்களை இந்தத் தடவை மன்னித்துத்தான் ஆக வேண்டும். உங்களை மிகவும் மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். இவர்களைத் தாங்கள் மன்னித்தருளினால் எனக்கே உயிர்ப்பிச்சை கொடுத்ததாகக் கருதுவேன்!" என்றான் சுதாகர். அவனுடைய குரலில் அழுத்தமும் பிடிவாதமும் தொனித்தன.

"நீங்கள் எல்லோரும் எப்பொழுதுதான் வீரம் வாய்ந்தவர்களாக ஆகப் போகிறீர்களோ, தெரியவில்லை! உங்களுக்குச் சாகவும் வரவில்லை. சாக அடிக்கவும் வரவில்லை. என்ன செய்வது? ஆறுவது தடவையும் என்னைக் கொல்லச் சந்தர்ப்பம் அளிக்க வேண்டும் என்று நீ விரும்புகிறாய். அப்படித்தானே? சரி, உன் இஷ்டப்படியே ஆகட்டும்!"

இதைச் சொன்னதும் பரமானந்தர் எரியும் தீப்பந்தத்தை வேகமாகக் காற்றில் வீசினார். அது குப்பென்று அணைந்தது. உடனே அதைக் கீழே போட்டுக் காலால் தேய்த்தார். அதன் புகையும் மங்கி மறைந்தது. பிறகு வேலைக்காரனைப் பார்த்து, "உன் தோழனை அவிழ்த்து விடு. அவனுடன் நீயும் பிழைத்துப் போ!" என்றார்.

பிறகு சுதாகரின் தோளைத் தட்டிக் கொடுத்துச் சிரித்தவாறே பரமானந்தர் மறுபடியும் தம் ஆசனத்தில் வந்து அமர்ந்தார். மாலதியும் தூரத்திலிருந்த ஒரு முக்காலியில் உட்கார்ந்து கொண்டாள். வேலைக்காரன் ரஹ்மத்தின் கட்டை அவிழ்த்துவிட்டான். வீரநெஞ்சம் வாய்ந்த ரஹ்மத் வாய்திறந்து



ஒன்றும் பேசாமல் ஒரு நாற்காலியில் போய் உட்கார்ந்து கொண்டான்.

"ரஹ்மத்! நீ நல்ல வீரன்தான்!"—பரமானந்தர் ரஹ்மத்தை வாயாரப் புகழ ஆரம்பித்து விட்டார்—"நீ மன்னிப்புக் கேட்டால் உன்னை விட்டு விடலாம் என்றுதான் நான் எண்ணினேன். ஆனால் நீயோ சாவின் வாயில் சிக்கிச் சங்கடப்பட்ட பொழுதிலும் கூட அசைந்து கொடுக்கவில்லை; வாய் திறந்து மன்னிப்புக் கோரவில்லை. சபாஷ்! உன் உறுதியை மெச்சினேன்! உன்னைப் போன்ற நெஞ்சுரம் வாய்ந்தவன்தான் இந்த உலகத்துக்கு வேண்டும்!" என்றார்.

ரஹ்மத்தின் முகம் மலர்ந்தது.

"...... ஆனால் சுதாகர் மட்டும் இடையே குறுக்கிடாமல் இருந்திருந்தால் உன்னை நான் கொளுத்தி விட்டுத்தான் மறு காரியம் பார்த்திருப்பேன். நான் சொல்வது வெறும் வாய்ப் பேச்சு அல்ல; நூற்றுக்கு நூறு உண்மையான வார்த்தை. நினைவு வைத்துக்கொள்!" என்று கூறி வந்த பரமானந்தரின் குரல் சற்று நெகிழ்ந்து கொடுத்தது. "சரி! அது போகட்டும். இப்பொழுது என்ன செய்வதாக உத்தேசம்? இங்கேயே இருக்கிறாயா, அல்லது போக வேண்டுமா?" என்று கேட்டார் பரமானந்தர்.

"நான் போகத்தான் வேண்டும்!" என்று பதில் அளித்தான் ரஹ்மத்.

"நானும் கொஞ்சம் வெளியே போக வேண்டும். சற்று இரு; இதோ நானும் உன்னுடனேயே வந்து விடுகிறேன்!" என்றார் பரமானந்தர்.

ரஹ்மத் உள்பட எல்லோரும் அதைக் கேட்டதும் ஆச்சரியத்தில் ஆழ்ந்துவிட்டனர். சிறிது நேரத்துக்கு முன் பரமானந்தர் எந்த மனிதனைக் கொளுத்திக் கொன்றுபோட விரும்பினாரோ, அதே மனிதனுடன் நெருங்கிய நண்பனைப் போல வெளியே புறப்படத் தயாராகி விட்டார். அதைக் காணும்போது யாருக்கும் ஆச்சரியம் ஏற்படுவது இயல்பே அல்லவா?

சுதாகருக்கு உள்ளூறப் பயம், பரமானந்தருக்கு ஏதாவது விபரீதம் நேர்ந்து விட்டால் என்ன செய்வது என்று! எனவே, "நானும் உங்களுடன் வருகிறேனே!" என்றான்.

பரமானந்தருக்கு அவனுடைய அதைரியம் புரிந்துவிட்டது. "வேண்டாம், வேண்டாம். நீ இங்கேயே இளைப்பாறு. உனக்குக் காயம் பட்டிருக்கிறது. அதிகம் சுற்றினால் உடம்புக்கு ஆகாது" என்றார். பிறகு மாலதியைப் பார்த்து, "மாலதி! சுதாகருக்கு உணவு அளித்துவிட்டு என் அறையில் படுக்கை போட்டுத் தூங்கச் சொல்லு" என்றார்.

"ஆமாம், இப்பொழுது போகாவிட்டால் என்ன? இருட்டி இவ்வளவு நேரம் ஆகி விட்டதே! இப்படி உடம்பைக் கவனித்துக் கொள்ளாமல்......" என்று ஆரம்பித்தாள் மாலதி அவருடைய சொல்லைச் சிறிதும் காதில் வாங்கிக் கொள்ளாமல்.

அப்பொழுது அவளுடைய முகத்தில் ரகசியம் தோய்ந்த சில பாவங்கள் பளிச்சென்று இழையிட்டன. அவள் நடுத்தர வயதுள்ள பெண்மணிதான். ஆயினும் அவளுடைய முகத்தில் இழையிட்டு ஓடிய பாவங்கள், அவளுடைய அழகை மெருகிட்டு எடுத்துக் காட்டின. ரஹ்மத், சுதாகர் இருவரும் மாலதியையே கவனித்துக் கொண்டிருந்தனர். ஆனால் பரயானந்தரோ மாலதியின் பக்கம் திரும்பியே பார்க்கவில்லை. மேலும் கீழும் பார்த்துக் கொண்டே பேசினார். அவர் அப்படி நடந்து கொண்டதற்குக் காரணம் என்னவாயிருக்கும் என்பதை யாராலும் ஊகித்துப் புரிந்து கொள்ள முடியவில்லை.

"பரவாயில்லை, கவலைப்படாதே! என் உடம்புக்கோ உயிருக்கோ ஒன்றும் அபாயம் வந்து விடாது. யாரும் என்னை எதுவும்





"என் தாத்தா எனக்குச் சொத்து எழுதி வைத்திருக்கிறார் என்று தானே என்னைக் கல்யாணம் செய்து கொண்டீர்கள்?"

"சேச்சே! அப்படி ஒன்றுமில்லை. உன் தாத்தா இல்லாமல் வேறு யார் சொத்து எழுதி வைத்திருந்தாலும் உன்னைத்தான் கல்யாணம் செய்து கொண்டிருப்பேன்!"

செய்து விடவும் முடியாது" என்றார். பிறகு ரஹ்மத்தைப் பார்த்து, "புறப்படு, ரஹ்மத்! போவோம்!" என்றார்.

அதைச் சொல்லிய அடுத்த விநாடியே அவர் எழுந்தும் விட்டார். பிறகு பக்கத்தில் நின்று கொண்டிருந்த வேலைக்காரனைப் பார்த்து, "இனி எப்பொழுதாவது உன்மேல் ஏதாவது கொஞ்சம் சந்தேகம் ஏற்பட்டால் கூட உன் தோலை ஒட்ட உரித்து விடுவேன், தெரிந்ததா? ஜாக்கிரதை!" என்று எச்சரித்தார். தரையையே பார்த்த வண்ணம் வேலைக்காரன் பதில் பேசாமல் நின்று கொண்டிருந்தான். சிறிது நேரத்துக்கெல்லாம் பரமானந்தரும் ரஹ்மத்தும் வாசற் கதவைத் திறந்துகொண்டு வெளியேறினார்கள்.

மாலதி மூந்தானையினால் நீர் ததும்பிய தன் கண்களைத் துடைத்துக் கொண்டு, வெளியே போய்க் கொண்டிருக்கும் பரமானந்தரைப் பார்த்தாள். அவள் மனத்தை என்னவோ செய்தது. தலையைப் பெரிய பாரம் அழுத்துவது போலத் தோன்றவே, இரு கைகளாலும் தலையை இறுகப் பிடித்துக்கொண்டாள். அவளையும் மீறி ஒரு நீண்ட பெருமூச்சு உள்ளத்தின் ஆழத்திலிருந்து பொருமிக் கொண்டு வெளியே வந்தது.

அதைக் கண்ட சுதாகருக்கு ஏற்பட்ட வியப்பைச் சொல்லி முடியாது.

'மாலதிக்கும் பரமானந்தருக்கும் எத்தகைய தொடர்பு இருக்கலாம்?' என்ற சிந்தனையில் ஈடுபட்டு விட்டான் அவன். எத்தனையோ மூளையைப் போட்டுக் குழப்பி மண்டையை உடைத்துக் கொண்ட பின்னருங்கூட அவனால் அவர்கள் இருவருக்கும் இடையே எத்தகைய தொடர்பு இருக்கும் என்பதைப் புரிந்து கொள்ள முடிய வில்லை. பரமானந்தரிடம் மாலதி நடந்து கொண்ட விதமும் அவனுக்குப் புரியாப் புதிராகவே தோன்றியது. எவ்வளவோ மூளையைச் செ விட்டும், அவனுக்கு ஒன்றும் விளா காமற் போகவே, அவன் 'உலக விசித்திரமானது. உலகத்தில் உள் விசித்திரங்களுக்கு ஓர் கங்கு கரை கிடையாது' என்ற முடிவுக்கு வ தான். அதைத் தொடர்ந்தா போலவே அந்த விசித்திரங்களின் வரிசையில் மாலதி, ரஹ்மத், பரம னந்தர் ஆகியவர்களும் முக்கியமா இடம் பெற வேண்டியவர்கள் என் முடிவுக்கும் அவன் வந்தே திரும்ப யாகிவிட்டது.

"வாருங்கள்! போய் இளைப்பா லாம்!" என்று கூறிச் சுதாகரை அந்த வீட்டுக்குள் அழைத்துச் செ ருள் மாலதி. அந்த வீடு மிகப் பெரி தாகவும் விசாலமானதாகவும் இரு ந்தது. அந்த வீட்டில் அநேகம் கட் களும் மாடிகளும் வேறு இருந்தன உள்ளே ஒரு பெரிய தோட்டமும் இருந்தது தோட்டத்தைச் சுற்றி நாற்புறமும் சுவ எழுப்பப்பட்டிருந்தது. சுவரை ஒட்டினா போலப் பல சிறிய அறைகள் கட்டப்பட்டிரு தன. அம்மாதிரியுள்ள அறைகளின் மூ புறத்து அறை யொன்றில்தான் மேற் கூறி சம்பவம் சிறிது நேரத்துக்குமுன்பு நிகழ்ந்தது

கட்டிடத்தைப் பார்த்துக் கொண்டே மாலதியைத் தொடர்ந்து சென்று கொண் டிருந்த சுதாகர், "மிகப் பெரிய கட்டிடம யிருக்கிறதே! இந்தப் பம்பாய் நகரத்தி இவ்வளவு பெரிய கட்டிடம் கிடைப்பு அரிதல்லவா?" என்று கேட்டான்.

"இவ்வளவு பெரிதாயிருந்தும் இது எங் களுக்குப் போதவில்லை. இன்னும் பக்கத்து கட்டிடங்கள் சிலவற்றை வாங்க வேண்டி அவசியம் ஏற்படும் போலிருக்கிறது!" எ ருள் மாலதி மாடிப் படிகளில் ஏறியவாறே

இவ்வளவு பெரிய வீடு போதவில்லையாமே என்ன ஆச்சரியம்! இந்த வீட்டில் ஜன நட மாட்டம்கூட அதிகம் இருப்பதாகத் தெரி வில்லையே! அப்படியிருக்கும்பொழுது ப கத்துக் கட்டிடங்களை வாங்க வேண்டி அவசியம் நேருவானேன்?-சுதாகரின் சிந்தனை இவ்வாறு ஓடத் தொடங்கியது.

சிறிது நேரத்துக்கெல்லாம் இருவரு படிகள் தாண்டி ஒரு பெரிய கட்டில் பி வேசித்தார்கள்.

அந்தக் கட்டில் அநேக யந்திரங்கள் வை கப் பட்டிருந்தன. ராட்டினங்கள், தைய மிஷின்கள், புத்தகங்கள் தைக்கும் மிஷி கள்-இவை போன்ற எத்தனையோ விதமா யந்திரங்கள் அந்த அறையில் வைக்கப் ப டிருந்தன. அரைகுறையாக நிறுத்தப் ப

டிருந்த காலுறைகள், கைக் குட்டைகள் - திரைகள், புத்தகங்கள் ஆகியவை அங்கே குவிந்து கிடப்பதைக் கண்டான் சுதாகர். அது ஒரு தொழிற்சாலையாக இருக்க வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது. மாலதியிடம் கேட்டுச் சந்தேகம் தீரவேண்டும் என்று எண்ணுவதற்குள்ளாகவே, அவர்கள் அடுத்த கட்டுக்கு வந்து விட்டார்கள்.

அங்கே அநேக சித்திரங்கள் அழகாக அலங்கரித்து வைக்கப்பட்டிருந்தன. அவற்றில் எத்தனையோ கைத்திறனும் கலைத்திறனும் ஒருங்கே அமையப் பெற்றவையாகப் பூரணப் பொலிவுடன் திகழ்ந்தன. எத்தனையோ உண்மைக்கும் போலிக்கும் வேற்றுமை தெரியாத உயிர்ச் சித்திரங்களாகக் காணப்பட்டன. சில பூர்த்தியுறாத அரைகுறைச் சித்திரங்களாகவும் சில பென்சிலினால் கோடிட்டு வரையப் பெற்ற பென்சில் சித்திரங்களாகவும் காட்சி அளித்தன. சுதாகர் ஆச்சரியமும் ஆவலும் ததும்ப அவற்றைப் பார்த்துக் கொண்டே நடந்தான். 'ஒரு வேளை இது சித்திரக் கலாசாலையாக இருக்குமோ ?' என்ற கேள்வி அவன் மனத்திலெழுந்தது.

அந்த அறையைத் தாண்டியதும் சில சின்னஞ் சிறிய அறைகள் இருந்தன. மாலதி அவற்றுள் ஒன்றில் சுதாகரை அழைத்துச் சென்றாள். உள்ளே போய்ப் பார்த்தால் அந்த அறையும் பெரிதாகத்தான் இருந்தது. ஆனால் அதில் வைத்திருந்த சாமான்கள் அதைச் சிறியதாகத் தோன்றுமாறு செய்திருந்தன. விதம் விதமான ஆயுதங்கள், சித்திரங்கள், உடைகள், இன்னும் என்னென்னவோ விசித்திரமான பொருள்கள் எல்லாம் அந்த அறையில் வைக்கப் பட்டிருந்தன. இது ஏதாவது பொருட் காட்சி சாலையாகத்தான் இருக்க வேண்டும் என்று எண்ணமிட்டான் சுதாகர். அந்த அறையின் ஒரு புறத்தில் சில புஸ்தகங்கள் கிடந்தன. பல மான் தோல்கள் விரிக்கப் பட்டிருந்தன. ஒரு புறம் அழகிய சிறு கட்டிலும் போடப் பட்டிருந்தது.

மாலதி அந்தக் கட்டிலைக் காட்டிச் சுதாகரை உட்காருமாறு சொன்னாள். அவன் உட்கார்ந்த சிறிது நேரத்துக்கெல்லாம், சொல்லி வைத்தாற்போல, ஒரு பெண் தட்டில் உணவு கொண்டு வந்து வைத்தாள். உணவருந்தி முடிந்ததும் கட்டிலில் வந்து உட்கார்ந்த சுதாகரைப் பார்த்து, "இந்தக் கட்டிலிலேயே படுத்துத் தூங்கலாம்!" என்றாள் மாலதி. சுதாகருக்கோ அந்தச் சூழ்நிலை புதிது ; பழக்க மில்லாதது. எனவே, அவன் பேந்தப் பேந்த விழித்தான். ஆனால் இரவு முழுவதும் தூங்காமல் எப்படியிருக்க முடியும்? அடிபட்ட இடத்திலே 'விண் விண்' என்று வலி தெறித்துக் கொண்டிருந்தது. ஆனாலும் அது பொறுக்கக் கூடியதாகத்தான் இருந்தது. தூங்காமல் இருந்தால் வலி பொறுக்க முடியாமல் அதிகரித்து விட்டால் என்ன செய்வது என்று அவனுக்குப் பயமாக இருந்தது. எனவே, மாலதி சொன்னபடி



"தினமும் காலையில் இரண்டு ஆழாக்கு ஆட்டுப் பால் சாப்பிட்டு வாருங்கள். உடம்பு சரியாகி விடும்."
"எட்டு வருஷமாக ஆட்டுப்பால் சாப்பிடுகிறேன்"
"அப்படியானால் சாப்பிடுவதை நிறுத்தி விடும். சரியாகிவிடும் !"

அங்கே படுத்துத் தூங்குவதுதான் சரியென்று அவனுக்குப் பட்டது.

அவன் பேந்தப் பேந்த விழித்தவாறு யோசித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பதைக் கண்ட மாலதி, "இது உங்களுக்குப் புதிய இடம் ஆகையால் வெறிச் சென்று இருக்கலாம். நான் பக்கத்து அறையில்தான் இருக்கிறேன். ஏதாவது தேவைப் பட்டால் என்னைக் கூப்பிடுங்கள் !" என்றாள்.

"பரவாயில்லை. நீங்கள் போய் வாருங்கள். என்னைப் பற்றி எவ்விதமான கவலையும் வேண்டாம். இந்த இடம் எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது !" என்றான் சுதாகர். மாலதி விடை பெற்றுக் கொண்டு போன சிறிது நேரத்துக்கெல்லாம் கட்டிலில் படுத்த சுதாகர் நன்றாகத் தூங்கியும் போய்விட்டான்.

அவன் எத்தனை நேரம் ஆழ்ந்த நித்திரையில் மூழ்கி யிருந்தானோ, அவனுக்கே தெரியாது. ஆனால் மனோரமாவைப் பற்றிய கனவு கண்டதுமே அவன் திடுக்குற்று விழித்துக் கொண்டு விட்டான். அப்பப்பா! அவன் கண்ட கனவுதான் எத்தனை பயங்கரமானது ! ரஹ்மத் மனோரமாவை அபகரித்துக் கொண்டு போவது போலவும், அவன் கையிலிருந்து மனோரமாவை மீட்க முடியாமல், தான் கையைப் பிசைந்து கொண்டு நிற்பது போலவும் அவன் கனவு கண்டான். அவனுடைய அந்தக் கையாலாகாத தனத்தைக்

கண்டு பரமானந்தர் 'கட கட' வென்று தமக்கே இயல்பான முறையில் சிரித்துக் கொண்டிருப்பதாகக் கனவு கண்டதும் அவன் கண்கள் திடுக்கிட்டுத் தாமாகத் திறந்து கொண்டன. அவன் கனவு நனவாகி யிருந்தது! அதாவது, பரமானந்தர் மான் தோல் ஒன்றில் அமர்ந்து கடல்மடை திறந்தாற் போல் சிரித்துக் கொண்டிருந்தார்.

அதைக் கண்ட சுதாகருக்கு ஒரே வியப்பாகப் போய் விட்டது. அவன் கண் விழித்த பொழுது கிழக்கு வெளுத்துப் பொழுது நன்றாகப் புலர்ந்திருந்தது. "சுதாகர் நன்றாகத் தூங்கிக் கொண்டிருக்கிறார். இந்தச் சமயம் இப்படிக் 'கல கல' வென்று சிரித்து அவரை அரைத் தூக்கத்தில் எழுப்புவது சரியல்ல!" என்று மாலதி ஜாடையாகப் பரமானந்தரிடம் சொல்லிக் கொண்டிருந்தாள். ஆயினும் பரமானந்தர் அவள் சொல்லைச் சிறிதும் காதில் வாங்கிக் கொள்ளாமல் சிரித்துக் கொண்டிருந்தார்.

சுதாகர் சிரிப்பொலி கேட்டு நன்றாகக் கண் விழித்துக் கொண்டு விட்டான்.

"சுதாகர் விழித்துக் கொண்டு விடுவார் என்று நான் அப்பொழுதே சொன்னேன் அல்லவா?" என்றாள் மாலதி.

"அதனால் என்ன? ஒன்றும் பரவாயில்லை. இளம் பிள்ளைகள் தங்கள் உடலைத் தங்கள் வசத்தில் வைத்துக் கொள்ள வேண்டாமா? வைகறையில் துயில் எழுவதுதான் உடலுக்கு நல்லது!" என்றார் பரமானந்தர்.

சுதாகர் எழுந்து பரமானந்தருக்கும் மாலதிக்கும் வணக்கம் தெரிவித்தான். பரமானந்தர் கட்டாயம் இந்த நாகரிகச் செயலைக் கண்டு சிரித்திருப்பார். பரமானந்தருக்கு இந்த மேல் பூச்சு நாகரிகம் சிறிதும் பிடிக்காது. இதைக் கண்டிக்கும் முறையில் ஏதாவது கிண்டல் செய்வார் என்றே மாலதியும் எண்ணினாள். ஆனால் ஏனோ தெரியவில்லை, பரமானந்தர் நல்ல வேளையாகக் கிண்டலோ பரிகாசமோ செய்யவில்லை. அவருடைய முகத்தில் இனந் தெரியாத வேதனை கோடிட்டது. ஆயினும் முகத்தில் மகிழ்ச்சிக் குறியையும் சிரிப்பையும் வரவழைத்துக் கொண்டு, "சுதாகர்! காயம் ஆறும் வரையில் நீ இங்கேயே தான் இருக்க வேண்டும். என்ன, தெரிந்ததா?" என்றார் அவர்.

"என் நண்பன் என்னை எதிர்பார்த்துக் கொண்டிருப்பான். நான் இங்கே வந்த செய்தியை அவன் ஊருக்கு எழுதி அனுப்பி விட்டால் அது அனர்த்தமாக முடிந்தாலும் முடியலாம்!" என்றான் சுதாகர்.

"அதற்கு வேண்டிய ஏற்பாட்டை நான் செய்து விடுகிறேன். அவனுடைய விலாசத்தை மட்டும் எனக்குக் கொடு, போதும்!" என்றார் பரமானந்தர்.

அதற்கு மேல் பேச ஏதாவது இருந்தால் தானே? அவன் எழுந்து கைகால்களைக் கழுவிக் கொண்டு உலாவலானான். சுவரில் மாட்டப்பட்டிருந்த படங்களையும் மற்றப் பொருள்களையும் பார்த்துக் கொண்டே வந்து கொண்டிருந்தான். அப்பொழுது ஒரு அழகிய யுவதி கையில் பால் கோப்பையுடன் உள்ளே நுழைந்தாள். அந்த யுவதி உண்மையிலேயே வெகு அழகா யிருந்தாள். முதல் நாள் இரவு சுதாகர் அவளைப் பார்க்கவில்லை.

திடீரென்று சுதாகரின் காதுகளில் தோட்டத்தில் யாரோ 'தில்ருபா' வாத்தியத்தை வைத்துக் கொண்டு பாடிக் கொண்டிருப்பது விழுந்தது. பாட்டு இனிமையாக இருக்கவே, சுதாகர் காது கொடுத்துக் கேட்கலானான். அவனுக்கு அது ஒரு பெண்ணின் குரல் என்பது தெரிந்தது. அந்தக் குரலை முன்பு எங்கேயோ கேட்டிருப்பது போன்ற உணர்ச்சி அவன் உள்ளத்தில் எழுந்தது. அடுத்த கணமே அவனுக்கு மனோரமாவின் நினைவு வந்தது. 'ஒருவேளை மனோரமாவாகவே இருப்பாளோ?' என்று எண்ணினான்.

'மனோரமாவைத் தவிர இவ்வளவு இனிமையான சாரீரம் வேறு யாருக்கு இருக்க முடியும்?' என்று அவன் எண்ணமிடலானான்.

சுதாகருக்கு மனோரமாவைப் போல், இன்னும் எத்தனையோ வாலிபர்களுக்கு எத்தனையோ மனோரமாக்கள்! அவர் அவர்களுக்கு அவரவர்களுடைய மனோரமாக்களின் சரீரம் எடுப்பாகவும் இனிமையாகவும் தோன்றுவது இயல்புதானே?

குரல் காதில் விழ விழ அவனுக்கு மனோரமாவே பாடுவதாக நம்பிக்கை விழலாயிற்று. ராமலாலுக்கும் பரமானந்தருக்கும் உள்ள நெருங்கிய தொடர்பு அவனுக்குத் தெரியாததல்ல. எனவே, மனோரமா இங்கே வந்திருந்தாளானால் ஆச்சரியப் படுவதற்கில்லை என்ற முடிவுக்கு வந்தான்.

"சுதாகர்! நீ பால் குடிக்கிறாயா அல்லது தேநீர் வரவழைக்கட்டுமா?" என்று கேட்டார் பரமானந்தர்.

"எதுவா யிருந்தாலும் பரவாயில்லை!" என்று பதில் அளித்தான் சுதாகர்.

"போய்த் தேநீரே கொண்டு வா!" என்று அந்த யுவதிக்கு உத்தரவிட்டாள் மாலதி.

சுதாகர் இலேசாகச் சிரித்தான்.

"இன்னும் என்னைப்போல் எத்தனையோ நாட்டுக் கட்டைகள் இருக்கின்றனர். அவர்களுக்குப் பால்தான் பிடிக்கும். தேநீர் பிடிக்காது!" என்றார் பரமானந்தர்.

சுதாகருக்கு அவர் சொன்னது காதில் விழவில்லை. பாட்டின் ஒலிதான் அவன் காதுகளில் புகுந்து இன்பத் தேனைச் சொரிந்து கொண்டிருந்தது. ஆகா! அந்தக் குரலில்தான் என்ன இனிமை! பரமானந்தரும் சிற்சில சமயம் தம்மையும் அறியாமல் பாட்டுக் கேற்ற தாளம் போடத் தொடங்கி விட்டார். சுதாகரினால் மனத்தை எவ்வளவோ அடக்கியும் பேசாமல் இருக்க முடியவில்லை.

"ராமலால் இங்கே இருக்கிறாரா, என்ன?" என்று பரமானந்தரைப் பார்த்து அவன் கேட்டே விட்டான். (தொடரும்)


அதிக
வெண்மையான
பற்கள் சுத்தமான
வாய்
COLGATE
COLGATE
RIBBON DENTAL CREAM
DCC/21
கோல்கேட் ரங்கராங்கை ரேடியோசிவானில் 41 மீட்டர் பாண்டில்
பிரதிவெள்ளிக்கிழமையும் இரவு 8 மணிக்கு கேளுங்கள்!

## ரூபாய் 12 போனஸ்!



### இன்ஷ்யூர் செய்துகொண்டோருக்கு நல்ல லாபம்

பம்பாய் மியூச்சுவல் தனது பாலிஸிதாரர்களுக்கு புது தொடரில் வரும் முழு ஆயுள் பாலிஸிகளுக்கு 1951 டிசம்பர் 31உ. புடன் முடிந்த மூன்று ஆண்டு காலத்திற்கு பிரதி ஆயிரத்துக்கு ஆண்டு ஒன்றுக்கு ரூ. 12 வீதம் போனஸ் வழங்குவதை மகிழ்ச்சியுடன் அறிவிக்கிறார்கள். இதர போனஸ்கள் பின்வருமாறு:—

எண்டோமெண்ட் (புதிய தொடர்) ... ரூ. 10 ஒரு வருஷத்துக்கு பிரதி ஆயிரத்துக்கு
முழு ஆயுள் (பழைய தொடர்) ... ரூ. 7 ஒரு வருஷத்துக்கு பிரதி ஆயிரத்துக்கு
எண்டோமெண்ட் (பழைய தொடர்) ... ரூ. 5 ஒரு வருஷத்துக்கு பிரதி ஆயிரத்துக்கு

பம்பாய் மியூச்சுவலில் இன்ஷ்யூர் செய்து கொண்டால்—ஒவ்வொரு பாலிஸிதாரரும் ஒரு பங்குதாரராக இருக்கும் ஸ்தாபனத்தில்—பல வழிகளிலும் முதலீடு செய்ததாகும்!



## பம்பாய் மியூச்சுவல்
### லைப் அஷ்யூரன்ஸ் சொஸைடி லிட்.

பம்பாய் மியூச்சுவல் பில்டிங்
ஹார்ன்பி ரோடு, பம்பாய்-1

இந்தியாவின் மிகப் பழமையான ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் ஸ்தாபனம்—1871ம் வருஷம் ஸ்தாபிக்கப்பட்டது.
தாராளமான கமிஷனில் ஏஜண்டுகள் தேவை.

பிரதம ஏஜண்டுகள்:
மெஸர்ஸ். எஸ். ஏ. ராமஸ்வாமி & பிரதர்ஸ்
பம்பாய் மியூச்சுவல் பில்டிங் அனக்ஸ், 322-23, லிங்க செட்டித் தெரு, சென்னை-1

# போலந்தின் புகழ்பெற்ற தலைவர்

ஜெயமணி

போலந்தில் ஏற்பட்ட நெருக்கடியைக் கண்டு மனம் சகியாமல் அந் நாட்டின் இணையற்ற தலைவரான ஜோசப் பில்சுட்ஸ்கி மறுபடியும் அரசியலில் பிரவேசித்தார்.

1922-ம் வருஷத்திலிருந்து அரசியல் துறவு பூண்டிருந்த பில்சுட்ஸ்கி 1926-ல் ஏற்பட்ட மேற்படி நெருக்கடியைக் கண்டு மனம் பதறினர். தாமதியாமல் தமது நாட்டை உத்தாரணம் செய்ய உறுதி கொண்டார். அப்போது அதிகாரத்தில் இருந்த திறமையற்ற சர்க்காரை வீழ்த்தி விட்டுப் புதிய சர்க்காரை நிறுவத் தீர்மானித்தார்.

அப்போது அதிகாரத்திலிருந்த சர்க்காரை எளிதில் வீழ்த்த முடியாது என்பதை உணர்ந்த பில்சுட்ஸ்கி பலாத்கார முறைகளைக் கைக் கொள்ளத் தயங்கவில்லை.

* * *

பில்சுட்ஸ்கி, முதலாவது உலக மகா யுத்தத்துக்கு முந்தியும் அதற்குப் பிறகும் போலந்தின் விடுதலைக்காகவும் போலந்து மக்களின் ஐக்கியத்துக்காகவும் முன்னணியில் நின்று உழைத்த வீரர். 1926 லிருந்து 1935-ம் ஆண்டு தாம் காலமாகும் வரையில் பில்சுட்ஸ்கி போலந்தின் சர்வாதிகாரியாகத் திகழ்ந்து அந்த நாடு பல துறைகளிலும் அபிவிருத்தி அடையச் செய்தார்.

பில்சுட்ஸ்கி, லிதுவானியாவின் பழைய தலைநகரான வில்னவுக்கு அருகில் பிறந்தவர். அவர் கலாசாலையில் வாசித்துக்கொண்டிருந்த போதே புரட்சி இயக்கத்தில் தீவிரமாக ஈடுபட முற்பட்டார்.

1887-ல் ருஷ்ய சக்கரவர்த்தி மூன்றும் அலெக்சாண்டரைக் கொல்லச் சதி செய்ததாக, பில்சுட்ஸ்கியும் அவரது சகோதரரும் கைது செய்யப்பட்டனர். அப்போது நடந்த வழக்கில் அவர்கள் ஐந்து வருஷ காலம் சைபீரியாவுக்கு நாடு கடத்தப் பட்டார்கள்.

மேற்படி தண்டனைக் காலம் முடிந்து 1892-ல் பில்சுட்ஸ்கி திரும்பி வந்ததும், அப்போது அந்த நாட்டில் புதிதாக உருவாகியிருந்த போலந்து சோஷலிஸ்டுக் கட்சியில் சேர்ந்தார். மேற்படி கட்சியின் பத்திரிகைக்கும் அவர் ஆசிரியராக இருந்து தொண்டு புரிந்து வந்தார்.

பில்சுட்ஸ்கியின் நடவடிக்கைகளைக் கண்டு சந்தேகம் கொண்ட அதிகாரிகள் அவரை மறுபடியும் கைது செய்தார்கள். மீண்டும் சைபீரியா நரக வேதனையை அநுபவிக்க அவர் விரும்பவில்லை. எனவே, அவர் நாம் சித்த சுவாதீனத்தை இழந்தவர் போல் பாசாங்கு செய்யத் தொடங்கினர்.

பில்சுட்ஸ்கியின் மனோ நிலையைப் பரிசோதிப்பதற்காக அதிகாரிகள் அவரைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு அனுப்பினர்கள். பில்சுட்ஸ்கி எதிர் பார்த்ததும் அது தான்! அங்கிருந்து அவர் தப்பி ஓடிவிட்டார்.

ருஷ்யாவின் ஆதிக்கத்திலிருந்து போலந்து விடுதலை பெற வேண்டுமாயின், இராணுவத்தின் உதவி அத்தியாவசியம் என்பதைப் போலந்துத் தலைவர் பில்சுட்ஸ்கி உணர அதிக காலம் ஆகவில்லை.

தமது நோக்கம் நிறைவேறுவதற்கு, 1904-ல் மூண்ட ருஷ்ய—ஜப்பான் யுத்தம் தகுந்த சந்தர்ப்பம் அளிக்கலாம் என்று அவருக்குத் தோன்றியது.

எனவே, அவர் சிறிதும் தாமதிக்காமல் டோக்கியோவுக்குப் புறப்பட்டுச் சென்றார். ருஷ்யாவுக்கு எதிராகப் போர் புரிவதற்கு போர்த் தளவாடங்கள் கொடுத்து உதவும்படி பில்சுட்ஸ்கி ஜப்பான் சர்க்காரைக் கேட்டுக் கொண்டார். அவரது கோரிக்கையை ஜப்பானியர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை.

தமது முயற்சியில் தோல்வுற்ற பில்சுட்ஸ்கி ஐரோப்பாவுக்குத் திரும்பி வந்து சேர்ந்தார். பிறகு, ருஷ்ய அதிகாரிகளைக் கொல்லுவது, ரயில் வண்டிகளில் கொள்ளை அடிப்பது போன்ற பயங்கர நடவடிக்கைகள் பில்சுட்ஸ்கியின் தலைமையில் நிகழலாயின. எனினும் பிறகு அவர் தமது கட்சியின் கட்டளைக்கு இணங்க, அத்தகைய நடவடிக்கைகளைக் கைவிட்டார். ஆயுதப் பயிற்சி அளித்துப் படைகளைச் சேகரிக்க முற்பட்டார். அவ்விதம் பில்சுட்ஸ்கி சேகரித்த படைகள்தான் பின்னர் ஐரோப்பாவிலேயே புகழ் பெற்று விளங்கின.

* * *

1914-ல் முதலாவது மகா யுத்தம் மூண்டதும் பில்சுட்ஸ்கி ஜெர்மனி, ஆஸ்திரியா, ஹங்கேரி நாடுகளின் கட்சியில் சேர்ந்து கொண்டார். எனவே, அவரது படைகள் ருஷ்யா மீது படையெடுத்தன.



ஜோசப் பில்சுட்ஸ்கி



செக்கோஸ்லோவேகியாவில் பால் வண்டியை நாய் இழுத்துச் செல்லும் காட்சி

1922-ல் ஏற்பட்ட புதிய அரசியலின் படி பில்சுட்ஸ்கி ஜனாதிபதி தேர்த லுக்கு நிற்க மறுத்து விட்டார். ஜனாதிபதிக்குப் போதிய அதிகாரம் இல்லை என்பதே, அவர் அவ்விதம் மறுத்ததற்குக் காரணமாகும்.

பிறகு அவர் போலந்து அரசியலிலிருந்தும் விலகிக் கொண்டார். எனினும் நாலு வருஷங்களுக்குப் பிறகு, அதாவது 1926-ல் ஏற்பட்ட பெரும் நெருக்கடி பில்சுட்ஸ்கியை மறுபடியும் அங்காட்டின் அரசியலில் இழுத்து விட்டது.

இச்சந்தர்ப்பத்தில் ஜெர்மன், ஆஸ்திரிய சர்க்கார்கள், போலந்துப் படைகளைப் போலந்திலிருந்து வெளியேற்றி மேற்குப் போர் முனைக்கு அனுப்ப முற்பட்டனர். அந்தச் சூழ்ச்சியைக் கண்டு ஆத்திரம் கொண்ட பில்சுட்ஸ்கி இராணுவத் தலைமைப் பதவியை ராஜிநாமா செய்து விட்டார்.

எனினும் பில்சுட்ஸ்கியின் ஆதரவைப் பெறுவதற்காக 1916-ம் வருஷம் ஜெர்மன், ஆஸ்திரிய, ஹங்கேரி சர்க்கார்கள் போலந்தின் சுதந்திரத்தை அங்கீகரித்தன. அப்போது ஏற்பட்ட தாற்காலிகமான போலந்து சர்க்காரில் பில்சுட்ஸ்கி இராணுவ மந்திரி பதவி ஏற்ருர்.

மறுபடியும் அவருக்கும் மேற்படி ஐரோப்பிய சர்க்கார்களுக்கும் தகராறு உண்டாயிற்று. பில்சுட்ஸ்கி உள்பட போலந்து சர்க்கார் தலைவர்கள் ஜெர்மனியிடமும் ஆஸ்திரியாவிடமும் விசுவாசப் பிரமாணம் செய்து கொள்ள வேண்டும் என்று அந்த நாடுகள் வற்புறுத்தின. அதற்குப் பில்சுட்ஸ்கி இணங்காததால், அவர் இராணுவ மந்திரி பதவியை ராஜிநாமா செய்ய நேர்ந்தது.

ஜெர்மன், ஆஸ்திரிய சர்க்கார்களுக்கு எதிராகப் பில்சுட்ஸ்கி ராஜிநாமா செய்ததால் மேற்படி சர்க்கார்கள் அவரைக் கைது செய்தனர். அதன் காரணமாக யுத்தம் முடியும் வரை பில்சுட்ஸ்கி ஒரு ஜெர்மன் சிறையில் இருக்க நேர்ந்தது.

பிறகு ஜெர்மனி வீழ்ச்சியுற்றதால், பில்சுட்ஸ்கி விடுதலை அடைந்து புதிய போலந்து சர்க்காரின் தலைமைப் பதவியையும் இராணுவ மந்திரிப் பதவியையும் ஏற்ருர்.

அவரது மேற்படி பதவி காலத்தில்தான் லிதுவானியா, யுக்ரேன், ருஷ்யா முதலிய நாடுகள்மீது போலந்து படை யெடுத்துத் தனது வடக்கு, கிழக்கு எல்லைகளை நிர்ணயித்துக் கொண்டது.

* * *

அப்போது பில்சுட்ஸ்கி சில பிரிவுப் படைகளுக்குத் தலைமை வகித்து, போலந்தின் தலைநகரான வார்சாவுக்குள் பிரவேசிக்க முற்பட்டார்.

அதைக் கேள்வியுற்ற போலந்து ஜனாதிபதி தாமே நேரில் வார்சா நகரின் எல்லைக்கு விரைந்து சென்று, துருப்புகளை வாபஸ் செய்து கொள்ளும்படி பில்சுட்ஸ்கியைக் கேட்டுக் கொண்டார்.

போலந்தின் அப்போதைய நெருக்கடியைச் சமாளிக்க முடியாத போலந்து சர்க்கார் ராஜிநாமா செய்தாலன்றித் தாம் துருப்புகளை வாபஸ் செய்துகொள்ள முடியாது என்று பில்சுட்ஸ்கி கூறிவிட்டார்.

அந்த நிபந்தனைக்கு இணங்க போலந்து ஜனாதிபதி மறுத்துவிடவே, வார்சா நகரைத் தாக்கும்படி பில்சுட்ஸ்கி தம் துருப்புகளுக்கும் கட்டளையிட்டார்.

அவ்வாருக, வார்சா தெருக்களில் போர் ஆரம்பமாயிற்று.

அப்போது சர்க்கார் துருப்புகள் பில்சுட்ஸ்கியின் துருப்புகளை எதிர்த்துப் போர் செய்யாததுடன், அவரது கட்சியிலும் சேர்ந்து கொண்டு விட்டன. சர்க்காரின் கட்டளைக் கிணங்கப் பல மாகாணங்களிலிருந்தும் வார்சாவுக்கு வந்து கொண்டிருந்த துருப்புகளும், ரயில்வேத் தொழிலாளர்களின் வேலை நிறுத்தம் காரணமாகத் தலைநகருக்கு வந்து சேர முடியவில்லை. பில்சுட்ஸ்கியின் கொள்கையை ஆதரித்தே மேற்படி தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தார்கள் என்பது குறிப்பிடத் தக்கது.

இவ்வாருக, வேறு வழியில்லாமற் போகவே போலந்து சர்க்கார் பில்சுட்ஸ்கியிடம் பணிந்து சரண் அடையும்படி நேரிட்டது.

# கோபம் தணிந்தது

ஸோமாஸ்



ஜன்னல் வழியாகப் பாதி மதியின் ஒளி உள்ளே வந்து இந்திராவின் மலர் முகத்தில் விழுந்து அதை மேலும் பிரகாச மாக்கியது. மோகன நிலவின் ஒளியில் அவளுடைய மிருதுவான ரோஜாக் கன்னங்கள் புது வனப்புடன் மிளிர்ந்தன.

கீழே ஒரு பாயை விரித்து அதில் ஒரு தலையணை கூட வைத்துக் கொள்ளாமல் படுத்துத் தூங்கி விட்டாள் இந்திரா. ஒரு கையை மடக்கித் தலைக்கு உயரமாக வைத்துக் கொண்டிருந்தாள் அவள். உடம்போடு உடம் பாக ஒட்டிக் கொண்டிருந்த பெங்கால் ஸில்க் புடவை அவளது சௌந்தரியத்தை எடுத்துக் காட்ட உதவியது. பாவம், அவள் கண்ணீர் விட்டபடியே தூங்கி விட்டாள். அவளது அழகிய மிருதுவான கன்னங்களில் ஓடி உலர்ந்திருந்த கண்ணீர்க் கோடுகள் நில வொளியில் மின்னிக் கொண்டிருந்தன.

என் மனம் குழைந்து விட்டது. அவள் அருகில் சென்று உட்கார்ந்து மெதுவாக அவள் கன்னத்தைத் தொடப் போனேன். சமயம் பார்த்துச் சுயமரியாதை குறுக்கிட்டது.

'ஏன், அவளாகத்தான் இது சம்பந்தமாக என்னிடம் முதலில் பேசிவிட்டால் என்ன குடி முழுகிப் போய் விடும்? ஒரு சின்ன விஷயத்துக்கு இப்படி நாள் முழுவதும் பேசாமல் இருந்து சத்தியாக்கிரகம் செய்கிறாளே!' என்று என் மனம் இடித்துக் கூறியது. உடனே அவள் பக்கத்திலிருந்து எழுந்து விட நினைத்தேன். அவள் முகத்தை மீண்டும் ஒரு தடவை பார்த்தேன்.

அந்தச் சில விநாடிகளில் என் மனம் மீண்டும் தளர்ந்தது.

'நாமும் தான் ரொம்பக் கோபித்துக் கொண்டு விட்டோம். ஒரு அற்ப விஷயத்துக்காக அவ்வளவு கோபித்துக் கொண்டால் ஒரு பெண் என்னதான் செய்ய முடியும்? தாய் தகப்பனை விட்டு, உற்றார் உறவினரை விட்டு நம்மையே கதியென்று நம்பி வந்திருக்கும் ஒரு இளம் பெண்ணை இப்படித்தான் துன்புறுத்துவதா?'

இந்த மனப் போராட்டம் என்னை அவள் பக்கத்திலிருந்து எழுந்திருக்க விட வில்லை. மெதுவாக அவள் கரத்தைப் பற்றினேன்.

"இந்திரா, இந்திரா!"

பதில் இல்லை.

அவள் முகத்தை உற்றுப் பார்த்தேன். அவள் கோபம் இன்னும் தணிய வில்லை என்று தெரிந்தது.

உண்மையில் தூங்குகிறவர்களைச் சுலப மாக எழுப்பி விடலாம். இந்திராவைப் போல் தூங்காமல் தூங்குகிறவர்களை எப்படி எழுப்புவது?

நான் மெதுவாக எழுந்து என் அறைக்கு வந்தேன். எனக்கு அவளை அப்படியே விட்டு விட்டுத் தூங்க முடிய வில்லை.

நானும் என் படுக்கையில் படுக்காமல் என் மேல் துண்டைக் கீழே விரித்துப் படுத்துக் கொண்டேன். தூக்கம் வர வில்லை. மணி எட்டு அடித்தது. பத்து மணிக்கு

முன்னால் தூங்கி எனக்குப் பழக்கமே கிடையாது. வயிற்றுப் பசி வேறு கிண்டிக் கொண்டிருந்தது. மேலும் இந்திராவின் நினைவு வேறு விகவ ரூபமெடுத்து என் எதிரே நின்று எனக்குத் தொல்லை தந்தது.

அன்று காலையில் எழுந்தது முதலே ஒன்றும் சரியாயில்லை. பல் தேய்த்துக் கொண்டு காலைக் கடன்களை முடித்து விட்டுக் காப்பி சாப்பிடத் தயாராகச் சமையலறைக்குச் சென்றேன்.

"இன்னும் இன்றைக்குப் பால் வரவில்லை" என்றாள் இந்திரா.

எனக்குக் கோபம் கோபமாய் வந்தது.

"இதேமாதிரி முன்பு ஒரு சமயம் அவன் பால் கொண்டு வராமல் இருந்து விட்டான். அன்றைக்கு ஒருநாள் குறைவாகக் கொண்டு வந்தான். நீ இதையெல்லாம் ஒன்றும் கேட்கிறதே இல்லையா?" என்று இரைந்தேன்.

இந்திரா தன் முகத்தைத் திருப்பித் தோளில் இடித்துக் கொண்டு, "ஆகா, இங்கே கேட்காமல்தான் இருந்தார்களாக்கும்! புருஷர்களாயிருப்பவர்கள் இந்த மாதிரி சமயங்களில் அதட்டி உருட்ட வேண்டும். அதுதான் இந்த வீட்டில் கிடையாதே! உங்கள் மிரட்டல் உருட்டல்களெல்லாம் என்னிடம்தான் நடக்கும். இந்தப் பால்காரனிடம் ஒரு தடவை சத்தம் போட வேண்டும் என்று உங்களிடம் நான் ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன். அப்பொழுதெல்லாம் நீங்கள் வாய் திறக்கவேயில்லை. 'இந்திரா, ஏதோ ஒரு நாளைக்குப் பால்காரன் தாமதமாக வந்தான் என்பதற்காக அவனிடம் சத்தம், போட முடியுமா? அவனுக்கு என்ன சிரமமோ என்னவோ? இதையெல்லாம் நீயே பார்த்துக் கொள். இதிலெல்லாம் நான் தலையிட ஆரம்பித்தால் காரியமே கெட்டு விடும்!' என்று சொன்னீர்கள்......" என்று சொல்லிக் கொஞ்சம் நிறுத்தினாள்.

"...அதற்காக நீ பேசாமல் இருந்து விட்டாயாக்கும்! ரொம்ப ஒழுங்கு போ! இப்படி ஒரு பெண் அக்கறையில்லாமல் இருந்தால் எப்படி குடித்தனம் உருப்படும் என்று கேட்கிறேன்?"




"அடாடா, ரொம்பக் கரிசனம் தான், போங்கள். போனவாரம் வண்ணானுக்குத் துணி போட்டீர்களே, எல்லா உருப்படிகளையும் எண்ணிப் போட்டீர்களோ?"

"எண்ணிப் போடாமல் சும்மாவா போட்டு விடுவார்கள்? எண்ணித்தான் போட்டேன்!" என்றான்.

"ஓகோ! சரிதான். இப்படி வேறு நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா? இரண்டு ஷர்ட்டைக் கணக்கிலே சேர்க்காமல் விட்டு விட்டீர்களே! கடைசியிலே நான் பார்த்துச் சேர்த்தேனாக்கும்!"

"சரி, சரி. நீ ரொம்பப் புத்திசாலி. இப்பொழுது காப்பிக்கு வழி சொல்லு!" என்றேன். இந்திரா அதற்குமேல் வாய் திறக்க வில்லை. அதற்குள் பால்காரனும் வந்து விட்டான். வந்த கோபத்தில் அவனை அறைந்து விடலாம் என்று பார்த்தேன். இந்திரா அவனை என் கண்ணிலேயே பட விட வில்லை. ஒரு கொடியில் பாலை வாங்கிக் கொண்டு அவனை அனுப்பி விட்டாள்.

சிறிது நேரத்துக் கெல்லாம் காப்பியைக் கொண்டு வந்து இந்திரா என்னெதிரில் வைத்தாள். நான் காப்பியை ஆற்றிச் சாப்பிட ஆரம்பித்தேன்.

காப்பியைச் சாப்பிட்ட பிறகும் எனக்கு இந்திராவின் மேல் ஏற்பட்ட கோபம் தணிய வில்லை. என்னிடமுள்ள குற்றங் குறைகளை என்னிடமே எடுத்துச் சொல்லி அவமானப் படுத்தினால் கோபம் வராமல் என்ன செய்யும்? ஆனால் காப்பி சாப்பிட்டதனால் பாதிக் கோபம் தணிந்து விட்டது.

சற்று நேரம் பேப்பர் படித்து விட்டு, மணியைப் பார்த்தேன். மணி எட்டு ஆகிவிட்டது. உடனே பரபரப்புடன் குளிக்கும் அறைக்குச் சென்றேன். வென்னீர் அண்டாவில் வென்னீர் 'வெத வெத' என்று இளஞ்சூடாக இருந்தது.

அதைப் பார்த்ததும் என் கோபத்தின் உஷ்ணம் மீண்டும் பழைய கதியை அடைந்தது.

"என்ன இது, இந்திரா? வென்னீரா இது? இந்த வீட்டில் எல்லாம் வர வர ஊழலாய்ப் போய்க் கொண்டிருக்கிறதே!" என்று சத்தம் போட்டு விட்டு வென்னீரில் குளிக்காமல் பக்கத்தில் அண்டாவிலிருந்த பச்சை ஜலத்தை மொண்டு ஆத்திரத்துடன் தலையில் அவசரம் அவசரமாகக் கொட்டிக் கொண்டு வெளியே ஓடிவந்தேன்.

இந்திராவும் அவசரம் அவசரமாகக் குளிக்கும் அறையை நோக்கி ஓடிவந்தாள்.

அதற்குள் நான் அவசரம் அவசரமாகத் தலையைத் துடைத்துக் கொண்டு வேறு வேஷ்டி கட்டிக் கொண்டு சமையலறைக்குச் சென்றேன். இந்திரா பதறிப் போய், சமையலறைக்குள் ஓடி வந்தாள்.

"இப்படி அவசரப்பட்டுப் பச்சை ஜலத்தில் குளிக்கலாமா? உடம்புக்கு வந்து விட்டால் என்னத்தைச் செய்வது? வென்னீர் சூடு போதவில்லை என்று சொன்னால் நான் ஐந்து நிமிஷத்தில் அடுப்பை மூட்டிச் சுட வைத்துக் கொடுத்திருக்க மாட்டேனா, என்ன?" இதைக் கேட்ட போது இந்திராவின் குரலில் இலேசாக நடுக்கம் கண்டது.

"ஆமாம். இனிமேல் தேவியிடம் அப்படியே தெரிவிக்கிறேன். ஆபீஸுக்குப் போகும் மனிதன் ஒருவன் இருக்கிறானே, அவனுக்கு வேண்டிய தேவைகளை முதலில் கவனிப்போம் என்பது வீட்டில் இருக்கிறவர்களுக்குத் தெரியவில்லையென்றால், அப்புறம் அந்த வீடு எப்படி உருப்படும்? சரி, எனக்கு நாழியாகி விட்டது. சாப்பாடு வேண்டாம்!" என்று படபடப்புடன் பொரிந்து தள்ளி விட்டு ஆபீஸுக்குப் புறப்படுவதற்குத் தயார் செய்து கொள்ள ஆரம்பித்தேன்.

அதைக் கண்ட இந்திரா மிகவும் கலவரம் அடைந்து விட்டாள்.

"இப்படி ஒவ்வொன்றுக்கும் கோபித்துக் கொண்டால் என்ன செய்வது? பால்காரன் சீக்கிரம் வராததனாலே வென்னீர் அடுப்பைக் கவனிக்க முடிய வில்லை. அதனாலே அது சரியாகச் சுடவில்லை.......!"

"......அதையெல்லாம் கேட்டுக் கொண்டிருக்க எனக்கு அவகாசம் இல்லை. நீ வேண்டுமானால் சாவகாசமாக வென்னீர் போட்டு ஸ்நானம் செய்து விட்டுச் சாப்பிடு!" என்று கூறிக் கொண்டே காலில் செருப்பை மாட்டிக்கொண்டு வாசற்பக்கம் விரைந்தேன்.

வாஸ்தவமாகவே இந்திரா பயந்து போய் விட்டாள். அவள் கண்களில் நீர் ததும்பியது. முகம் சோக சிகரமாக விளங்கியது. அவளுக்குத் தெரியாமல் அவள் முகத்தை இலேசாகப் பார்த்தேன். என் மனசுக்கு அப்பொழுதுதான் திருப்தியா யிருந்தது. 'இன்றைக்கு ஒரு நாள் ஹோட்டலில் சாப்பிட்டதனால் ஒன்றும் பாதகம் இல்லை. அவளுக்கு நான் ஒரு கண்டிப்பு மனிதன் என்பது தெரிய வேண்டும்'' என்று மனசுக்குள் எண்ணிக் கொண்டேன்.

"......என்ன, சாப்பிடாமல் இப்படி...... கோபித்துக் கொண்டு போகிறீர்களே! இது நன்றாயிருக்கிறதா? நீங்கள் சாப்பிடவில்லையென்றால் நானும் சாப்பிட மாட்டேன்!" என்று சொல்லும்போதே இந்திராவின் கண்களில் மளமளவென்று கண்ணீர் பெருகியது.

இந்த ரகளையில் அன்று ஆபீஸுக்கு நேரம் ஆகிவிட்டது. அவசரம் அவசரமாக ஓடினேன். இந்திரா அசோக வனத்துச் சீதை மாதிரி சோக வடிவமாக நின்றாள்.

ஆபீஸுக்குப் போய்ச் சற்று நேரம் பரபரப்பாக வேலை செய்தேன். ஆனால் பசி வயிற்றைக் கிண்ட ஆரம்பித்தது. ஆபீஸ் இடைவேளை வரையில் பல்லைக் கடித்துக் கொண்டு பொறுமையோடு என் வேலையைக் கவனித்தேன்.

ஆபீஸ் கடிகாரம் மணி ஒன்று அடித்தது. உடனே வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டு விட்டு வந்தால் என்ன என்று தோன்றியது. அவ்வளவு பிகுசெய்து கொண்டு காலையில் சாப்பிடாமல் வந்துவிட்டு, இப்பொழுது போனால் இந்திரா என்ன நினைப்பாள்!

நீண்ட நேரம் யோசனைக்குப் பிறகு போகவேண்டாம் என்ற முடிவுக்கு வந்தேன்.

ஹோட்டலுக்குப் போய்ச் சாப்பிட உட்கார்ந்தேன். உடனே இந்திராவின் நினைவு வந்தது. அந்த அசட்டுப் பெண் சாப்பிடாமலே இருந்து விடுவாளே! இதை நினைத்த போது எனக்குச் சாப்பாடு வேண்டியிருக்கவில்லை. காப்பியைச் சாப்பிட்டு விட்டு எழுந்தேன். வயிற்றுப் பசி ஒருபுறம் கிடக்க, இந்திராவைப் பற்றிய நினைவு எழுந்து வேதனையைத் தந்தது. நான் காலையில் அப்படி நடந்து கொண்டது சரியல்ல என்று என் மனச்சாட்சி உறுத்தியது.

ஆபீஸுக்கு வந்தேன். வேலை ஓடவில்லை. கடிகாரத்தையே பார்த்துக் கொண்டிருந்தேன். அரைமணி முன்னதாகவே எழுந்து அன்று கடையைக் கட்டிவிட முயன்றேன். அன்றைக்குச் சோதனையாக என்னத்தை யெல்லாமோ கவனிக்க வேண்டியிருந்தது. கடைசியில் வேலை முடிந்து புறப்படுவதற்கு ஆறரை மணியாகிவிட்டது. வீட்டை நோக்கி வேகமாக நடையைக் கட்டினேன். கடைத் தெரு வழியாக வந்து கொண்டிருந்தபோதே, என்னையும் அறியாமல் இரண்டணாவுக்கு மல்லிகைப்பூ வாங்கிக் கொண்டேன்.

* * *

டங், டங், டங்......மணி ஒன்பது அடித்தது. என் சிந்தனை கலைந்தது. மேஜையின் மேல் கவனிப்பாரற்றுக் கிடந்த மல்லிகைப் பூ கம்மென்று மணம் வீசியது. சாப்பிடாமல் இருந்ததனால் பசியும் அலுப்பும் ஒரு புறம் என்னைப் போட்டு வாட்டின.

இந்திரா மெதுவாக எழுந்து வந்தாள். விளக்கு 'ஸ்விச்'சைப் போட்டாள். பளீரென்று அறையில் வெளிச்சம் வந்தது. நான் எழுந்து உட்கார்ந்தேன். அவளை நிமிர்ந்து பார்க்கவே எனக்கு வெட்கமாயிருந்தது. காலையில் அர்த்தம் இல்லாமல் அவ்வளவு பெரியதாகக் கோபித்துக் கொண்டிருக்க வேண்டாம். ஆனால் இப்பொழுது அவளை நான் என்ன கேட்பது? எப்படிச் சமாதானம் செய்வது? யோசனையில் ஆழ்ந்தேன்.

இந்திரா மெதுவாக நெருங்கி வந்தாள். அடிமேல் அடி யெடுத்து வைத்து என் கால் அருகில் வந்து உட்கார்ந்தாள்.

"இப்படி யெல்லாம்......நடந்து கொள்வது.. ...நியாயமா? என்னிடம் கோபித்துக் கொண்டு காலையில் சாப்பிடாமலே போய் விட்டீர்களே! பட்டினி கிடந்தால் உடம்பு என்னத்துக்கு ஆகும்? நான் என்ன தப்பு செய்திருந்தாலும்.........என்னை மன்னித்து விடுங்கள்......!" என்று நாத் தழுதழுக்கக் கூறினாள் இந்திரா.

நெகிழ்ந்து கொண்டிருந்த என் மனசை உறுதிப் படுத்திக் கொண்டு மௌனமாகப் படுத்துக் கொண்டிருந்தேன்.

இந்திரா மெதுவாக என் கரங்களைப் பற்றினாள். "எழுந்திருங்கள், நேரம் ஆகிறது. இன்னமும் என்மேல் கோபமா?" என்றாள்.



நான் எழுந்து, "இந்திரா, நீ போய்ப் படுத்துக் கொள். இங்கே ஏன் வந்தாய்?" என்று தொண்டையில் ஒரு புதுக் கரகரப்பை வரவழைத்துக் கொண்டு கேட்டேன்.

இந்திராவுக்கு எங்கிருந்துதான் அவ்வளவு துணிச்சல் வந்ததோ, தெரியவில்லை!

"நீங்கள் ஏன் கொஞ்ச நேரத்துக்கு முன்னால் அங்கே வந்தீர்கள்?"

"எங்கே?"

"......அதுதான்......! அங்கே!"

"நான் எங்கே வந்தேன்? உனக்கு அது எப்படித் தெரியும்?"

"எனக்குத் தெரியாது என்று நினைத்தீர்களா? பேசாமல் எழுந்து வாருங்கள். இப்படித்தான் கோபத்தைத் தொடர்கதை மாதிரி விட்டு விட்டுத் தொடர்ந்து கொண்டேயிருப்பதா? நன்றாயிருக்கிறது! கோபம் தானாகத் தணிந்து விட்டால் கூட நீங்கள் தணிய விட மாட்டீர்கள் போலிருக்கிறதே! உங்கள் கோபம் எப்பொழுதோ தோற்று விட்டது. எழுந்திருங்கள்!"

"உன் கோபமும் தான் தோற்று விட்டது. ஆனால் நாம் இருவரும் ஒருவருக்கு ஒருவர் தோற்கவில்லை!" என்றேன்.

"ரொம்ப சமர்த்து. போங்கள்! வீணாக என்னை வேதனைப் படுத்தி அழ வைத்தீர்கள். பட்டினி போட்டீர்கள்!" என்றாள் இந்திரா.

"நானும் தானே பட்டினி? சரி, அது போகட்டும். தட்டை எடுத்து வை. பசி காதை அடைக்கிறது. இந்தா, உன் மனசுக்கு உகந்த மல்லிகை!" என்று கூறி மல்லிகைப் பூவை எடுத்து அவள் கையில் கொடுத்தேன். இந்திராவின் முகம் உடனே மலர்ந்தது. அன்றைய தினம் இந்திரா பரிமாறிய பருப்புத் துவையலும் சாதமும் மிகவும் பிரமாதமா யிருந்தன.






நீங்களும்
பெறுக

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

சீரான வேலை நிலையிலும், சளைக்காத உணர்ச்சியிருக்கும் போதுதான் நீங்கள் திடமான ஆரோக்கியம் உள்ளவரென்பதைக் குறிக்கும். சளைக்காத உணர்ச்சி பெறுவதற்கு, பிரதி தினமும் போஜனத்தின் அங்கமாக வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுவதைத்தவிர சிறந்த தொன்றுமில்லை. தேக வலுவூட்டுவதற்கு அத்யாவசியமான பொருள்கள் நிறைந்த வாட்டர்பரீஸ் காம்பவுண்ட், வேலை செய்வதற்கான திராணியை பெருக்கி, சோர்வு, ஜலதோஷம், இருமல் மற்றும் இதர பிணிகளுக்கு இடம் கொடாதபடி தேகத்திற்கு எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கச் செய்யும்.

உங்கள் குடும்பம் முழுவதற்கும் இப்பொழுதே வாங்கி விடுங்கள்




# WATERBURY'S
# COMPOUND

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

உங்களை தெம்புடன் வைத்திருக்கும்

NAS-41-63

# முல்லைவனத்து மோகினி

'பகீரதன்'



## 3

கிழவி என்னைப் பார்த்துச் சிரித்த ஏளனச் சிரிப்பைக் கண்டு பயந்து, நான் நரியின் ஊளையால் பயந்து விட்ட நிலையைக் கிழவியிடம் சொல்ல விரும்பவில்லை. அந்தக் கிழவியோ மிகவும் பொல்லாதவளாக இருந்தாள். எப்படியோ என்னுடைய மன நிலையை உணர்ந்து கொண்டாள். 'கங்கையும் கடாரமும் கொண்ட சோழன் பிறந்த நாட்டில், இமயத்தில் தமிழ்க் கொடியைப் பறக்கவிட்ட மாவீரன் பிறந்த நாட்டில் பிறந்த தமிழா! நரியின் ஊளைச் சத்தத்தைக் கேட்டு நடுங்குகிறாயே. இப்படி நடுங்கி நடுங்கி வாழ்பவன் நடுங்கும்போதெல்லாம் சாகிறான். அவனால் தமிழ் நாடும் சாகிறது' என்று சொல்லிக் கேலியாகப் பார்த்தாள். தன்னுடைய பல்லில்லாத வாயின் தொங்கிப்போன உதட்டைப் பிதுக்கி என்னைப் பரிகாசம் செய்தாள்.

கிழவிக்கு ஏதோ பதில் சொல்ல விரும்பினேன். என் மனத்தில் தோன்றிய எண்ணங்களைச் சொல்ல எனக்கு வார்த்தைகள் கிடைக்கவில்லை. கிழவியின் முகத்தை நிமிர்ந்து பார்க்க முடியாதவனாய்த் தலைகுனிந்து கொண்டேன்.

''கேட்ட கேள்விக்குப் பதில் சொன்னால் தானே நல்லது. தலையைக் குனிந்து கொண்டால் எல்லாம் சரியாகப் போய்விடுமா!'' என்று கேட்டு விட்டு என்னைப் பார்த்தாள்.

''அது கிடக்கட்டும்! மூர்ச்சையடைந்து கீழே விழுந்த மோகினியின் தந்தை என்னவானார்! தயவுசெய்து மேலே கதையைச் சொல்லுங்கள்'' என்று கேட்டுக் கொண்டேன்.

கிழவி மேலே கதையைத் தொடர்ந்தாள் :—

திடீரென்று அழுகைச் சத்தம் கேட்டவுடன், மோகினி அலறி அடித்துக் கொண்டு ஓடிவந்தாள். அப்பொழுதுதான் அடுத்த வீட்டுக்குச் சென்ற சுந்தரமும் ஓடி வந்தான். வந்தவுடன் மயக்கம் போட்டுத் தரையில் கிடந்த தன் மாமாவைப் பார்த்தான். அவர் முகத்தில் தண்ணீரைத் தெளித்து, கிட்டிப் போயிருந்த பல்லைத் திறந்து கொஞ்சம் தண்ணீரைக் குடிக்கும்படி செய்தான். மோகினியின் தந்தை மூர்ச்சை தெளிந்து எழுந்தார். எல்லாருடைய முகத்திலும் ஒரு தெளிவு ஏற்பட்டது. அதற்கு மேல் சுந்தரம் அங்கு நிற்கவில்லை. போய் விட்டான்.

வீட்டுக்குப் போகும் சுந்தரத்தை மோகினியின் தந்தை ஆவலுடன் பார்த்தார். அவருக்கு அவனைக் கூப்பிட வேண்டும் போல் தோன்றியது. ஏனோ தெரியவில்லை, கூப்பிட ஆரம்பித்தவர் கூப்பிடாமலே நிறுத்திவிட்டார். ஆனால் அவருக்கு ஒரு விஷயம் தெளிவாகத் தெரிந்துவிட்டது என்பதை அவருடைய முகம் எடுத்துக் காண்பித்தது. சுந்தரம் ஆபத்து சமயத்தில் ஓடி வந்து எத்தனையோ அன்புடன் உபகாரங்கள் செய்தாலும் அவன் மனத்தில் ஏதோ ஒரு சந்தேகம் இருக்கிறது என்பதை மட்டும் தெரிந்து கொண்டார்.

''அவனுக்கு இங்கு உள்ளவர்களிடம் சந்தேகம் இருக்கிறது. என்ன சந்தேகம், எதைப்பற்றிச் சந்தேகம் என்பதை அவன் சொல்ல விரும்பாவிட்டாலும் அவனுடைய முகபாவம், அவனுடைய நடத்தை இப்பொழுது நன்றாகக் காட்டி விட்டது'' என்று மனத்துக்குள்ளாகவே நினைத்துக் கொண்டார்.

தம்மைச் சுற்றிலும் நின்றுகொண்டிருந்தவர்களைப் பார்த்தார். அவர்களுடைய கவலைதோய்ந்த முகங்களைப் பார்த்தார். மோகினியின் களையிழந்த முகத்தையும் அதில் இருந்த அசைக்க முடியாத உறுதியையும் பார்த்தார். சற்றுத்



தள்ளி நின்று கொண்டிருந்த "மோகினியின் பெரிய தாயாரைப் பார்த்தார். மோகினியை இங்கிருந்து அழைத்துக் கொண்டு போங்கள். எனக்கு ஒன்றுமில்லை" என்றார்.

அதற்கு மேல் அங்கு இருக்க விருப்பமில்லாமல் எல்லாரும் அவரவர்கள் வேலைகளைக் கவனிக்கச் சென்று விட்டனர்.

அன்று முதல் சுந்தரம் மோகினியின் வீட்டுக்கு அடிக்கடி வர ஆரம்பித்தான். மோகினியைத் தனக்கு உரியவளாகவே செய்து கொண்டு விட்டான். காலையில் வருவான்; நடுப்பகலில் வருவான்; மாலையில் வருவான்; நினைத்த போதெல்லாம் வருவான். மோகினியை அழைத்துக் கொண்டு தாமரைக் குளத்துப் பக்கம் போய் விடுவான்.

சுந்தரம் வருவதைப் பார்த்து யாரும் எதுவும் சொல்லவில்லை. அவன் வீட்டுக்கு வந்ததும் அவனைப் பார்க்கக் கூடாதென்று நினைப்பார் மோகினியின் தகப்பனார். சுந்தரமோ 'மாமா! மாமா!' என்று அவரிடம் பேச்சுக் கொடுப்பான். 'அத்தை' என்று அழைத்துக் கொண்டு அவர் மனைவியிடம் ஓடுவான். அவனுடைய குரலில், அவனுடைய பார்வையில், இன்னும் அவனுடைய ஒவ்வொரு செய்கையிலும் ஏதோ ஒரு சக்தி இருந்தது. அது மோகினியின் வீட்டில் உள்ள எல்லாரையும் திருப்திப்படுத்தி வந்தது. அதனால் அவனைப் பார்த்தவுடன் அவனை உபசரிக்க ஆரம்பித்தார்கள். அவனுடைய வருகையை முகமலர்ச்சியுடன் சந்தோஷமாக வரவேற்க ஆரம்பித்தார்கள்.

அவனைத் துச்சமாக மதிக்க மோகினியின் தந்தையால் எவ்வளவு முயன்றும் முடியவில்லை. கண்களில் களிப்பு பொங்க, இதழ்களில் புன்னகை பூக்க, வாயைத் திறந்து "சுந்தரம், வா!" என்று அழைக்கும்படி அவன் நடந்து கொண்டான்.

அது மட்டுமா! அவன் எதையாவது சொன்னால் அதன்படி கேட்டு நடக்கவும் ஆரம்பித்து விட்டனர். மந்திரத்தால் மயங்குண்டவளைப் போல மோகினி அவன் சொன்னபடி எல்லாம் நடக்க ஆரம்பித்தாள். திடீரென்று சுந்தரம் 'மோகினி! நீ என்னைத்தானே கல்யாணம் செய்து கொள்ளப் போகிறாய்! உன்னை நம்பலாமா!' என்று கேட்பான். அப்படிக் கேட்டுவிட்டு அவளையே சந்தேகத்தோடு பார்த்துக் கொண்டிருப்பான். அவன் கரு நீல விழிகளில் கவலை தேங்கி நிற்கும். அவன் கம்பீரமான முகம் கருத்துவிடும்.

இதற்கு என்ன பதில் சொல்லுவது என்று தெரியாமல் மோகினி மௌனமாகவே இருந்து விடுவாள். அவளுடைய மௌனமே அவன் சந்தேகத்தை மேலும் பலப்படுத்திவிடும்.

சட்டென்று தன்னுடைய மனத்தை மாற்றிக் கொண்டு "சும்மா விளையாட்டுக்காகக் கேட்டேன்" என்று சிரிப்பான். அப்பொழுது அவனுடைய கண்கள் பள பள வென்று மின்னும்.

மின்னுகின்ற அந்த வசீகரப் பார்வையில் மோகினி கட்டுப்பட்டு விடுவாள்.

இப்படியாகச் சுந்தரம் அந்த வீட்டில் உள்ள எல்லாரையும் ஆட்டி வைத்துக் கொண்டிருந்தான். சில சமயம் மோகினியைப் பாடச் சொல்லுவான். தானும் சேர்ந்து பாடுவான். பாடிக் கொண்டிருக்கும்போதே எதையோ நினைத்துக் கொண்டு தன் வீட்டுக்கு ஓடிப் போய்ப் புல்லாங்குழல் எடுத்து வருவான். புல்லாங்குழலை வாயில் வைத்து அவன் ஊத ஆரம்பித்து விட்டாலோ யாரும் தன்னை மறக்காமல் இருக்க முடியாது. புல்லாங்குழலில் அவன் எழுப்பும் இன்னிசையில் பரவசமடையாத உயிருள்ள ஜீவனே இருக்க முடியாது. திடீரென்று அவனுடைய மனநிலை மாறிவிடும். கொஞ்சிக் கொஞ்சி நடனமாடிய குழலிசை அழுது புலம்ப ஆரம்பித்துவிடும். அதைக் கேட்டு உள்ளம் உருகிக் கண்ணீர் விடாமல் இருக்க முடியாது. மோகினி சின்னக் குழந்தை போலத் தேம்புவாள்; கண்ணீர் விடுவாள். அப்படிக் கண்ணீர் விடுவதே இன்பமாக இருக்கிறது என்பாள். சில சமயம் சுந்தரத்தின் குழலிசை எத்தனையோ ஜால வித்தைகளை யெல்லாம் செய்து காட்டும். யாருக்கும் புரியாத ஆனால் எல்லாரும் புரிந்து கொள்ளும்படியான ஒரு விசித்திரமான மொழியில் பேசுவது போலத் தோன்றும்.

சுந்தரம் வீட்டில்தான் இப்படியா! தொழிலிலும் அப்படித்தான். அவன் நல்ல உழைப்பாளி. தன்னுடைய வயல் வேலைகளைத் தானே நேரில் சென்று கவனிப்பான். வயல் வெளிக்கு அவன் சென்று விட்டால் உழவர்கள் எல்லாம் அவனை வந்து சுற்றிக் கொள்வார்கள். ஏதோ புதையலைக் கண்டவர்களைப் போல அவனை வந்து சூழ்ந்து கொள்வார்கள். அவர்களைப் பார்த்துச் சுந்தரம் கண் சிமிட்டிச் சிரிப்பான். அவர்களோடு சேர்ந்து அவனும் ஏர் பிடிக்க ஆரம்பித்து விடுவான். அவன் அடிக்கடி தன்னுடைய குடியானவர்களிடம் சொல்லுவான்.

"மனிதனுக்கு உள்ள சோம்பல் மட்டும் குறைந்து உழைப்பதுதான் பெருமை என்பதை உணர்ந்து கொண்டு விட்டானானால் அப்பொழுது தெரியும், அவனுக்கு எப்படி வேலை செய்வது என்று. இந்த உலகில் மனிதன் மிகச் சிறிய பிறவியாக இருந்தாலும் அவன் உழைக்க ஆரம்பித்து விட்டால் அது எவ்வளவு பெரிய மகத்தான சக்தியாக உருவெடுக்கும் தெரியுமா! மனிதன் தான் நினைக்கிற காரியம் எதையும் சாதிக்கக் கூடிய காலம் வரப்போகிறது. தன்னை நேசிக்கும் மனிதனைப் பூமிதேவி ஒருபோதும் கைவிட்டதில்லை. ஆகையால் சோம்பல் இல்லாமல் வேலை செய்யுங்கள். கொஞ்சம் மூளையையும் பயன்படுத்தி உழவுத் தொழிலில், பாடுபடுங்கள். உழுதுண்டு வாழ்வது தான் வாழ்வு. மக்களுக்கு உணவு அளிக்கும் இந்தப் புனிதமான தொழிலுக்கு ஈடு இணையே கிடையாது. இந்த உண்மையை உணரும்படி மக்கள் குலத்துக்கு அறிவு கொடுக்கும் உயர்ந்த கல்வி முறை ஏற்பட வேண்டும். சுதந்திரமா வாழும் இந்த வாழ்க்கையை விடப் பிறரிடம் கை கட்டிப் பிழைக்கும் சோம்பேறிப் பிழைப்பை

உயர்வாக மதிக்கிறார்களே. அவர்களுடைய அறியாமையைப் பற்றி என்ன சொல்லுவது! உண்மையிலேயே உணவுத் தொழிலில் ஈடுபட்டுப் பாடுபடும் பாட்டாளிகளாகிய நீங்கள்தான் இந்த நாட்டு மன்னர்கள். உங்கள் நலனைப் பேணி வளர்க்கும் காடுதான் மனிதர்கள் வாழும் காடு. மற்றதெல்லாம் மிருகங்கள் வாசம் செய்யும் காடுதான்'' என்று தன்னுடைய உழவர்களைப் பார்த்து அன்போடு சொல்லுவான். அதுவே அவன் உலகத்தைப் பார்த்துச் சொல்லுவது போலவும் இருக்கும்.

சுந்தரம் வேலை செய்து பாடுபடும் பணக்காரன். அவனுக்கு ஏழைகளிடம் இரக்கம் இருந்தது. அவர்களுடைய உழைப்பைக் கண்டு மதிக்கும் உயர்ந்த குணம் இருந்தது. அவர்களுக்கும் பசிக்கும், அவர்களும் வாழ வேண்டும் என்று நினைத்தான். அவனுடைய இந்த மனித குணத்தைக் கண்டு கிராமத்து உழவர்கள் எல்லாம் அவனைப் புகழ்ந்தார்கள். அவனுடைய சிநேகம், அவனுடைய தொடர்பு கிடைப்பது கௌரவம் என்று பணம் படைத்தவர்கள் எல்லாம் கருதினார்கள்.

இவ்வளவு உயர்ந்த பண்புகள் நிறைந்த அவன் அடிக்கடி எதைப்பற்றியோ நினைத்து ஏங்குவான். மோகினியை நினைத்துப் பார்த்துப் பெருமிதம் அடைவான். அவள் காதலை எண்ணிக் களிப்பான். அதே சமயம் ஏதோ இனந்தெரியாத சந்தேகம் தோன்றி வேதனையும் படுவான். மனதுக்குள்ளாகவே ஆனால் சற்று வாய்விட்டே பேசிக் கொள்வான். ''காதலை நம்பலாமா! அதுவும் பெண்கள் ஆண்களிடம் கொண்டுள்ள காதல் நிலையானதாக இருக்குமா! மோகினி கடைசிவரையில் என் கல்யாண விஷயத்தில் மன உறுதியுடன் இருப்பாளா!'' என்று திரும்பத் திரும்பக் கேட்டுக் கொள்வான். தானே பைத்தியம் போலச் சிரித்துக் கொள்வான்.

ஒரு நாள் இரவு. வழக்கம்போல மோகினியும் சுந்தரமும் நீண்ட நேரம் தாமரைக் குளக் கரையிலுள்ள சலவைக் கல் மேடைமீது அமர்ந்து பேசிக் கொண்டிருந்துவிட்டு வீட்டுக்குத் திரும்பினார்கள். மோகினி தன் அறைக்குச் சென்றாள். அறைக் கதவுகளை மூடினாள். விளக்கை அணைத்து விட்டுப் படுத்தாள். அங்கு பயங்கர இருள் சூழ்ந்து கொண்டது. ஒருமாதிரி மரண அமைதி அந்த அறையில் நிலவியிருந்தது.

மோகினி தூங்கவில்லை; அவளுக்குத் தூக்கம் வரவில்லை. எதையோ சிந்தித்த வண்ணம் பேசாமல் படுத்துக் கிடந்தாள். பிறகு தனக்குத் தானே பேசிக் கொண்டாள். அவள் பேச்சிலிருந்து அது அவளுக்கும் சுந்தரத்துக்கும் நடந்த பேச்சுக்களாக இருக்க வேண்டும் என்பதை நன்கு உணர்ந்துகொள்ள முடிந்தது.

''உன்னைக் கடைசி வரையில் உண்மையாகவே நம்பலாமா!''

''என்னைச் சில காலம் பிரிந்திருந்தால் உன் மனம் மாறாமல் இருக்குமா!''

''என்னுடைய வார்த்தையில் நம்பிக்கை வைத்து நீ எத்தனை காலம் வேண்டுமானாலும் எனக்காகக் காத்துக் கொண்டு இருப்பாயா!''

கட்டிலில் இருந்து எழுந்தாள். முதுகுக்குப் பின்னால் கைகளைக் கட்டிக்கொண்டு குறுக்கும் நெடுக்குமாக நடந்தாள்.

மனிதர்களின் மனமே ஒரு விசித்திரமாகத்தான் இருக்கிறது. ஒரு மனம் படும் வேதனையை இன்னொரு மனம் உணர்ந்து கொள்வதில்லை. எல்லாம் சுயநலமும், நம்பிக்கை இன்மையும்தான் காரணம். ஒருவரை ஒருவர் நம்பி ஒருவருக்காக ஒருவர் கஷ்ட நஷ்டம், சுக துக்கம், வாழ்வு தாழ்வு எல்லாவற்றிலும் பேதமில்லாமல் நடந்து கொண்டால் தானே காரியங்கள் நடக்கும். மோகினி இதை மனத்துக்குள்ளாகவே நினைத்துப் பேசிக் கொண்டாள். பிறகு பயங்கரமாகச் சிரித்தாள். மீண்டும் படுக்கையில் படுத்து விட்டாள்.

திடீரென்று அவள் படுக்கை அறையின் கதவு திறப்பது போலிருந்தது. ஜன்னல் கதவுகள் எல்லாம் பேயாட்டம் ஆடின. கட்டில் எங்கேயோ பாதா



ளத்தை நோக்கி நகருவது போலிருந்தது. அது இன்னும் மேலே மேலே போய்க் கொண்டே இருந்தது. அறையில் இருந்த சாமான்கள் எல்லாம் எங்கோ நடந்து செல்லுவதைப் போலும், பூமி பிளந்து விடுவது போலவும் மோகினி உணர்ந்தாள். இதற்கு மத்தியில் அந்த அறையில் எங்கிருந்தோ விளக்கு வெளிச்சம் வந்து விழுந்தது. அந்த வெளிச்சத்தில் இரண்டு பேர் கைகோர்த்துக் கொண்டு களிநடம் புரிந்தனர். உல்லாசமாகப் பாடினார்கள். உற்சாகமாக ஆடினார்கள். சட்டென்று ஆட்டத்தை நிறுத்தி விட்டு, "அஹ்ஹஹ்ஹா!" என்று சிரித்தனர். மீண்டும் பாட்டு, ஆட்டம், சிரிப்பு.

இப்படிக் கோலாகலமாக ஆடிக் கொண்டிருந்த அந்த இரண்டு உருவங்களில் ஒன்று ஆடுவதையும் பாடுவதையும் நிறுத்தி விட்டது. ஆடிக் கொண்டிருந்த இன்னொரு உருவத்தையும் கையைப் பிடித்து ஆடுவதை நிறுத்தியது. அதன் காதில் எதையோ சொல்லிற்று. அந்த உருவத்திடம் இருந்து பிரிந்து மறைந்து விட்டது. தனித்துநின்ற உருவம் கைகளால் கண்களை மூடிக் கொண்டு 'ஹோ' வென்று கதறியது. உடல் குலுங்கக் குலுங்க அழுதது. இந்தச் சோகக் காட்சியை மோகினி பார்த்தாள். பார்த்துக் கொண்டே இருந்தாள். திடீரென்று அந்த உருவம் அழுவதை நிறுத்தியது. அங்கிருந்து மறைந்து விட்டது. மீண்டும் தன் அறையில் உள்ள சாமான்கள் எல்லாம் அதனதன் இடத்தில் அமைதியாக இருப்பது போலிருந்தது. மோகினி சுய உணர்வு பெற்றாள்; பயங்கரமாக அலறினாள்.

இதே நேரத்தில் மோகினியின் தகப்பனார் அமைதியில்லாமல் அவருடைய அறையில் அலைந்து கொண்டிருந்தார். ஏதோ கனவு உலகத்தில் யாருடனோ பேசுவது போலத் தனக்குத் தானே பேசிக் கொண்டிருந்தார். அவருடைய இதயத்தின் வேகமும், அவருடைய மனோ வேகமும் அவருக்கு ஏதோ ஒரு புது சக்தியை அளித்திருந்தன. அடைய முடியாத இன்பத்தையோ அனுபவத்தறியாத சோகத்தையோ அவர் அனுபவித்துக் கொண்டிருந்தார். அந்த வேளையில் மோகினியின் அலறல் சத்தம் அவரை வந்து தாக்கியது.

மின்னல் வேகத்தில் மோகினியின் அறையை நோக்கி ஓடினார். அங்கே அவருக்கு முன்னாலேயே அவருடைய மனைவியும், மோகினியின் பெரிய தாயாரும் வந்து நின்று கொண்டிருந்தனர். அவர்கள் வெளிறிய முகத்துடன் சோர்ந்து போயிருந்தார்கள்.

பெரிய தாயார் மோகினியை அணைத்துப் பிடித்துக்கொண் டிருந்தாள். அவள் தோள் மீது தலையை வைத்துச் சாய்ந்த வண்ணம் மோகினி உட்கார்ந்திருந்தாள். இவர்களுக்குச் சற்றுத் தூரத்தில் மோகினியின் தாயார் எதையோ தீவிரமாகச் சிந்தித்த வண்ணம் அமர்ந்திருந்தாள்.

மோகினியின் தகப்பனார் அங்கு வந்ததும் மோகினியைத் தனியே விட்டுவிட்டுப் பெரிய தாயார் எழுந்து சற்று ஒதுப்புறமாக நின்று கொண்டாள். மோகினி மட்டும் ஏதோ பிரமை பிடித்தவள்போல் தான் படுத்திருந்த கட்டிலின் மீது உட்கார்ந்திருந்தாள்.

மோகினியின் தாயார் தன் கணவரிடம் வந்தாள். அவர் முகத்தை நிமிர்ந்து பார்த்தாள். அவரிடம் ஏதோ குசு குசுவென்று சொன்னாள். அவள் சொல்லுவதை அவர் புரிந்து கொண்டதாகவே தெரியவில்லை. அவர் கைகளைப் பற்றித் தனி இடத்துக்கு அழைத்துப் போய் ஏதோ சொன்னாள்.

மோகினியின் தந்தைக்கு இப்போது விளங்கி விட்டது. முகத்தை ஒரு மாதிரி சுழித்துக் கொண்டு தன் மனைவியைப் பார்த்தார். அந்தப் பார்வை "கடைசியில் இதைத் தவிர வேறு வழியே கிடையாது போல் இருக்கிறது. பெண்ணுக்கு ஏற்ற தாயார்தானே!" என்று சொல்லுவது போலிருந்தது.

பிறகு கட்டிலில் உட்கார்ந்திருந்த மோகினியைப் பார்த்தார். வெறுப்பு கலந்த குரலில் "மோகினி! ஏன் இப்படி அலறினாய்! நீ இந்த வீட்டில் ஒருவரையும் நிம்மதியாக இருக்க விடமாட்டாய் போலிருக்கிறதே!" என்றார்.

மோகினி மௌனமாகத் தலையைக் குனிந்த வண்ணம் உட்கார்ந்திருந்தாள். அதுவரையில் தன்னிடம் இப்படிப் பேசி யறியாத தந்தையின் முகத்தைப் பார்க்கப் பயந்தாள்.

அவளுடைய வருத்தம் தோய்ந்த முகத்தைப் பார்த்தவுடன் அவள் தந்தைக்கு மனம் மாறி விட்டது. இப்பொழுது அவர் முகத்தில் ஏற்பட்டிருந்த மாறுதல், அவர் கண்களில் இருந்த இரக்கம் தான் கடுமையாக நடந்து கொண்டதை எண்ணி அவர் வேதனைப் படுவதைப் போலிருந்தது. தலையைத் தம் இரு கைகளாலும் பிடித்துக் கொண்டு யோசித்தார். கைகளைப் பிசைந்து விட்டுக் கொண்டார். தம் மனைவியை ஒரு முறை பார்த்தார். பிறகு மகளைப் பார்த்தார். மோகினியின் முகத்தில் இருந்த தவிர்க்க முடியாத ஏக்கத்தைப் பார்த்தார். அவர் தந்தை உள்ளம் என்ன எண்ணியதோ! அடுத்த கணம் தன் மகளிடம் சென்றார். மோகினிக்கு அருகில் உட்கார்ந்து கொண்டார். நடுங்கும் குரலில் அன்பும் ஆதரவும் கலந்த தொனியில் அவர் பேசினார். "மோகினி! நாளைக்கே சுந்தரத்துக்கும் உனக்கும் திருமணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்கிறேன். நீ சந்தோஷமாய்ப் படுத்துத் தூங்கு" என்று சொல்லிவிட்டுத் தன் அறைக்குச் சென்றுவிட்டார்.

மோகினியின் முகத்தில் இதுவரையில் இல்லாத ஒரு தேஜஸ் உண்டாயிற்று. அவள் ஆவலுடன் சென்று தன் பெரிய தாயாரை அணைத்துக் கொண்டாள். "பெரியம்மா! அப்பாவின் மனம் கூட மாறிவிட்டது. எனக்காக மிகப் பெரிய தியாகத்தைச் செய்யத் தயாராகி விட்டார். என்னால் அவர்களுக்கு எவ்வளவு சிரமம்!" என்றாள்.

"நீ அதைப் பற்றி எல்லாம் வீணாக ஏன் நினைக்கிறாய். நீ விரும்பிய கணவனை மணம் முடிக்க வேண்டியதுதானே பெற்றோர்களின் கடமை! உன் தந்தை தன் கடமையை உணர்ந்தவர். வீண் பிடிவாதம் பிடிக்காதவர். வெறும் கௌரவத்துக்கு ஆசைப்படாதவர். நீ அவரைப் பற்றி அறிய மாட்டாய். இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதித்ததன் மூலம் அவர் உண்மையிலேயே மிகப் பெரிய தியாகம்தான் செய்திருக்கிறார். அது மட்டுமா! அவர் உன்னிடம் கொண்டுள்ள அன்பின் ஆழத்தையும் அல்லவா அது காட்டுகிறது. உன் மனம் திருப்திப்படாமல் வாழ்நாளெல்லாம் நீ வேதனைப் படும்படி உன்னை வேறு ஒருவருக்கு மணம் முடித்து வைப்பதில் அவருக்கு என்ன சந்தோஷம்!" என்றாள். பிறகு அவள் காதில் ஏதோ ரகசியமாகச் சொன்னாள்.

இதுவரை சாதுவாக இருந்து கொண்டிருந்த மோகினி ஒரு துள்ளுத் துள்ளித் தன் படுக்கையில் போய்ப் படுத்துக் கொண்டாள்.

மறு நாள். காலை வேளை.

மோகினியின் வீட்டுத் தோட்டத்தில் பூத்துக் குலுங்கிய மலர்களின் நறு மணம் காற்றிலே

# நீங்கள் இன்று

# புரோடெக்ஸ்

# உபயோகித்தீர்களா?

நீங்கள் நாள் முழுதும் புதுமையுடனும்
வாசனையுடனும் இருக்க, உயர்ந்த,
புதிய புரோடெக்ஸ் ஆல்-பர்பஸ் டாய்லட
பவுடர். மென்மையும், நறுமணமும்
சேர்ந்த புரோடெக்ஸ் குடும்ப முழுதுக்குய்
வெப்பத்தில் குளுமையும்
இனிமையும் தருகிறது.



ஸ்நானத்துக்குப் பின்
வாசனைப் பூஷணம். ஈரத்தை
உறிஞ்சி புதுமை தருகிறது.



குளுமை! குதூகலம்!
கோடையின் கொடுமையில்



நேர்த்தியும் மென்மை!
யும்-குழந்தைக்கு ஏற்றது.



மிக எடுப்பானது
உங்கள் வதனத்தை அழகு
படுத்தும் பவுடர்.




# புரோடெக்ஸ்

## ஆல் பர்பஸ்

## டாய்லட் பவுடர்

பிதந்து வந்தது. அப்பொழுதுதான் சூரியன் உதயமாகி யிருந்தான். வானத்தில் உயரே உயரே பவனி வந்து ஜ்வலிக்கப் போகும் உதய சூரியனின் பொன்னிற வர்ண ஜாலங்கள் வானிலே தீட்டப்பட்டிருந்தன. பட்சி ஜாலங்களின் கலகலத் தொனியும் கோயில் பெரிய மணியின் கணீரென்ற ஓசையும் சேர்ந்து வந்தன. ஒன்று அமைதியாகவும் இன்பமாகவும் இருந்தது. மற்றொன்று உற்சாகமாகவும் உணர்ச்சியுடனும் இருந்தது. இரண்டு இனிமையான சத்தங்களும் காற்றிலே கலந்து ஒலி யிருந்தன.

படுக்கையிலிருந்து சுந்தரம் எழுந்தான். வழக்கத்துக்கு மாறாக அன்று எல்லாக் காரியங்களிலும் ஒரு பட படப்பு காண்பித்தான். அன்று, தான் இலங்கைக்குப் பிரயாணம் கிளம்பப் போவதாகவும் வருவதற்குச் சில மாதங்கள் கூட ஆகலாம் என்றும், அதற்கான ஏற்பாடுகளை உடனே கவனிக்க வேண்டும் என்றும் தன் காரியஸ்தருக்குக் கட்டளை யிட்டான்.

இந்தத் திடீர் உத்தரவைக் கேட்டுக் காரியஸ்தர் ஒரு கணம் திகைத்துப் போனார். மறு கணம் வாய் பேசாமல் சுந்தரம் கிளம்புவதற்கு வேண்டிய ஆயத்தங்களைக் கவனிக்க ஆரம்பித்து விட்டார். பெட்டியில் அவனுக்கு வேண்டிய உடைகள் எடுத்து வைக்கப்பட்டன. படுக்கை கட்டியாகி விட்டது. இன்னும் பிரயாணத்துக்கு வேண்டிய தட்டு முட்டுச் சாமான்களையும் மறந்து விடாமல் எடுத்து வைத்தார் காரியஸ்தர்.

மோகினி இன்று என்றுமில்லாத மகிழ்ச்சியில் மிதந்து கொண்டிருந்தாள். சுந்தரம் வருவார், அப்பா அவரிடம் தன்னுடைய சம்மதத்தை வாய் விட்டுச் சொல்லிவிடப் போகிறார். அந்தச் சந்தோஷத்தைக்கூற அவர் தன்னைக் குறித்துக் கொண்டு என்னிடம் வருவார். அதற்குள் நாம் அலங்காரம் செய்து கொண்டு அவரை வரவேற்கத் தயாராக இருக்க வேண்டும் என்று தீர்மானித்தாள். அவசரமாகத் தன்னை அலங்காரம் செய்து கொண்டாள். தன் கருவிழிக் கண்களுக்குக் கருமை போதாதென்று, இமைகளுக்கு மை தீட்டிக் கொண்டாள்.

அப்போது அவள் விழிகளில் ஆனந்த அலைகளும் இன்பத் திரைகளும் எழுந்தாடின. ஆசைப் புயல்கள் வீசின. காதல் கொந்தளித்தது. அன்பு பொங்கியது. இவற்றிற் கெல்லாம் அடியிலே எட்டாத ஆழத்திலே எத்தனையோ இன்பங்கள்; சொல்ல முடியாத மர்மங்கள். இப்படியாக அவள் இதயக் கோட்டையின் இரகசியங்களை எல்லாம் அவள் மீன் விழிகள் தெரிவித்தன.

தன் தந்தையின் அறையில் யாரோ பேசிக் கொண்டிருக்கும் சத்தம் கேட்டு அங்கு செல்ல விரும்பினாள். ஆனால் அங்கு செல்லாமலே விஷயத்தைத் தன் பெரிய தாயார் மூலமாகத் தெரிந்து கொண்டாள். சுந்தரம் வந்திருப்பதாகவும் தந்தையுடன் சந்தோஷமாகவும் காரசாரமாகவும் ஏதோ பேசிக் கொண்டிப்பதாகவும் சொன்னாள்.

சுந்தரம் வீட்டுக்குள் வந்ததும் வராததுமாக மோகினியின் தந்தை அவனை எதிர் கொண்டு அழைத்தார். அவன் கையைப் பிடித்து வந்து தனக்கு எதிரில் உட்கார வைத்தார்.

சுந்தரம் வழக்கமாக அணிந்துகொண்டு வரும் உடைகளைக்கூட அன்று அணிந்து கொள்ளவில்லை. சாதாரண வேஷ்டியையும் சட்டையையும்தான் அணிந்திருந்தான். அவன் கண்களில் ஒரு புதிய ஒளி வீசிக் கொண்டிருந்தது. இதழ்களில் புன்னகை தவழ்ந்து விளையாடியது.



"உங்கள் பருமனைக் குறைப்பதற்கா வழி இல்லை? தினம் ஒரு கால் வீசை சுத்தமான பசு வெண்ணெய் சாப்பிட்டுக் கொண்டு வாருங்கள், இளைத்துவிடும்!"

"என்ன, உங்கள் யோசனை விபரீதமா இருக்கே! வெண்ணெய் இன்னும் சதை அல்லவா போடும்!"

"அதான் இல்லை; சுத்தமான பசு வெண்ணெய் வாங்குவதற்காக நீங்கள் அலையற அலைச்சலில் உடம்பு இளைத்துப்போய்விடும்!"

---

"என்ன மாமா! ஒரு நாளும் இல்லாமல் இன்று ஒரே உற்சாகமாக இருக்கிறீர்களே" என்றான்.

"சுந்தரம்! இன்று உன்னிடம் ஒரு முக்கியமான விஷயத்தைச் சொல்ல வேண்டும் என்பதற்காக உன்னைக் காலையிலிருந்தே எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்" என்றார்.

"நான் பிரயாணம் கிளம்பும் விஷயம் உங்களுக்கு முன்னதாகவே தெரிந்து போய் விட்டதோ!"

"பிரயாணமா! எங்கே!"

"இலங்கைக்கு."

"இலங்கைக்கா! அப்படித் திடீரென்று புறப்படும்படியான அவசரம் என்ன வந்து விட்டது!"

"நமக்கு அங்கே கொஞ்சம் தேயிலைத் தோட்டம் இருப்பது உங்களுக்குத் தெரியும் அல்லவா!"

"ஆமாம்; தெரியும்."

"அங்குள்ள தொழிலாளர்களுக்கும், நமது தோட்டத்தைப் பார்த்து வரும் ஏஜண்டுக்கும் பெரிய தகராறாம். அதைத் தீர்த்து வைப்பதற்காகப் போகிறேன்!"

அப்பொழுது வேகமாக அடித்த காற்று ஜன்னல் வழியாக அவர்கள் பேசிக் கொண்டிருந்த அறையில் புகுந்து ஓலமிட்டது. வாழ்வு ஒரு மாயை என்று சொல்லுவது போலிருந்தது அவனுக்கு. திடீரென்று அவனுக்கு ஏற்பட்ட ஏதோ ஒரு சந்தேகத்தைக் காரணமாகக் கொண்டுதான் அவன் இலங்கைப் பிரயாணத்துக்குத் திட்டம் போட்டு விட்டான்.

அவன் மோகினியை நேசித்தான். அவள் கரிய கண்களின் காந்த சக்தி அவன்மீது அசைக்க முடியாத ஒரு சக்தியைப் பிரயோகித்தது. இதைப் பற்றித்தான் அவன் தன் மாமாவிடம் பேச விரும்பினான். அதற்கு மாமாவே பேச்சுக் கொடுக்க மாட்டாரா என்று நினைத்துக் கொண்டிருந்தான். ஆனால் பேச்சோ தேயிலைத் தோட்டத்துத் தகராறில் போய் நின்று விட்டது. அவன் மாமாவின் முகத்தை ஆவலுடன் பார்த்தான்.

● ஈழ நாட்டின் தலைப் புதல்வர்களில் ஒருவரும் சிறந்த தமிழ்ப் பாவலருமான பண்டிதர் நா. முருகேச பிள்ளை அவர்கள் தேக வியோக மடைந்த செய்தியை அறிந்து மிகவும் வருந்துகிறோம். இப்பெரியார் சமய, சமூக முன்னேற்றத் துறைகளில் ஆர்வத்துடன் பணிபுரிந்து வந்தவர். "கல்கி" இதழின் பேரில் மிக்க அன்பு கொண்டிருந்தவர்.

காலஞ் சென்ற பெரியாரின் புதல்வர் திரு எம். கதிர்காமதம்பி அவர்களுக்கும் மற்றும் அவருடைய உறவினர் நண்பர்களுக்கும் நமது மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். ●



"எங்கு பார்த்தாலும் சண்டையும் சச்சரவும் தானா! நம்முடைய குடும்பச் சண்டைக்குக் கூட இன்று நான் முடிவு காண்பதற்குத்தான் உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். இங்கு வந்த நீயோ வேறு ஒரு நகராறுக்கு முடிவு காணப் பிரயாணம் போகிறேன் என்று சொல்லிக் கொள்கிறாய். உலகத்தில் சண்டையும் சச்சரவும் இல்லாமல் மனிதர்கள் வாழ மாட்டார்களா!"

சுந்தரம் உணர்ச்சி மிகுந்தவனாய்ப் பேச ஆரம்பித்தான். கையை ஆட்டிக் கொண்டு பேசினான். மாமாவின் அருகில் இன்னும் சற்று நெருங்கி அமர்ந்து நிதானமாகச் சொன்னான்.

"நீங்களே பாருங்கள். எல்லாருமே கெட்டவர்களாக இருக்கிறார்கள். யாரையும் நம்பி எந்தக் காரியத்திலும் இறங்க முடியவில்லை. எங்கு பார்த்தாலும் மனிதர்கள் சண்டை போட்டுக்கொண்டே இருக்கிறார்கள். வீட்டில், உறவினர் குடும்பங்களில் எங்கு சென்றாலும் கோபதாபங்கள், விளையாட்டுக்கள்கூடக் கடைசியில் சண்டையில் போய்த்தான் முடிகிறது. வேண்டாத காரியங்களுக்கெல்லாம் வீண் கலகங்கள் செய்கின்றனர். ஒன்றுமறியாத மக்களை அடிக்கின்றனர். அதனால் மக்கள் கைது செய்யப் படுகின்றனர். எல்லாம் சுயலாபத்துக்காகவே ஒருவரை ஒருவர் அடித்துக் கொள்கிறார்கள். இதெல்லாவற்றையும் பார்க்கும்போது எனக்குக் கூட நாம் எதற்காக வாழ்கிறோம் என்று என்மீதே கோபம் ஏற்படுகிறது. நம் குடும்பங்களையே எடுத்துக் கொள்ளுங்கள். ஒன்றுமில்லாததற்காக வீண் மனஸ்தாபத்தில் எத்தனையோ காலமாக இருந்து வருகிறோம். நல்லவர்கள் யாருமே உலகத்தில் இல்லாமல் இருப்பதால்தான் இது போன்ற வெறுப்புக்கள் அதிகமாகிறது. ஒரு சிலர் இங்கொருவர் அங்கொருவராக நல்ல மனம் படைத்தவர்கள் இருக்கிறார்கள். அவர்களையும் மக்கள் எங்கே வாழ விடுகிறார்கள்!"

சுந்தரத்தைப் பார்த்து மோகினியின் தந்தை சிரித்தார். உண்மையாகப் பேசினான். தனக்குத் தோன்றியதைத் தடங்கல் இல்லாமல் சொன்னான். அதனாலேயே அவருக்குச் சுந்தரத்தின்மீது மேலும் அன்பு உண்டாகி விட்டது. ஒரு பரிவு உணர்ச்சியும் பாசமும் ஏற்பட்டது.

"நீ ரொம்ப தூரத்துக்குப் போய் விட்டாய். மிகப் பெரிய காரியங்களுக்குச் சாதாரணமாகத் தீர்ப்புகள் கண்டு விட்டாய். நீ சொல்லுவது எல்லாம் உண்மைதான். அதை வாழ்க்கையில் கடைப் பிடிக்க வேண்டிய மனப் பக்குவம்தான் இன்னும் மக்களுக்கு ஏற்படவில்லை. எந்தக் காரியத்தையுமே மேலெழுந்த வாரியாகப் பார்க்கத் தொடங்கி விட்டார்கள். நமக்குப் பின்னாலும் உலகம் இருக்க வேண்டும், அதில் மக்கள் வாழ வேண்டும் என்ற உணர்ச்சியே ஜனங்களிடம் காணோம். இலங்கைத் தோட்டத்தில் வேலை செய்து வரும் தொழிலாளர்கள் நீண்ட காலமாக அந்தத் தோட்டத்தில் வேலை செய்து வருபவர்கள். அவர்களுடைய உழைப்பு மட்டும் இல்லாவிட்டால் தோட்டத்தில் ஒன்றுமில்லை. ஆகையால் அவர்களுடைய நீண்டகால சேவையை மறந்து விடாமல் இந்தத் தகராறைப் பார்க்க வேண்டும். உன்னுடைய எதிர்காலம் நன்றாக இருக்கும். இன்றோடு நம் குடும்பச் சண்டைகள் தீர்ந்து விட்டன. நான் மனப்பூர்வமாக மோகினியை உனக்குக் கல்யாணம் செய்து கொடுக்கத் தீர்மானித்து விட்டேன்" என்றார்.

வெளியில் இளங்காற்று சற்று வேகமாக அடித்துக் கொண்டிருந்தது. காற்றில் அசைந்தாடுகிற மரக் கிளைகளின் சத்தம் லேசாகக் கேட்டது. மோகினியின் தகப்பனார் சந்தோஷ மிகுதியால் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தார். வானத்தில் திட்டு திட்டாகச் சிதறிக் காணப்பட்ட மேகக் கூட்டங்களை ஜன்னல் வழியாகச் சுந்தரம் பார்த்தான். அது வானிலே வேகமாக ஊர்ந்து சென்றது. அவ்வப்போது மேகக் கூட்டங்களுக்கிடையே சூரியன் தன் ஒளி முகத்தைக் காட்டினான்.

வாழ்வின் விசித்திரங்களை ஒரு கணம் சுந்தரம் எண்ணிப் பார்த்தான். மாமாவின் மன மாறுதல் அவனுக்கு வியப்பை அளித்தது.

"நீங்கள் இந்த உலகத்தில் உள்ள நல்லவர்களில் ஒருவர். நீங்கள் இந்த முடிவுக்கு நிச்சயம் வந்து விடுவீர்கள் என்று எனக்குத் தெரியும். இருந்தாலும் நான் இலங்கைக்குப் போய் வந்தவுடன் இதற்கு ஏற்பாடு செய்யலாம்."

"கல்யாணத்தை முடித்துக் கொண்டு மோகினியையும் அழைத்துக் கொண்டு இலங்கைக்குப் போவதுதானே! அவளும் இலங்கையை எல்லாம் பார்த்து விட்டு வருவாள்" என்றாள் இவ்வளவு நாழியாக இவர்கள் சம்பாஷணைகளைக் கவனித்து வந்த மோகினியின் தாயார்.

"இல்லை, நான் தனியாகத்தான் போகப் போகிறேன். இலங்கை போய் வந்த பிறகுதான் கல்யாணம் எல்லாம்."

"மோகினி இதை எப்படிச் சகிப்பாள்? அவளால் உன்னைப் பிரிந்து இருக்க முடியும் என்று நான் நினைக்க வில்லை."

"இது என்ன கேள்வி! மோகினி எப்படிச் சகிப்பாள்! இதனால் என்ன ஆகிவிடும் அவளுக்கு! யாரானாலும் பிரிவு அன்பைப் பெருக்கும். இது உலக இயற்கை. இதை மோகினி உணர்ந்தே இருப்பாள். சுந்தரத்தின் பிரிவால் மோகினிக்கு ஏற்படும் துயரத்துக்காக, அவளுக்கு ஒருவரும்



# சிக்கனத்திற்கும் பந்தோபஸ்துக்கும்

சூப்பர் இந்தியா டயர்களினுல் உள்ள இரட்டிப்பு ஆதாயம்




**கார்களுக்கு**

சுகமான சவாரி
மற்றும்
பந்தோபஸ்து

**லாரிகளுக்கும் பஸ்களுக்கும்**

உறுதியான உழைப்பு
மற்றும்
சிக்கனம்

*"டயர்களில் மிகச் சிறந்தவை"*

# சூப்பர் இந்தியா

IT. 8143

ஆறுதல் சொல்ல வேண்டாம்'' என்றார் மோகினியின் அருமைத் தகப்பனார்.

இதைச் சொல்லிவிட்டு அவர் திரும்பிப் பார்த்தார். அப்போதுதான் அங்கு வந்த மோகினி அவர்கள் முன் நின்றாள். அவள் முகம் சற்று வாட்டமுற்றிருந்தது. அவள் மனம் வேதனையால் சுருங்கி யிருந்தது. எல்லாரையும் ஒருமாதிரியாய்ப் பார்த்தாள். விதி அவளைப் பார்த்துச் சிரித்தது.

சுந்தரம் மோகினியைப் பார்த்தான். பிறகு மாமாவையும் அத்தையையும் பார்த்தான். எல்லாருக்குமாகச் சொன்னான். ''நான் அவசியம் இலங்கைக்குப் போய் விட்டுத்தான் வரவேண்டும். ஆனாலும் நான் அங்கு அதிக நாள் தங்கப் போவதில்லை. நான் இலங்கையில் இருந்தாலும் என் மனம் இங்குதான் இருக்கும். சீக்கிரமே திரும்பி விடுவேன்'' என்றான்.

மோகினியின் கண்களில் நீர் துளித்தது. அவள் தாயாரின் கண்களும் கலங்கின

''உலகத்தில் இது சகஜம். சுந்தரம் இலங்கைக்குப் போய் விட்டு விரைவில் வந்து விடுவதாகத்தானே சொல்லுகிறான்!'' என்றார் மோகினியின் தகப்பனார்.

மோகினி மெதுவாகச் சுந்தரத்தின் அருகில் வந்தாள். இருவருடைய கண்களும் ஒன்றை ஒன்று அன்புடன் நோக்கின. மோகினி வாய் பேசாமல் அசையாமல் இருந்தாள். இப்படி அவள் அசையாமல் இருப்பதும், அவள் மௌனமாகப் பார்ப்பதும் கொஞ்சம் கொஞ்சமாகச் சுந்தரத்துக்கு ஏதோ விவரிக்க முடியாத பயத்தை ஊட்டின. அவன் அவளுடன் பேச விரும்பினான். ஆனால் என்ன பேசுவது என்றுதான் அவனுக்கு விளங்கவில்லை. மோகினியே பேச ஆரம்பித்தாள்.

''என்ன மோசமான வாழ்க்கை!'' என்று தெளிவான குரலில் சொன்னாள். அதில் அழுத்தமிருந்தது.

ஏதோ குறைப் பட்டுக் கொண்டு கூறுவது போல் அவள் சொல்லவில்லை. மனிதப் பிறவி எடுத்த ஒருத்தி ஒரு விஷயத்தைப் பற்றிச் சிந்தித்து எல்லாருக்கும் தெரிந்த முடிவுக்கு வந்ததை வெளிப்படையாகச் சொன்னாள். சற்று நேரம் அசையாமல் இருந்தாள்.

''தாங்கள் என் காதலை நிராகரித்தால், நான் உயிரை விட வேண்டியவள்தான்'' என்று சொன்னாள். அவள் சொன்னதில் ஒரு வார்த்தை கூட உபசாரத்துக்காகச் சொல்லுவது போலில்லை. தன்னுடைய வாழ்க்கையைப் பற்றித் தீர்மானமாக முடிவு செய்து கொண்ட ஒருத்தி தான் அதிலிருந்து நிராகரிக்கப் படுவதாகத் தெரிந்தால் சாவதைத் தவிர வேறெதையும் செய்யக் கூடிய நிலையில் இல்லை என்ற முடிவுக்கு வந்து விட்டதையே அது காட்டியது.

இவ்வளவு தெளிவாக, விளக்க முடியாத வேதனையுடன் மோகினி கூறியதும் சுந்தரம் ஒன்றும் பதில் சொல்லாமல் இருக்க முடியவில்லை. மோகினியை ஆவலோடு பார்த்தான். சற்று நேரம் அவளைப் பார்த்துக் கொண்டே இருந்தான்.

''நான் இலங்கைக்குப் போனால் அங்கேயே தங்கி விடுவேன் என்று நினைத்து விட்டாயா!'' என்று கேட்டான்.

''சீக்கிரமாகத் திரும்பி விடுவீர்கள் அல்லவா!''

''எவ்வளவு விரைவில் திரும்ப முடியுமோ அவ்வளவு விரைவில் வந்து விடுவேன், மோகினி!''

''எவ்வளவு நாட்களாகும்!''

''நீ எனக்காக உண்மையாகவே காத்திருப்பதாக இருந்தால் வெகு சீக்கிரத்தில் திரும்பி விடுவேன். என் வருகையை உன் இதயம் உனக்கு முன் கூட்டியே சொல்லி விடும்.''

''உங்களுக்காக எத்தனை யுகம் வேண்டுமானாலும் காத்திருப்பேன்'' என்றாள். மோகினியின் குரலில் ஒரு ஏக்கம் தொனித்தது. ஆனால் அவள் கண்களில் இப்பொழுது ஒரு நம்பிக்கை தோன்றியது. அதனால் அவள் நீண்ட கண்கள் நீரைப் பெருக்கவில்லை.

அவர்கள் இருவரும் பிரிந்தனர்.

இதுவரை அமைதியாக இருந்த வானத்தில் ஒரு மாறுதல் தோன்றியது. வெகு தூரத்தில் எங்கோ ஆகாயம் அதிர்ந்தது; இடி இடித்தது. பின்னர் அமைதி நிலவியது. அதோடு முடிவு ஏற்பட்டு விடவில்லை என்றும் தோன்றியது.

சுந்தரம் மோகினியினுடைய தாயார், தகப்பனார், பெரிய தாயார் எல்லாரிடமும் விடை பெற்றுக்கொண்டான். தன் மாமாவை ஆர்வத்தோடு தழுவிக் கொண்டான். அவர் பாதங்களில் விழுந்து வணங்கினான். அங்கிருந்து கிளம்பி விட்டான். அவன் கையில் ருசியான தின்பண்டங்கள் நிறைந்த ஒரு பையைக் கொண்டு வந்து கொடுத்தாள் அவன் அத்தை. அதை எடுத்துக் கொண்டு அங்கிருந்து கிளம்பினான். வெளி வாசலுக்கு இறங்கும் படிகளில் எதையோ எண்ணிய வண்ணம் இறங்கினான். அவனையும் அறியாமல் அவன் முகம் திரும்பிப் பார்த்தது. மோகினி ஜன்னல் வழியாக அவனைப் பார்த்தபடியே நின்றுகொண்டிருந்தாள்.

கொஞ்ச நேரம் கழிந்தது. ஒரு ஒற்றை மாட்டு வண்டி வேகமாகப் போகும் சத்தம் கேட்டது. 'ஜல் ஜல்' என்ற அந்த மாட்டுச் சலங்கையின் சத்தம் மோகினியின் இதயத்தை என்னவோ செய்தது. அந்தச் சத்தத்தை அவளால் கேட்டுக் கொண்டிருக்க முடியவில்லை. தன் அறைக்குச் சென்று கதவைச் சாத்திக் கொண்டாள்.

வெகு தூரத்தில் கேட்கும் சோக கீதம் போல ஒற்றை மாட்டு வண்டியின் சத்தமும் மங்கி மறைந்து விட்டது.

இந்த இடத்தில் கிழவி கதையை நிறுத்தி விட்டாள். நான் கனவில் ஆழ்ந்தவனைப் போல அவள் சொன்ன கதையைக் கேட்டுக் கொண்டிருந்தேன். என்னுடைய வயிற்றுப் பசி கூடத் தெரியவில்லை. அவள் சொல் அழகிலோ, அவள் குரலின் அற்புத சக்தியிலோ, கதையின் போக்கிலோ எதில் என் மனம் ஈடு பட்டது என்பதை என்னால் கூற முடியாது. தவிர்க்க முடியாத ஆவலுடன் கதையைக் கேட்டு வந்தேன். ஆனால் அவளுடைய கதை இந்தக் கட்டத்துக்கு வந்த போது என்னால் சும்மா இருக்க முடியவில்லை.

''கல்யாணத்தை முடித்துக் கொண்டுதான் சுந்தரம் இலங்கைக்குப் போனால் என்ன! அவனுக்கு மோகினியின் மீது உண்மையான காதல் இருக்கிறதோ என்னவோ!'' என்றேன்.

கிழவி 'சட்'டென்று ''இந்த ஆண்களே சந்தேகப் பிராணிகள் தான். உங்களை விட்டுச் சந்தேகம் என்று ஒழியுமோ தெரியவில்லையே'' என்றாள்.

நான் பதில் சொல்லாமல் அந்தக் கிழவியின் சுருங்கிய முகத்தைப் பார்த்தேன்.

முல்லை வனத்தில் காற்று மேலும் மேலும் மேலும் கனத்துச் சாட்டியது. மரங்களின் தலைகள் பேயாட்டம் ஆடின. இரவுப் பூச்சிகள் ஓய்வற்ற, உணர்ச்சி நிறைந்த சத்தத்தை விடாது முழுங்கிக் கொண்டிருந்தன. (தொடரும்)

# கலைந்த கனவு

ரா. கோ.

இரவு மணி பத்து இருக்கும். எல்லாரும் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தார்கள். காற்று வராமல் ஒரே புழுக்கமாயிருந்தது. சட்டென்று எழுந்து ஜன்னல் கதவைத் திறந்தேன். வெளியிலிருந்து 'குப்'பென்று குளிர்ந்த காற்று என்மேல் பட்டது. சட்டையைக் கழற்றி மாட்டினேன்.

அந்தச் சமயத்தில் ஏதோ வண்டி வரும் சத்தம் கேட்டது. இந்த வேளையில் யார் வரப்போகிறார்கள் என்று நினைத்தவாறே ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தேன். என்ன ஆச்சரியம்! ஒரு ரிக்ஷாவல்லவா வந்து கொண்டிருக்கிறது. யாராவது வண்டியிலிருந்து இறங்குகிறார்களா என்று ஆவலுடன் எதிர் பார்த்தேன். ஒரு நிமிஷம் ஆயிற்று, இரண்டு நிமிஷமாயிற்று, மூன்று நிமிஷமும் ஆயிற்று. ஒருவரும் இறங்குவதாகத் தெரியவில்லை! ரிக்ஷா இழுத்து வந்தவனையாவது கேட்கலாம் என்று எண்ணி ஜன்னலண்டை போனேன். வெளியில் பார்வையைச் செலுத்திய எனக்கு அப்படியே இருதயம் நின்றுவிடும்போல் இருந்தது. ரிக்ஷா கீழேகூட வைக்கப்படாமல் நின்றது நின்றபடியே இருந்தது! யாராவது பிடித்திருப்பார்களோ என்று உற்றுப் பார்த்தேன். ஒருவரையும் காணவில்லை. இருந்தாலும் மெள்ள சமாளித்துக் கொண்டு, "யாரது!" என்று அதட்டினேன். 'டக்'கென்று ரிக்ஷா கீழே வைக்கப்படும் சத்தம் கேட்டது. அதிலிருந்து ஒரு ஆசாமி என்னை நோக்கி வந்து கொண்டிருந்தான். அவன் திடீரென்று எப்படித் தோன்றினான் என்று எனக்குப் புரியவில்லை. என் உடம்பு நடுங்க ஆரம்பித்து விட்டது. ஒரு முறை 'குப்'பென்று வியர்த்துக் கொட்டியது. இருதயம் "படபட" வென்று வேகமாக அடித்துக் கொண்டது.

"யார்.......!" என்றேன் நாக்குழற.

"சாமி, நான்தானுங்க ஏழுமலை!"

"ஏழுமலையா. எந்த ஏழுமலை!"

"ரிக்ஷாக்கார ஏழுமலைங்க."

"உன்னைப் பற்றி நான் கேள்விப் பட்டதுகூட இல்லையே! அது சரி, இப்போ நீ இங்கே எங்கே வந்தே!" என்று கேட்டேன்.

"என் கதையைச் சொல்லலாம் என்று வந்தேனுங்க" என்றான் அவன்.

என் இருதயம் இம்முறை வேலை செய்ய மறுத்து விட்டது! அப்படியே கம்பியைப் பிடித்த வண்ணம் நின்று விட்டேன்!

"உனக்கெப்படித் தெரிந்தது நான் கதை எழுதுபவன் என்பது!" என்றான் ஆச்சரியத்துடன்.

'பளிச்' சென்று ஒரு முறை மின்னல் தோன்றி மறைந்தது. அந்தச் சிறிது நேர வெளிச்சத்தில் அவனுடைய முகத்தை நன்றாகப் பார்த்தேன். நீண்டு வளர்ந்திருந்த தாடி, குழி விழுந்த கண்கள், ஒரு அரை நிஜார் அவன் இடுப்பை அலங்கரித்தது. அதிலும் நடுநடுவே கிழிந்து ஒட்டுப் போடப் பட்டிருந்தது. இரும்பு உலக்கை போன்ற கைகள். இம்மாதிரி அவன் தோற்ற மளித்தான். அந்த மின்னல் வெளிச்சத்தில் ஒரு முறை அவன் முகத்தில் வறட்டுப் புன்னகை தோன்றி மறைந்தது. "ஏன் சிரிக்கிறாய்!" என்றேன் நான் பயத்துடன். "ஒன்றுமில்லே எஜமான் வள்ளியை நினைத்துக் கொண்டேன். என்னையு மறியாமல் சிரிப்பு வந்து விட்டது" என்றான்.

"வள்ளியா, அவள் யார்!"

"அவளா......ஹாஹ்ஹா" என்று ஒரு முறை பயங்கரமாகச் சிரித்தான். அந்தப் பேய்ச் சிரிப்பு என்னை என்னமோ செய்தது!

"சாமி, நான் உள்ளே வரட்டுங்களா!" என்றான். பேசாமல் போய்க் கதவைத் திறந்தேன். அவன் என் பின்னாலேயே வந்தான். என் எதிரில் உள்ள நாற்காலியில் உட்கார்ந்தான்.

அப்பொழுது நான், "சரி, உன் கதையைச் சொல்" என்றேன். அவன் ஒரு முறை கனைத்துக்கொண்டு கதையை ஆரம்பித்தான்.

அப்பொழுது எனக்கு வயது பதினெட்டு. இளங் கன்று பயமறியாது என்பார்களே அம்மாதிரி நான், ஒருவருக்கும் கட்டுப்படாமல் என் இஷ்டப்படி வளர்ந்து வந்தேன். கொஞ்சம் வயது வந்து, உலகம் தெரிய ஆரம்பித்தவுடன் என் குலத் தொழிலாகிய படகு ஓட்டுவதில் என் கவனத்தைச் செலுத்தினேன். படகு ஓட்டுவதில் எனக்கு அலாதிப் பிரியம். சாப்பாட்டு நேரம் தவிர மற்ற நேரங்களில் படகும் துடுப்புமாகவே காலம் கழித்து வந்தேன். மேலும் வரும்படி வேறு ஏராளம். என்னைக் கண்டித்துத் திருத்த தாய் இல்லாததால் சம்பாதித்த பொருளை மனம் போனபடி செலவழித்தேன். என் தகப்பனுக்கோ வேளா வேளைக்குச் சாப்பாடு கிடைத்தால் போதும். ஆகவால் அவரும் வாய் மூடிக் கொண்டு சும்மா இருந்து விட்டார்.

அந்த வருடம் மிகப் பெரிய மழை பெய்தது. மழை என்றால் எப்பேர்ப்பட்ட மழை தெரியுமா! அப்பப்பா! இப்பொழுது நினைத்தாலும் பயங்கரமாயிருக்கிறது. ஒரு வாரம் விடாமல் பெய்தது. ஆற்றில் இரு கரைகளிலும் வெள்ளம் கரை புரண்டோட ஆரம்பித்தது. அந்த மாதிரி வெள்ளம் அது வரையில் வந்ததே கிடையாது. ஐயோ......அதன் பயனாக எத்தனை ஆல மரங்களும் அரச மரங்களும் பூத்துக் குலுங்கிய மாமரங்களும் வேரோடு சாய்ந்து ஆறோடு போயின! அதுமட்டுமா! சில ஆடுமாடுகள் கூடல்லவா வெள்ளத்துக்குப் பலியாகின! இம்மாதிரி இன்னும் என்னென்னவோ! ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்!

ஒரு வழியாக மழை நின்றது. ஆனால் வெள்ளம் நிற்குமா! ஆற்றில் ஜலம் போய்க் கொண்டிருந்தது! அடித்தது ஐயா, யோகம், எனக்கு அப்பொழுது கிடைத்த வருமானம் மாதிரி பிறகு என்றுமே கிடைத்ததில்லை! மூச்சு விடுவதற்கு நேரம் வேண்டுமே! ஆனால் எவ்வளவு பணம் கிடைத்தும் என்ன பயன்! நான்தான் பெரிய செலவாளி ஆயிற்றே.

இப்படி என் வாழ்க்கை அமைதியாகத்தான் போய்க் கொண்டிருந்தது. இடையில்தான் என் வாழ்க்கையில் வள்ளி குறுக்கிட்டாள்.

ஒருநாள் காலை படகை அவிழ்த்து விட்டு யாராவது வருவார்களா என்று காத்திருந்தேன். அப்பொழுது எதிர்க் கரையிலிருந்து 'சல சல' வென்ற சப்தம் கேட்டது. நிமிர்ந்து நோக்கிய நான் ஒரு நிமிஷம் அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டேன். ஏனெனில், எதிர்க் கரையிலிருந்து ஒரு படகு வந்து கொண்டிருந்தது! என்னைத் தவிர வேறு எவரும் படகே ஓட்ட மாட்டார்கள்! அப்படியிருக்கும்போது இவனுக்கு என்ன தைரியம் வேண்டும் என்று நினைத்துக் கொண்டேன். படகில் யார் யார் இருக்கிறார்கள் என்று பார்வையைச் செலுத்தினேன். ஒரே ஒரு பெண் மாத்திரம் இருந்தாள். படகு பாதி ஆற்றைத்

தாண்டி விட்டது. அந்தச் சமயத்தில் எதிர் பாராத விதமாக ஒன்று நடந்தது. திடீரென்று எங்கிருந்தோ ஒரு சுழல் காற்று அடிக்கத் தொடங்கியது. அவ்வளவுதான்! படகுக்குள் தண்ணீர் ஏறிவிட்டது. பாரம் தாங்காமல் படகு கவிழ்ந்து விட்டது. இவ்வளவும் இரண்டு நிமிஷத்தில் நடைபெற்றது. மறு நிமிஷம் என் மூளை சுறு சுறுப்பாக வேலை செய்தது. ஒரு தாவலில் என் படகில் குதித்தேன். இந்தக் கரங்கள் கடும் வேகத்துடன் படகைச் செலுத்தின ! கண்ணைத் திறந்து, கண்ணை மூடுவதற்குள் அந்த இடத்தை அடைந்தேன் ! மிகச் சிரமப்பட்டு அவளைப் படகில் ஏற்றினேன். படகோட்டியையும் ஏற்றிக் கொண்டேன். கரையை அடைந்தேன். இதற்குள் கடற்கரையில் பெரிய கூட்டமே கூடிவிட்டது. அவர்களுக்கு முதலுதவி செய்ய ஆரம்பித்தேன். நல்ல வேளையாக இருவரும் கண்ணை விழித்தனர். அவள் கண்களைத் திறந்து முதலில் பார்த்தது என்னைத்தான். அந்தப் பார்வையிலேயே என் மனம் அவள் பால் சென்றது. பிறகு எல்லோருமாகச் சேர்ந்து அந்தப் படகோட்டியை வாயில் வந்தபடி வைதனர். பிறகு ஏன் அவன் அந்தப் பக்கம் வரப்போகிறேன் !

அன்று முதல் வள்ளியும் நானும் ஒருவரை யொருவர் நேசிக்கத் தொடங்கினோம். என்னை விட்டு ஒரு நிமிஷம் பிரிந்திருக்க மாட்டாள் வள்ளி ! அதேபோல் அவளை விட்டு என்னால் ஒரு நிமிஷம்கூட இருக்க முடியாது. அவளைப் பற்றி எல்லாம் விசாரித்துக் கொண்டேன். அவளுக்குக் கூடப் பிறந்தவன் ஒருவன் உண்டாம். அவன் சம்பாதிப்பதற்காக மலேயா போய் விட்டானாம். வீட்டில் கண்ணில்லாத பெற்றோர்கள் மாத்திரம் தானாம்.

ஒருநாள் நானும் வள்ளியும் ஆற்றங் கரையில் உட்கார்ந்து கொண்டு அரட்டை அடித்துக் கொண்டிருந்தோம். அப்பொழுது நான் "வள்ளி, சீக்கிரமே நம் கல்யாணத்தை முடித்து விட வேண்டும், என்ன, தெரிந்ததா !" என்றேன்.

"இங்கே பார், என் பெரிய அண்ணனிடம் இருந்து நேத்திக்குக் கடிதம் வந்திருக்குது. எனக்கு ஒரு புருசனை மலாய் நாட்டிலேயே பார்த்து வைச்சிருக்குதாம். அதுக்கு நிறையச் சொத்து இருக்குதாம். நாளைக்கு அண்ணாச்சி வந்து, உனக்கு என்ன இருக்கு என்று கேட்டா நான் என்னத்தைச் சொல்ல !" என்று கேட்டாள். 'சுரீர்' என்று சாட்டையால் அடித்தமாதிரி இருந்தது எனக்கு. ஆனால் என்னை நானே சமாளித்துக் கொண்டேன்.

"வள்ளி பயப்படாதே ! உன் அண்ணாச்சி வருவதற்குள் நான் பணத்தைச் சேர்க்க ஆரம்பிக்கிறேன்" என்றேன்.

"ஆமாம்; நீ சேர்த்துக் கிழிக்கப்போற, நீ பெரிய தாசில் பண்ணுகிற மாதிரியல்ல பேசறே. ஆற்றை உற்றுப் பார், முன்பு இருக்கிற மாதிரி இப்போ இதில் தண்ணீர் இல்லை.

"இன்னும் கொஞ்ச நாள் போனால் ஆற்று ஜலம் முழுதும் வற்றிவிடும். பிறகு உன் பக்கமே ஒருவரும் திரும்பிக் கூடப் பார்க்க மாட்டாங்க. இதை நினைவில் வைத்து கொள்" என்றாள் வள்ளி.

"இதற்கு என்னை என்னத்தைத்தான் பண்ணச் சொல்றே !" என்றேன்.

"பட்டணத்துக்குப் போய் அங்கே சம்பாதித்து, மூட்டை கட்டிக் கொண்டு வா."

"நீ சொல்றது உண்மையா வள்ளி !"

"இல்லாட்டி பொய்யா சொல்கிறேன் !"

"அதுவரை, நீ எனக்காகக் காத்திருப்பாயா !"

"இந்த வள்ளி, இந்த ஏழுமலையைத் தவிர வேறு ஒருவரையும் மனத்தால்கூட நினைக்க மாட்டாள். இது சத்தியம்" என்றாள்.

"வள்ளி, அப்படியானால் இன்னும் பத்தே நாளில் புறப்படப் போறேன், பார்" என்றேன்.

ஆம்; அன்றைக்குப் பத்தாவது நாள். நான் பட்டணத்துக்குப் புறப்பட்டு விட்டேன். அன்று ஜம்பம் அடித்து கொண்ட வள்ளியின் கண்கள் கூடக் கலங்க ஆரம்பித்து விட்டது.

"வள்ளி, அழாதே ! ஒன்பதே மாதம் பொறுத்துக் கொள். அப்புறம் ஒரு நிமிஷம்கூட அங்கே இருக்க மாட்டேன், என் வள்ளியைப் பார்க்க ஓடோடியும் வந்து விடமாட்டேனா !" என்று செல்லமாகக் கன்னத்தைத் தடவினேன்.

வள்ளியிடம் பிரியா விடைபெற்றுக் கொண்டு இந்தப் பாழாய்ப் போன பட்டணம் வந்து சேர்ந்தேன். அதன் பிறகு என் வாழ்வில் இரண்டாவது அத்தியாயம் தொடங்கியது.

இங்கே வேலை கிடைக்காமல் எவ்வளவு கஷ்டப்பட்டிருக்கிறேன் தெரியுமா ! எவ்வளவு கடைகளிலும் வீடுகளிலும் கேட்டிருக்கிறேன் தெரியுமா ! ஒன்றிலாவது ஏதாவது பலன் உண்டா ! கையிலிருந்த பணம் குறைந்து கொண்டே வந்தது. எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. ஒரு பார்க்கில் உட்கார்ந்து கொண்டு யோசித்துக்கொண் டிருந்தேன்.

"என்ன ஐயா, யோசனை பலமாக இருக்கிறதே" என்று கேட்டுக் கொண்டே வந்தான், என் பட்டணத்துப் புதிய நண்பன் வீராசாமி.

அவனிடம் விஷயத்தைக் கூறினேன்.

"பூ, இதற்காகவா, கஷ்டப்படறே ! நான் சொல்கிறேன் கேளு, எனக்குத் தெரிந்த ஒருத்தர் இருக்கார், அவர் கிட்டே நிறைய ரிக்ஷா வண்டிகள் இருக்கு. ஒரு வண்டிக்கு மாதம் இவ்வளவு என்று பேசிக் கொள். கஷ்டப்பட்டு உழை. வாடகை மாத்திரம் சரியாகக் கொடுத்து விடு" என்று சொன்னான்.

ஒருதடவை துள்ளிக் குதித்தேன். "அண்ணாச்சி, உன் உதவியை மறக்கவே மாட்டேன்" என்றேன் நாத் தழுதழுக்க. எனக்கு அந்த யோசனை ரொம்பப் பிடித்து விட்டது. அதற்கு அடுத்த நாளி




"என்ன சார், இது ! இந்த ஸ்பூனால் இட்டிலியை உடைக்க முடியவில்லையே !"

"அப்படியா! இப்பொழுது வருகிற ஸ்பூன்களெல்லாம் ரொம்ப மோசமாப் பண்ணி அனுப்புகிறான் சார் ! டேய், வேறு நல்ல ஸ்பூன் ஒன்று கொண்டு வந்து கொடுடா !"



"ரேடியோவைக் கண்டு பிடித்தவனுக்கு என் மனமார்ந்த வந்தனம் சார்! இந்த விசையை இப்படித் திருகியவுடன் பாட்டு வந்துவிடுகிறது!"

"எனக்கு அதை விடச் சந்தோஷம், விசையை அப்படித் திருகியவுடன் பாட்டை நிறுத்த முடிகிறதே என்று!"

---

லிருந்து நான் வேலையில் அமர்ந்து விட்டேன். ஆம்; அன்று முதல் நான் ஒரு ரிக்ஷாக்காரன்.

நான் மாடுபோல் உழைக்க ஆரம்பித்தேன். என் உடலை ஓர் உடலாக மதிக்கவில்லை. "இந்த வள்ளி இந்த ஏழுமலையைத் தவிர வேறு ஒருவனையும் நினைக்க மாட்டாள்" என்ற வள்ளியின் வாக்கு எனக்குப் போதிய பலத்தை அளித்தது.

நான் சென்னைக்கு வந்து ஐந்து மாதங்கள் ஆயின. ஒருநாள் காலை எழும்பூர் ரயில்வே ஸ்டேஷனில் காத்திருந்தேன். தெற்கே யிருந்து வரும் வண்டி வந்தது. யாராவது வர மாட்டார்களா என்று வண்டியை இழுத்துக் கொண்டு ஓடினேன். அப்பொழுது இருவர் படிகளிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தனர். அவர்களில் மிக இள வயதுடையவள் அவள் பக்கத்தில் வருபவனைக் கண்டு ஒருகணம் திகைத்து விட்டேன். அவளை யார் என்று நினைத்தீர்கள். 'அவள்தான் என் வள்ளி. ஒரு நிமிஷம் எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. என்னை இந்த நிலையில் பார்த்தால் என்ன நினைத்துக் கொள்வாளோ என்று பயந்து தலையைக் குனிந்தவண்ணம் வண்டியை இழுத்துக் கொண்டு போய் விட்டேன். நல்ல வேளையாக வள்ளி என்னைப் பார்க்க வில்லை. ஒதுப்புறமாக வண்டியைப் போட்டு விட்டு உட்கார்ந்த எனக்கு ஒன்றுமே ஓடவில்லை. என்ன அநியாயம்! என்னை விட்டு வேறே ஒருவனையும் நினைக்க மாட்டேன் என்றாளே! வஞ்சகி, துரோகி, மோசக்காரி என்று பலவாறாகச் சபித்தேன். ஓகோ! அவன் அந்த மலாய் நாட்டவனாகத்தான் இருக்க வேண்டும்.

அன்று இரவு மணி எட்டு இருக்கும். மனது ஒரு நிலையில்லாமல் இருந்தது. வண்டியை மெதுவாகத் தள்ளிக் கொண்டு கடற்கரை பக்கம் வந்தேன். அந்த சமயத்தில் "வள்ளி, இங்கேயே இரு, போய் ஒரு நெருப்புப் பெட்டி வாங்கிக் கொண்டு வருகிறேன்" என்ற குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தேன்; என் வள்ளி அங்கே நின்று கொண்டிருந்தாள்! அவளுடன் பேசலாமா வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருந்தபோது எதிர்பாராத விதமாக ஒன்று நடந்தது. திடீரென்று நாலைந்து பேர் சகல் பொந்திலிருந்து வருவதுபோல் எங்கிருந்தோ வந்தார்கள். வள்ளியின் காலையும் கையையும் பிடித்தார்கள். வாயில் துணி அடைத்தார்கள். அவள் கழுத்திலிருந்த நகைகளெல்லாம் கழற்றினார்கள். அப்படியே அவளைத் தூக்கிக் கொண்டு போனார்கள். இரண்டு பேர் காலையும் கையையும் பிடித்து ஒரு தடவை ஆட்டித் தூக்கி எறிந்தார்கள். மறு நிமிஷம் வள்ளி சமுத்ர ஜலத்தில் 'தொப்' என்று விழுந்தாள்!

"வள்ளி, வள்ளி" என்று கத்திக் கொண்டே அவன் வள்ளியைக் காணாது பதறிப் போனான். எங்கெங்கோ தேடினான். ஒன்றுமே பிரயோஜனப் படவில்லை. எனக்கு உள்ளூற சந்தோஷம் தாங்கவில்லை. ஆம், நான் மட்டும் மனது வைத்திருந்தால் வள்ளியைக் காப்பாற்றி யிருப்பேன். ஆனால் அவள் எனக்குச் செய்த துரோகத்துக்கு, "வேண்டும், நன்றாக வேண்டும்" என்று எண்ணி சும்மா இருந்து விட்டேன்.

மறு நாள் காலை என் நண்பன் முத்துசாமி என்னிடம் ஓடோடியும் வந்தான். "ஏழுமலை சங்கதி தெரியுமா!" என்று கேட்டான்.

"என்ன, என்ன விஷயம்!" என்று கேட்டேன்.

"உனக்குத் தெரியாதா! கடற்கரையில் போய்ப் பார்! ஒரு பெண்ணு, பாவம், தண்ணிரிலே விழுந்து உயிரை விட்டுட்டா போலிருக்கிறது. அவள் மேலே விழுந்து அவள் அண்ணன்காரன் அழுது புலம்புகிறான்."

"என்ன அவள் அண்ணன்காரனா!"

"ஆமாம்."

மறுநிமிஷம் தலைகால் தெரியாமல் ஓடினேன். ஆம், அவன் கூறியது போல் என் வள்ளியைச் சுற்றி ஒரு கூட்டம் கூடியிருந்தது. எழும்பூரில் பார்த்த வாலிபன் கதறிக் கொண்டிருந்தான். "அநியாயமாக இவள் பேச்சைக் கேட்டு ஓடி வந்தேன். யாரோ ஏழுமலையாம், இங்கே யிருக்கிறான் என்று சொன்னாள். நான் எவ்வளவோ சொன்னேன். கேட்கவில்லை. பிடிவாதமாக வந்தாள். வந்த இடத்தில், உன் கதி இப்படியா ஆக வேண்டும்" என்று கதறிக் கொண்டிருந்தான் அவளுடைய அண்ணன்.

ஆயிரம் தேள் என்னைக் கொட்டிய மாதிரியிருந்தது. நான் மோசம் போனேன். வள்ளி எவ்வளவு தூய்மையானவள்! அவளைத் தப்பாக நினைத்து விட்டோமே. பூமி பிளந்து என்னை விழுங்கிவிட்ட மாதிரி தோன்றியது. ஆனால் அந்தச் சமயத்தில் என்னை ஏழுமலை என்று சொல்லிக் கொள்ள மனம் வர வில்லை! நா எழவில்லை.

அன்றிரவே நான் வள்ளி விழுந்த அதேயிடத்தில் சமுத்திர ராஜனிடம் சரணடைந்தேன்.

* * *

"ஐயோ, அப்படியானால் நீ என்ன பிசாசா!" என்று பயந்துகொண்டே கேட்டேன்.

"ஆமாம், நான் பிசாசுதான்" என்று ஹா என்று சிரித்துக் கொண்டே ஓடிவிட்டான்.

"நீ பிசாசா, ஐயோ" என்று அலறினேன்.

நான் கண்ணைத் திறந்தபோது என் அக்கா வாணி எதிரே நின்று கொண்டிருந்தாள். "என்ன தம்பி உட்கார்ந்தே தூங்கி வழியறயே, படுத்துத் தூங்கு போ!" என்றாள்.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras

REGD. NO. M. 4392

*Registered as a newspaper in Ceylon*

# "இது மெய்...

## ...நீங்களும் லக்ஸ் டாய்லட் சோப் உபயோகித்து அதிக அழகைப் பெறலாம்" என்று கூறுகிறார் கிருஷ்ண குமாரி



கிருஷ்ணகுமாரி கூறு
வதாவது:—"என் சரு
மத்திற்கு அற்புதமாறு
தலை அளித்திருக்கிறது
லக்ஸ் டாய்லட் சோப்
பின் மிருதுவான நுரை.
ஒவ்வொருநாளும் உப
யோகிப்பதால் இந்த பரி
மளமுள்ள சுத்தமான,
வெண்மையான டாய்லட்
சோப் என் சருமத்தை
பட்டுபோல் வழவழப்
பாய் நேர்த்தியாய்
இருக்கச் செய்கிறது."

## லக்ஸ் டாய்லட் சோப்




சினிமா நட்சத்திரங்களின்
அழகு தரும் சோப்

LTS. 381-X30 TM